# கல்கி

அடுத்த இதழ்
சித்திரைச் சிறப்பிதழ்

அட்டகாசமான, வண்ணமயமான



# இலவச

இணைப்புடன்!

(சப்ஜெக்ட் மட்டும் சஸ்பென்ஸ்!)

●●●



பாரதி பாலன்

எழுதும்

# செவ்வந்தி

நெஞ்சை வருடும் கிராமியக்
காதல் தொடர்கதை!



●●●

அறிவுக்கு வேலை தரும் புதிய
போட்டி – பம்பர் பரிசுடன்!

● வாவ்! ● சூப்பர்! ● தூள்!

கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkiweekly.com ஈ மெயில்: kalki@md2.vsnl.net.in

# உதாரணம் காட்ட ஓர் அரசியல்வாதி!

தேனி பக்கத்தில் ஓர் அதிசயம் நிகழ்ந்திருக்கிறது. நிகழ்த்திக் காட்டியிருப்பவர் ஓர் அரசியல்வாதி என்பதுதான் அதிசயத்திலும் அதிசயம்!

சாதாரணமாக மக்கள்தான் அரசியல்வாதிகளின் வீடுகளுக்கு நடையாய் நடந்து இன்னின்ன காரியங்களைச் செய்து தாருங்கள் என்று மனு கொடுப்பார்கள். இங்கே நிலைமை தலைகீழாக! ஓர் அரசியல்வாதி மக்களிடம் நடையாய் நடந்து அவர்களை ஒன்று திரட்டி அந்த அதிசயத்தைச் சாதித்துக் காட்டியிருக்கிறார். அவர் பெயர் கே.எஸ்.எம். ராமச்சந்திரன். தேனி யூனியன் சேர்மன். த.மா.கா.காரர்!

அதிசயம் இதுதான். கடந்த எத்தனையோ ஆண்டுகளாக நிரம்பாமலிருந்த மீனாட்சியம்மன் கண்மாய், கடந்த மூன்றாண்டுகளாக நிரம்பி வழிகிறது. சுற்றியுள்ள எட்டு கிராமங்களிலும் கனஜோராக விவசாயம் நடக்கிறது. இதன் காரணமாக வேலை தேடி வெளியூர்களுக்குக் குடி பெயர்ந்த விவசாயக் கூலிகளெல்லாம் இப்போது சொந்த கிராமங்களுக்கே திரும்பி வந்து விட்டனர்!

இதை எப்படி நிகழ்த்திக் காட்டினார் ராமச்சந்திரன்? அவரிடமே கேட்டோம்.

"இந்த மீனாட்சியம்மன் கண்மாயில், மேற்குத் தொடர்ச்சி மலைச் சரிவிலிருந்துதான் மழைக் காலங்களில் நீர் வந்து நிரம்பும். இரண்டு பக்கங்களிலிருந்து வரும். காடுகள் மெள்ள மெள்ள அழிந்து கொண்டே வருவதால் ஒருபுறமிருந்து வர வேண்டிய நீர் வரத்து சுத்தமாகவே நின்று போய் விட்டது. மறுபுறமிருந்துதான் வர வேண்டும். அதிலும் ஒரு சிக்கல்!

• ராமச்சந்திரன்: அதிசயம் நிகழ்த்தியவர்

"குஜிலியம் ஆற்றிலிருந்து பிரிந்து வருகிற கால்வாய் மூலமாகத்தான் கண்மாய்க்கு நீர்

• கால்வாய்: ஆழப்படுத்துவதற்கு முன்...



வர வேண்டும். எங்கள் கண்மாய் கடைக்கோடி. இதற்கு முன்னால் மூன்று கண்மாய்கள். அவையெல்லாம் நிரம்பிய பிறகுதான் எங்கள் கண்மாய்க்குத் தண்ணீர் வர வேண்டும் என்பதால் பல சமயங்களில் எங்களுக்குத் தண்ணீரே வராது.

"பொதுவாக இங்கே பதினைந்து நாட்களுக்குத்தான் நல்ல மழை பெய்யும். அந்தப் பதினைந்து நாட்களில், இரண்டு நாட்களுக்குத்தான் எங்கள் கண்மாய்க்குத் தண்ணீர் வர, மற்றவர்கள் – அதாவது முன்னதாக உள்ள மூன்று கண்மாய்களின் ஆயக்கட்டுக்காரர்கள் அனுமதிப்பார்கள்.

• கால்வாய்: ஆழப்படுத்திய பின்....



• மீனாட்சியம்மன் கண்மாய்: இப்போது நிரம்பி வழிகிறது...

"இந்த நிலையில்தான், எங்களுக்குத் தண்ணீர் திருப்பி விடப்படுகிற அந்த இரண்டு நாட்களிலும் நான் எங்கள் பகுதி விவசாயிகளை அழைத்துக் கொண்டு செல்வேன். குறிலியம் ஆற்றில் கால்வாய் பிரிகிற இடத்தில் நிறைய மணல் மூட்டைகளைப் போட்டு ஆற்றிலிருந்து அதிக நீரைக் கால்வாய்க்குத் திருப்பி விடுவோம். கால்வாய் மராமத்தின்றி மேடாகிக் கிடந்ததால் கண்மாய் நிரம்பாத நிலை.

"இந்த நிலையில் 92-93 அ.தி.மு.க. ஆட்சியில் கால்வாயை ஆழப்படுத்த மூன்று லட்ச ரூபாய்க்கு டெண்டர் விட்டார்கள். ஆனாலும் வேலை நடக்கவில்லை. காண்ட்ராக்டரைத் தேடிப் பிடித்து விசாரித்தபோது, 'அரசியல்வாதிகளுக்கு, அதிகாரிகளுக்கெல்லாம் கொடுத்தது' போக மூன்று லட்சத்தில் 35,000 ரூபாய்தான் மீதியிருக்கு. இதையும் கால்வாய் வெட்ட நான் செலவழிச்சுட்டா, என் பிள்ளை குட்டிகளோட நான் தூக்குலதான் தொங்கணும்'னு சொல்லிவிட்டார்.

"சரி, இனியும் அரசை நம்பிப் பயனில்லை என்று நான் கண்மாய்த் தண்ணீரால் பயன்பெறுகிற விவசாயிகளை அழைத்துப் பேசினேன். நாமே ஏன் கால்வாயை ஆழப்படுத்தக் கூடாது என்று கேட்டபோது, அவர்களும் ஆர்வத்தோடு சம்மதித்தார்கள். எங்களுக்கு முன்னால் உள்ள கண்மாய்களால் பயன்பெறுகிற விவசாயிகளையும் அழைத்துப் பேசினோம். அனைவருமே நிதியுதவி செய்தார்கள். மொத்தம் பத்து லட்ச ரூபாய் சேர்ந்தது.

"இந்தச் சமயத்தில் இன்றைய அரசின் 'நமக்கு நாமே' திட்டத்தின் மூலம் ஒன்பது லட்ச ரூபாய் கிடைத்தது. இதற்குத் தேனி மாவட்டக் கலெக்டர் சத்தியகோபாலும், உள்ளாட்சித் துறை அமைச்சர் கோ.சி. மணியும் மிகவும் உதவியா இருந்தாங்க.

"சரி, கால்வாயை ஆழப்படுத்த காண்ட்ராக்ட் விட்டா சுரண்டலாயிடும் என்பது தெரிந்ததால் இந்தக் கண்மாய்களின் ஆயக்கட்டுக்காரர்களிடமே பொறுப்பை ஒப்படைத்தோம். அப்புறம் என்ன! வேலைகள் ஜரூராக நடந்து இப்போது கண்மாய்கள் நிரம்பி வழிகின்றன!" என்றார் ராமச்சந்திரன்.

இப்போது இந்தப் பகுதியில் துணை மின் நிலையம் ஒன்று உருவாவதிலும் பெரும்பங்கு வகித்திருக்கிறார் ராமச்சந்திரன். எல்லா அரசியல்வாதிகளும் இப்படிச் செயல்பட ஆரம்பித்து விட்டால், நாடே சொர்க்கமாகி விடாதா!

**— க. வேணுகோபால்**

படங்கள் : **லலிதா**

# புயலாக வரும் புதுக்குரல்!

வெளியாகியிருக்கிற 'ஜீன்ஸ்' கேஸட்டில் அத்தனை பாடல்களிலும் துருத்திக் கொண்டு, கிளாஸிகல் கம்பீரத்துடன் கேட்பவர்களைக் கிறுகிறுக்க வைக்கிற ஜாங்கிரி குரல் நித்யஸ்ரீயுடையது. 'கண்ணோடு காண்பதெல்லாம், தலைவாாாா'வைப் பாடியிருப்பவர் இவர்தான்.

நித்யஸ்ரீயின் அப்பா சைடு பாட்டி டி.கே. பட்டம்மாள் என்பதும் அம்மா சைடும் சங்கீதப் பரம்பரை (பாலக்காடு மணி அய்யர் இவருடைய தாய் வழி தாத்தா) என்பதும் அவருக்கு மிகப் பெரிய பலம். புகுந்த வீட்டில், இவரது மாமியாரும் ஒரு பாடகி. கணவர் மகாதேவன் இஞ்சினியர் அபாரமான இசை ஆர்வலராக இருக்கிறார்.

''இந்தச் சூழ்நிலை எல்லோருக்கும் அமைஞ்சுடாது. ஐ'ம் லக்கி!'' என்கிறார் சந்தோஷக் கொப்பளிப்புடன்.

கேஸட் வெளியாகி ஒரு வாரம்தான் ஆகியிருந்த போதும், கேட்டவர்களெல்லாம் பாராட்டுவது படு குஷியாயிருக்கிறது என்றார்.

ஒரு கொளுத்தும் மத்தியான வெயில் வேளையில் மயிலாப்பூரிலுள்ள நித்யஸ்ரீயின் வீட்டுக்குச் சென்றபோது, ''எனக்கு சினிமாவில் பாடணும்னு ஆசையெல்லாம் இருந்ததே இல்லை. அப்படி ஒரு ஐடியாகூட இல்லை! கச்சேரி மட்டும்தான் என் வாழ்க்கைன்னு இருந்தேன். திடீர்னு ஒருநாள் ரகுமான் போன் பண்ணிக் கூப்பிட்ட போதுகூட, பாடறதுக்குன்னெல்லாம் சொல்லவே இல்லை. சும்மா பார்க்கணும்னுதான் கூப்பிட்டார். என் ஹஸ்பெண்டுக்கு போன் பண்ணி, ஆபீஸ்லேருந்து நேரா அவர் ஸ்டுடியோவுக்கு வரச் சொல்லிட்டு நான் கிளம்பிப் போனேன்...''

போனதும் நாலு வார்த்தை பேசிவிட்டு, சட்டென்று பாடல் எழுதிய தாளைக் கையில் கொடுத்து ட்யூனைச் சொல்லி, 'பாடுங்கள்!' என்றாராம் ரகுமான்.

''எனக்கு இதெல்லாம் பழக்கமில்லை. அனுபவமும் இல்லை. என் மனோதர்மப்படி கச்சேரிகளில் பாடறது தான் வழக்கம்னு சொன்னேன். உடனே அவர், 'எனக்கு அதுதான் வேணும். சினிமாவுக்குன்னு நீங்க ஒண்ணும் மாத்திக்க வேணாம். உங்க சுபாவப்படி பாடுங்க'ன்னு சொல்லிட்டார்...''

அந்த முற்றிலும் எதிர்பாராத அனுபவத்தைப் பற்றி விவரிக்கும்போது நித்யஸ்ரீயின் ஒரு மைல் நீள விழிகள், மேலும் விரிகின்றன.

''ரெக்கார்டிங் தியேட்டரில் ஷங்கர் இருந்தார். வைரமுத்து இருந்தார். ரகுமான் என்னைப் பாடச் சொன்னதும் நான் ஸ்கிரிப்டை வாங்கிப் பார்த்தேன். ரொம்ப ரொம்ப மோசமான வரிகள், கசமுசா பாட்டெல்லாம் பாடறதில்லைன்னு எனக்குள்ள தீர்மானம். என் கணவரும் அதையேதான் சொன்னார். ஆனா, வைரமுத்துவோட அந்தப் பாட்டு வரிகள் தரமாகவும் சுவாரஸ்யமாகவும் இருந்தது. பல்லவியும் ஒரு சரணமும் மட்டும்தான் அப்போ எழுதியிருந்தார். நான் பாடி முடிச்சதும் அடுத்த சரணத்தை அங்கேயே எழுதிக் கொடுத்துட்டார். அதையும் பாடி, ரெக்கார்டிங் முடிய ராத்திரி பத்தரை மணி ஆயிடுச்சு!''

'போனவளைக் காணவில்லையே' என்று வீட்டார் தவித்துக் கொண்டிருந்ததையும் பதினோரு மணிக்குமேல் திரும்பி வந்து, நடந்ததைச் சொல்லி, பாடிக் காட்டியதையும் ஆர்வம் பொங்க விவரிக்கிறார்.

இந்தப் பாடலில் ஆரம்பத்தில் வரும்

• கணவருடன்





# 'கண்ணோடு காண்பதெல்லாம்...'

ஜதியும் (ஜணக்கு ஜணக்கு...) இறுதியில் வருகிற சுவரக் கோவைகளும் நித்யஸ்ரீயின் கற்பனையில் உதித்தவை.

''அதில்கூட ரகுமான் என்னைக் கட்டுப்படுத்த வேயில்லை. என் விருப் பப்படி சில ஸ்வ ரங்களையும் ஜதி களையும் பாடச் சொல்லி, அதி லிருந்தே பாடலுக்குத் தேவையானவற்றை எடுத்துக் கொண்டார். சொல்லப் போனால், கேஸட்டில் கேட்கும் வரை, பாட்டு சுமாராக வந்திருக் கும்னுதான் நினைச்சேன். நான் எதிர்பார்த்ததைவிடப் பிரமாதமா அமைஞ்சு போச்சு!''

'கண்ணோடு காண்பதெல்லாம்' பாடல், ஜீன்ஸ் படத்தின் க்ளை மாக்ஸில் இடம் பெறும் முக்கியமான பாடல். ரெக்கார்டிங்கின்போது பக்கவாத்தியங்கள் எது வும் இல்லாமல்தான் பாடிய தாகச் சொன்னார் நித்யஸ்ரீ. ஆனால் ஹரித் துவாரமங்கலம் பழனி வேலின் தவிலுடன் கேஸட் டில் கேட்கும்போதுதான் அசாத்தியமான கம்பீரத் துடன் அது அமைந்திருப் பதை உணர்ந்தேன் என் றார்.

''நான் பாடி முடிச்ச போதே வைரமுத்து ரொம்ப பிரமாதமா பாடினேன்னு பாராட்டினார். அவங்க எல்லாருமே ரொம்ப ஃப்ரெண்ட்லியா பழகி னாங்க. ஜாலியாத்தான் பாடினேன். ஆனா முதல் பாட்டே இத் தனை பிரமாதமா அமைஞ்சு பேர் கொடுக்கும்னு எதிர் பார்க்கலை'' என்று சொல்லும் நித்யஸ்ரீ, தொடர்ந்து சினி மாவில் பாடுவது பற்றித் தமக்கு ஆட்சேபணை ஏதும் இல்லை என்று சொன் னார்.

''இன்

•'ஜீன்ஸ்' - ஐஸ்வர்யாராய்

ஹங்கேரி நாட்டில் டெப்ரெகன் நகரத்தில் உள்ள ஓர் உணவு விடுதியில் ஒவ்வொரு மேஜை மீதும் ஒரு கடிகாரம் வைக்கப்பட்டிருக்கிறது. எதற்கு? ஒருவர் சிற்றுண்டிக்கு ஆர்டர் கொடுத்துப் பத்து நிமிடங்களுக்குள் சிற்றுண்டி வந்து சேராவிட்டால், அது அவருக்கு இலவசம்!

— 'சுவையான செய்திகள்' என்ற நூலிலிருந்து மலர் சூர்யா



னும் அடுத்த ஆஃபர் ஒண்ணும் வரலை. பாட்டு ஆபாசமா, விரசமா இல்லாத பட்சத்துல பாடறது தப்பில்லை. என் பாட்டியே எத்தனை சினிமாப் பாட்டு பாடியிருக்காங்க."

"அது சரி. பாட்டி, உங்க பாட்டைக் கேட்டாங்களா?"

"ஓ யெஸ். நல்லா பாடியிருக்கேன்னு பாராட்டினாங்க."

சொல்லும்போது, முகத்தில் லட்ச ரூபாய்ப் பெருமிதம்!

"எம்.எஸ். அம்மாவாகட்டும், எம்.எல்.வி. யாகட்டும், என் பாட்டி பட்டம்மாவாகட்டும், ஜி.என்.பி. தொடங்கி, இன்னிக்கு உன்னி கிருஷ்ணன் வரைக்கும் எந்த நல்ல கர்நாடக இசைக் கலைஞரும் சினிமாவைப் புறக்கணிக்கலை. இப்ப கொஞ்ச நாளா நிறையப் பேர் சினிமாவில் பாடறாங்கன்னா, அதுக்குக் காரணம் ஜனங்க, கிளாஸிகல் வாய்ஸை ரொம்ப ரசிக்கிறாங்க. இது ஆரோக்கியமான மாற்றம்தானே?"

நித்யஸ்ரீ முறைப்படி இசை பயின்றது அவரது தாய் லலிதா சிவகுமாரிடமும் பாட்டி டி.கே. பட்டம்மாளிடமும்தான். 87ல் முதல் கச்சேரி. இன்றைக்கு இவர் கச்சேரி செய்யாத தினங்கள் மிகக் குறைவு!

"என் பாட்டி, எனக்கு அமைஞ்சது ஒரு அதிர்ஷ்டம். சங்கீதத்தைத் தவிரவும் அவங்ககிட்ட கத்துக்க வேண்டிய விஷயம் எக்கச் சக்கம். முக்கியமா அவங்களோட சிம்ப்ளிஸிடி. மிக உயர்ந்த இடத்துக்குப் போனப்புறமும், துளிக் கூட கர்வமே இல்லாம, இன்னும் தன்னை ஒரு ஸ்டூடன்ட்டுன்னே நினைச்சிட்டிருக்காங்க. வயசு வித்தியாசம் பார்க்காமல், யார்கிட்டே எதெது எல்லாம் நல்லது இருக்கோ, அதையெல்லாம் கத்துக்கணும்ங்கறது பாட்டியோட கருத்து.

"அடுத்தது, அவங்களோட சின்ஸியரிடி. இந்த வருஷம் பாட்டிக்கு எண்பது வயசு ஆரம்பிக்குது. இப்பவும் யாராவது கச்சேரிக்குக் கூப்பிட்டாங்கன்னா, பத்து நாள் முன்னால தொடங்கி, ஒரு ஆரம்ப கால மாணவன் மாதிரி தினமும் பாடிப் பாடி சாதகம் பண்ணிப் பார்ப்பாங்க. அகடமியில் பாடறதானாலும் சரி, ஏதாவது சின்ன சபா, கோவில் கச்சேரியானாலும் சரி.... ஒரே மாதிரி சிரத்தைதான்! அவ்வளோ ஏன்? யாராவது வீட்டுக்கு வந்து, 'ஒரு பாட்டுப் பாடுங்களேன்'னு கேட்டாக்கூட, அதே கச்சேரி சிரத்தையோடு கண்ணை மூடிட்டு, கீர்த்தனையோடவே லயிச்சுப் போய்த்தான் பாடுவாங்க..."

பாட்டியைப் பற்றிப் பேச ஆரம்பித்தால், பேத்தி அதிலேயே லயித்துப் போய் விடுகிறார்.

"இசை தவிர உங்களுக்கு வேறு எதில் விருப்பம்?"

"ஐயோ, இதுக்கே நேரம் போதலையே!" என்று சிரிக்கும் நித்யஸ்ரீ, குறிப்பிட்ட விருப்பம் என்று சொல்லத் தெரியவில்லையென்றாலும் எல்லா பெண்களும் எதையெதையெல்லாம் விரும்புவார்களோ அதெல்லாம் தனக்கும் பிடிக்கும் என்றார், படு ஜாக்கிரதையாக.

"சமையலறையில் புகுந்து விஷப் பரீட்சைகள் செய்து பார்ப்பதில் கொஞ்சம் கூடுதல் ஆர்வம் உண்டு" என்றார் அருகிலிருந்த நித்யஸ்ரீயின் நாத்தனார்!

சந்திப்பு: **ஔரங்கசீப்**
அட்டை வண்ணப்படம், படங்கள்: **யோகா**

# புற்றுநோயா!
# இனி கவலையே வேண்டாம்!
# தெய்வீக மூலிகை மருத்துவம்!

## காரணம்

புற்று நோய் என்றால் தீர்க்க முடியாத ஒரு நோய் என்ற கருத்து இன்று எல்லா தரப்பு ,மக்களின் மனதிலும் நன்றாக பதிந்து விட்டது புற்று நோய் என்றால் என்ன என்ற கேள்விக்குரிய பதிலை முழுமையாக தெரிந்துக் கொண்டால்இத்தகைய பயம் நம்மை விட்டு அகன்று விடும்.

நாம் உண்ணும் உணவு சக்தியாக மாற்றப்பட்ட பின் எஞ்சிய கழிவுகளை கழிவு நீக்க உறுப்புகளின் (கிட்னி, தோல், மலக்குடல் போன்றன) மூலம் வெளியேற்றி குறைக்கின்றது. அப்போது உடல் ஆரோக்கியமாகவே இருக்கும். நாம் உண்ணும் உணவுகள் இயற்கையானதாக இருந்தால் நமது உடல் அதனை எளிதில் ஜீரணித்து விடும். மாறாக அதிகமாக செயற்கையான உணவுகளாக உள்ளதால் அந்த உணவுகளே நமது உடலையே ஜீரணித்து விடுகின்றன. சமைத்த உணவுகள், ரசாயனம் கலந்து சாப்ட் டிரிங்ஸ், இனிப்புகள், காப்பி, தேனீர், மாமிச உணவுகள், பல நோய்களுக்காக அடிக்கடி இரசாயன மாத்திரைகளை உபயோகித்தல், புகையிலை, மதுவகைகள் புகைத்தல் போன்றன நாம் எடுத்துக் கொள்ளும்போது இதனால் நமது ஜீரண உறுப்புகள், கழிவு நீக்க உறுப்புகள் போன்றன விரைவில் பலஹீனம் அடைந்து அதன் செயல் திறன் குறையும்போது அதிலிருந்து தயாராகும் கழிவுகள் உடலில் தங்கி குவியத் தொடங்குகின்றன. இதுவே நாளடைவில் ரியாக்ஷன் காரணமாக இந்த கழிவுகள் விஷமாக மாறிவிடுகின்றன.

இந்த விஷமானது உடல் முழுவதும் பரவி விடாமல் உடலின் ஏதோ ஒரு பகுதியில் தேக்கி வைக்கப்படுகின்றது. இதுவே கட்டியாக நாளடைவில் மாறி புற்று நோய் எனப்படுகின்றது. இது உடலின் தேக்கி வைக்கப்படும் இடத்தைப் பொறுத்து **இரப்பைப் புற்று, நுரையீரல் புற்று, வாய்ப்புற்று, மார்பகப் புற்று, தலைப்புற்று, லிங்கப்புற்று, கர்ப்பை புற்று, ரத்தப் புற்று** என பெயர் வைக்கப்படுகின்றது.

இதற்கான காரணங்களும், சிகிச்சைகளும் ஒன்றேதான். அதை தெரிந்துக் கொண்டால் குணப்படுத்துவது மிகவும் எளிது. சரியான இயற்கை உணவுகளை உண்பதன் மூலம், வராமல் தடுத்துக் கொள்ளலாம். வந்த நோய்களை சரியான தெய்வீக மூலிகைகளை கொண்டு குணப்படுத்திக் கொள்ளலாம்.

## உணவு

இந்நோயாளிகள் தினம் ஏதேனும் இரண்டு வேளை வேக வைக்காத சமைக்காத, பச்சையாக சாப்பிடும் இயற்கை உணவுகளான பழங்கள், காய்கள், பழநீர், சாலட் போன்றவைகளாக உட்கொள்ள வேண்டும். மற்ற ஒரு நேரம் சாதாரண சைவ உணவு உட்கொள்ள வேண்டும். ஒவ்வொரு வேளை உணவும் இவர்கள் 1/2 வயிறு அல்லது 3/4 வயிறு ஆகாரமாகவே உட்கொள்ள வேண்டும். மேலும் இரண்டு நாட்களுக்கு ஒரு முறை பகல் ஒரு வேளை உணவை முற்றிலும் தவிர்க்கவும். இயற்கை உணவுகளில் பப்பாளி, திராட்சை, பேரிட்சை, கொய்யா, மாதுளை, அன்னாசி, நாவல், ஆப்பிள், ஆரஞ்சு, கேரட், வெள்ளரி, வெள்ளரி தக்காளி, தேங்காய், இளநீர், கரும்பு சாறு போன்றன உபயோகிக்கலாம். சமைத்த உணவுகளில் இட்லி, இடியாப்பம், பொங்கல், சாதம், கோதுமை, கஞ்சி, பார்லி கஞ்சி, ராகி கஞ்சி போன்றன உபயோகிக்கலாம். முடிந்தால் இந்நோயாளிகள் தினம் 15 நிமிட நேரம் எளிய உடற்பயிற்சிகள் செய்யவும் நடத்தல், குனிந்து நிமிர்தல், உட்கார்ந்து எழுதல், வெயிலில் இருத்தல் கை, கால், விரல்களை நீட்டி மடக்குதல், மூச்சுப் பயிற்சி போன்றன செய்யலாம்.

## தெய்வீக மூலிகை மருத்துவம்

இம் மூலிகைகளில் இருந்து ஏதேனும் ஒன்றை தினம் உபயோகித்து வந்தால் எவ்வகையான நோய்களிலிருந்தும் விடுபடலாம். இது அனுபவத்தில் தான் தெரியும். இவைகள் யாவும் சர்வரோக நிவாரணிகளே. அதன் பொருட்டே இவைகளை மட்டும் தலவிருட்சமாக கருதி ஆலயங்களில் பயன்படுத்துகின்றனர். அவைகளாவன. அம்மனுக்குரிய வேப்பிலை, சிவனுக்குரிய வில்வம், விஷ்ணுக்குரிய துளசி, பிரம்மாவுக்குரிய அத்தி, விநாயகருக்குரிய, அருகு. மற்றும் தும்பை, அரசன், மாவிலை, கீழா நெல்லி போன்றவைகளை பறித்து வந்து வெயிலில் உலர்த்தி பொடி செய்து பின் சம அளவில் ஒன்றாக கலந்து வைத்துக் கொள்ளவும் பின் இதிலிருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு முன் தினமும் காலை, இரவு ஆகிய இரண்டு வேளையும் உட்கொள்ளவும். இவைகள் யாவும் உடலில் உள்ள விஷத்தன்மையை முறிக்கும், எத்தகைய கிருமிகளையும் அழித்துவிடும், உற்பத்தி ஆவதையும் தடுக்கும். நரம்புகள், எலும்புகள் பலப்படும். நோய் எதிர்ப்பு சக்தி கூடும். ரத்தம் சுத்தம் ஆகும். கழிவு நீக்க உறுப்புகளின் செயல்திறனை அதிகரிக்கவும் செய்யும்.

*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

**தலைமை முகவரி** : Dr.C.K.M.**குருபரன்** & Dr.C.K.M.**சபாபதி**, S/o.Dr.C.K. **மாணிக்கவாசகம்**

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ 04179-20469, 22769.

**சென்னை கிளை** : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 | ✆ 6424285, 6427638

**Singapore Enquiry : Mrs. Renuka, Blk 101, #04, -176, Jurong East Street-13, Singapore - 600 101. ✆ : 0065 - 5621218**

**குறிப்பு:** சென்னை, வேலூர், காஞ்சீபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர் ஓசூர், கிருஷ்ணகிரி, சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 23 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

7-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589

# அம்மா ரோலில் ரேவதி!

• 'பிரியமுடன்' கௌசல்யா

படப்பிடிப்பு தொடங்கி மாதக் கணக்காயிற்று. ஆனால், கதாநாயகி கிடைத்தபாடில்லை. கதாநாயகியை விட ஸ்ட்ராங் கேரக்டர் கதாநாயகனின் தங்கை கேரக்டர்தான். அதற்கு ஆள் கிடைச்சாச்சு. விஜயகாந்த் நடிக்கும் 'தர்மா' படத்தின் நிலவரம் இது. விஜயகாந்தின் தங்கையாக நடிக்க வந்திருப்பவர் சில்பா. மலையாளத்தில் இவர் பெயர் சில்பி. இருபதுக்கும் மேற்பட்ட படங்கள் அங்கே. தமிழில் அறிமுகமாகும்போது கதாநாயகியாக அல்லாமல் – தங்கையாக அறிமுகமாவதா என்று ஒரு சின்ன தயக்கம் சில்பாவுக்கு. கேரக்டர் பிடித்துப் போய்விட, 'டோன்ட் கேர்' சொல்லிவிட்டார். தெலுங்கு, கன்னடம் இரு மொழிகளிலும் அறிமுகமாகி நடித்துக் கொண்டிருக்கிறார். சிவராஜ் குமாரோடு ஜோடி சேர்ந்து, நடித்து, கன்னடத்தில்



• சில்பா: தங்கையாக

ஸ்டேட் அவார்டும் வாங்கிவிட்டார். சில்பா இனி மலையாளத்தை மறந்துவிட்டு தமிழ், தெலுங்கு, கன்னடம், என்று அலையப் போவதென்னவோ நிஜம்.

'ப்ரியமுடன்' படத்தின் கதை ஜெய்ப் பூரில் நிகழ்கிறது. அதற்காக ஒரு மாதம் ஜெய்ப்பூரில் படப்பிடிப்பு. ஆக்ஷன் ப்ளஸ் த்ரில்லர் படம் என்பதால் காதல் முகத்தைக் கழட்டி வைத்துவிட்டு வித்தியாசமான முக மொன்றை மாட்டிக் கொண்டிருக்கிறார் விஜய். இருந்தும் காதல் இல்லாமல் இருந்து விட முடியுமா என்ன? ஜெய்ப்பூர்வாசியா கவே, பாத்திரமேற்று நடிக்கும் கௌசல்யா – விஜய்யோடு நிச்சயம் 'டூயட்' பண்ணு கிறார். எஸ்.ஏ. சந்திரசேகரிடம் பணிபுரிந்த வின்சென்ட் செல்வா இப்படத்தின் மூலம் இயக்குனராகிறார். ஆரம்பத்தில் டைரக்ஷன் மேற்பார்வை பண்ணிய சந்திரசேகர் – வின் சென்ட் செல்வாவின் 'ஒர்க்'கைப் பார்த்து விட்டு சைலன்ட்டாய் ஒதுங்கிக் கொண்டார். விஜய்யும் – வின் சென்ட் செல்வாவும் சேர்ந்து ஜமாய்க்கிறார்கள்.

பிரபு நிதானமென்றால் படு நிதானம், கதை கேட்பதில். வருடத்திற்கு ஒரு படம் வந்தால் கூடப் போதும். கதை உள்ள பட மாக இருக்க வேண்டும் என்பது தான் பிரபுவின் இப்போதைய ப்ரியமான வேண்டுகோள். அவ ரின் ப்ரியத்திற்கேற்ப உருவாகும் படம்தான் 'இனியவளே'. ஒன் றல்ல; மூன்று கதாநாயகிகளோடு சேர்ந்து காதல் பண்ணுகிறார். ஆனால், யாரைக் கைப்பிடிக்கிறார் என்பது சஸ்பென்ஸ். மெல்லிய உணர்வுகள் கொண்ட கவிஞர் வேடம் பிரபுவிற்கு. சுவலட்சுமி ஒரு பக்கம், கீர்த்திரெட்டி ஒரு பக்கம் பிரபுவிற்கு வலை வீச – கவிதையாலேயே பிரபுவை கட்டிப் போடப் பார்க்கிறார் கௌதமி. இவர்கள் இருவர் பரிமாறிக் கொள்ளும் கவிதைகளை எழுதியிருப்பவர் புதுப் பெண் கவிஞர் தாமரை. பத்திரிகைகளில் அரங்கேறிக் கொண் டிருந்த தாமரையின் கவிதை வரிகள் முதன் முறையாக 'இனியவளே' படத்தின் மூலம் திரையிலும் அரங்கேறுகிறது.

'டூயல்' – சமீபத்திய தமிழ்த் திரைப் படங்களில் காதலுக்கு அடுத்தபடி கையா ளப்படும் உத்தி. முரளி மட்டும் அதற்கு விதி விலக்கா என்ன? 'ரத்னா' படத்தில் 'டூயல்' கேரக்டரில் வருகிறார். ஆனால், ஜோடி என் னவோ மூன்று. சங்கீதா, மகேஸ்வரி, இந்து என்று மூவர் வலம் வருகிறார்கள். ரேவதியும் தலை காட்டுகிறார். முரளிக்கு ஜோடியாக அல்ல. அம்மாவாக!



• இனியவளே: பிரபு-சுவலட்சுமி



• ரத்னா: முரளி-சங்கீதா

'துள்ளித்திரிந்த காலம்' படத் திற்குப் பின் கவிதாலயா நிறுவனத் திற்கே மறு படியும் பாலசேகரன் ஒரு படம் இயக்க ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ளார். இத னால் அளவில்லா சந்தோஷம் பால சேகரனுக்கு. சந்தோஷத்திற்கு மேல் சந்தோஷம்தான். பிரபுதேவா மனிஷா கொய்ராலா ஜோடி சேரும் படமொன்றையும் இயக்க இருக் கிறார் அடுத்தபடியாக!

— மஹந்த்

## காற்றிலே ஓடும் கார்!

சுற்றுச் சூழல் நச்சு மயமாவதைத் தடுக்க மின்சார பாட்டரிகள் அல்லது காஸ் ஸிலிண்டர் பயன்படுத்தி கார் ஓட்ட முடியுமா என்று விஞ்ஞானிகள் பரிசோதித்து வரும் வேளையில், 'ஏன் காற்றழுத்தத்தைப் பயன்படுத்தியே ஓட்டலாமே' என்று ஓர் ஆராய்ச்சியாளர் முன் வந்திருக்கிறார்! இந்தக் கார் சத்தம் போடாது; புகை, நாற்றம் எதுவும் கிடையாது. பிரெஞ்சு விஞ்ஞானி சை நெக்ரி மூன்று ஆண்டுகள் முயற்சிக்குப் பிறகு இந்த இஞ்சினை வடிவமைத்துள்ளார். அடுத்த மாதம் மெக்ஸிகோவில் இதே இஞ்சின் தயாரிக்கத் தொழிலகம் தொடங்குகிறார்.

இந்தக் கார் அதிக பட்சம் 100 கி.மீ. வேகத்தில் செல்லும். 300 லிட்டர் காற்றை உயர் அழுத்தத்தில் இதன் டாங்கில் மூன்று நிமிடங்களில் நிரப்பி விடலாம். வீட்டில் நிரப்புவதானால் நாலு மணி நேரம் ஆகும். அதற்குப் பயன்படும் மின்சாரத்துக்கு மட்டும் காசு தரவேண்டும். காற்று இலவசம்தானே! மெக்ஸிகோவின் தலை

## ஒரு சந்நியாசியின் 'குடும்பப்' பிரச்னைகள்

"இப்படியா அஜீரணம் ஏற்படும் அளவு சாப்பிட வேண்டும்?" எனத் தாக்கரேவே கொதித்துப் போகுமளவுக்கு, சாப்பிட்டு ஏப்பம் விட்டிருக்கிறார்கள் சிவசேனைக்காரர்கள்; முக்கியமாக முதல்வர் ஜோஷியின் மீது நெற்றிக் கண்ணையே திறந்திருக்கிறார் என்றால், "சாப்பாடு" கோடிக் கணக்கு பெருமானமுள்ளது எனக் கோடி காட்டியிருக்கிறார் என்றுதானே அர்த்தம்? ஜோஷி நல்லவர்தானெனினும், அவர் பெயரால் பலர் சுருட்டுவதை எப்படிச் சகிப்பது? 'என் மீது குற்றம் சாட்டியவர்களை செருப்பைக் கையிலெடுத்து விரட்டினேன்! இப்போது ஜோஷி எதைக் கையிலெடுக்கப்போகிறார் என்று பார்க்கிறேன்!" எனத் தாக்கரேவை கொக்கரிக்க வைத்துள்ளது. அடிமட்டத் தொண்டர்களே முணுமுணுக்குமளவுக்கு படா கோபமாகிப் போன சேனைப் பிரமுகர்களின் போக்கால் வெறுப்படைந்து, 'கொஞ்ச' காலத்துக்கு அரசியல் சந்நியாசம் வாங்கிக் கொள்ளப்



## மும்பை: கொலைகாரத் தலைநகர்?



நகர், மெக்ஸிகோ ஸிடியில் 87,000 டாக்ஸிகள் ஓடுகின்றன. உலகின் மிக மோசமான நச்சுக் காற்று மண்டலம் இங்கேதான். எனவே மெக்ஸிகோ அரசு இந்த டாக்ஸிகள் அனைத்துக்கும் லைசென்ஸ் ரத்து செய்து, அவற்றுக்குப் பதிலாகக் காற்றழுத்தக் கார்களை டாக்ஸிகளாக ஓட்டத் திட்டமிட்டு வருகிறது.

அது சரி, நமது ராமர் பிள்ளை என்ன சொல்கிறார்? மூலிகை பெட்ரோல் என்ன ஆச்சு?

ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்

போவதாக அறிவித்திருக்கிறார் தாக்கரே! உடனே தொண்டர்கள், மாதோஸ்ரீ (தாக்கரே இல்லம்) முன் நின்று, 'போகாதே போகாதே என் தலைவா' என்று கோரஸாக இசைக்க, அவரும், "கொஞ்ச"த்தின் அர்த்தத்தை விரைவில் வெளியிடுவதாக, சாந்தப்படுத்தியிருக்கிறார். தேர்தல் தோல்வி நடவடிக்கைகளும், பிரசவ காலப் பிரதிக்ஞைகளும் ஒன்றுதானே?

## கொலைகாரத் தலைநகர்?

'காக்கை குருவி எங்கள் ஜாதி' என்பது மும்பைக்காரர்களுக்கு ஒவ்வாத சமாசாரம். தீவிரவாதம் தலைவிரித்தாட, குருவிகளை சுட்டுத் தள்ளுவதுபோல், சர்வசாதாரணமாக மனிதர்களை சுட்டு வீழ்த்திக் கொண்டிருக்கிறார்கள். சிவசேனைப் பெருந்தலைகளான ஜிங்காடே, ரெடேகர், பட்குசார்... என வரிசையாகத் தலைகள் உருண்டன. இதற்கு யார் காரணம், என்ன காரணம் எனத் துப்பு துலக்கும் முன்னரே அகில பாரதிய சேனைத் தலைவரான விட்டல் பிடவேவைத் தீர்த்துக்கட்டியிருக்கிறார்கள். இது ஏதோ அரசியலுக்கும் அண்டர் வர்ல்டுக்குமுள்ள கொடுக்கல் வாங்கல் என்று நினைத்தால், மாஹிமில், பட்டப் பகலில், பட்காவ்கர் என்ற ரேஸ் குதிரை முதலாளியை சுட்டுக் கொன்றிருக்கிறார்கள். அவரது குதிரையின் மீது பணம் கட்டித் தோற்றவர்களின் வேலையாக இருக்கலாம்! நகை, பணம், கொள்ளையடிப்பதற்கென கொலை செய்பவர்கள் ஒரு பக்கம் என்றால், தன் நாய் ஊளையிட்டு, சுத்தி, உயிரை வாங்குகிறது என்று புகார் செய்ய வந்த அடுத்த வீட்டுக்காரரின் வாயை ஒரே'யடி' யாக மூடிவிட்ட 'நாய் பிரியர்' மறுபக்கம். "இந்த மாதத்தில் இது 23வது கொலை" என, ஆஜர் பட்டியலைப் போல் கொலைப் பட்டியலை வைத்துக் கொண்டு கணக்கெடுக்கிறது காவல் துறை! பம்பாய் மும்பை ஆனது போல், 'பொருளாதாரத் தலைநகர்' என்ற பழைய பட்டத்தை உதறிவிட்டு, 'கொலைகாரத் தலைநகர்' என்ற புதிய மகுடத்தை சூட்டிக் கொண்டு விடுமோ?

## மாறிவரும் 'மாருதி' மோகம்

'பப்'களும் 'நைட்கிளப்'களும் மூலை முடுக்குகளிலெல்லாம் முளைக்க, 'பெண்கள் தின'த்தன்று, 'பார்ட்டி'எனப் பெண்கள் எல்லாம் கூடி, குடித்...ப்ச்...விட்டுத் தள்ளுங்கள்; ஆனால் இப்படியே எத்தனை நாட்களுக்கு விடுவது என்ற கேள்வி பூதாகாரமாகி, பலரை உசுப்பிவிட்டிருக்கிறது! அகில பாரதிய அக்னிஷிகா மஞ்சாரார்கள் வெகுண்டெழுந்து, ஆபாச கதைக் கருவும் இரட்டை அர்த்தம் கொண்ட வசனங்களுமாக சக்கைப்போடு போடும் ஒரு நாடகத்தை நடக்கவிடாமல் தடுத்திருக்கிறார்கள். "after noon hungama" "Jam session" என்றெல்லாம் இளைஞர்களை குட்டிச்சுவராக்கும் 'பப்'கள் மீது இவர்களது அடுத்தப் படையெடுப்பாம். ஷார்ட்ஸ், ஸ்லீவ்லெஸ், மினி ஸ்கர்ட்ஸ் போட்டுக் கொண்டு வரும் மாணவர்களை வீட்டுக்கும், கைகோத்து ஜோடியாக உலவுபவர்களை பீச்சுக்கும் உடனடியாகத் துரத்த பல கல்லூரி முதல்வர்கள் முடிவெடுத்துள்ளார்கள். பல பூங்காக்களில் ஜோடிகள் அமரக்கூடிய பெஞ்சுகள் நீக்கப்பட்டு, ஸ்டூல் போன்ற தனி ஆசனம் போடப்பட்டுள்ளன!

கலாசார அமைச்சர் பிரமோத் நவால்கர், "அந்தக் காலத்தில், என் தாய், ஐஸ்க்ரீம் சாப்பிடக் கூடாது என்ற நிபந்தனையுடன் 2 பைசா பாக்கெட் மணி தருவார். நான் தவறாமல் அதை சாப்பிட்டுவிட்டு, பாவத்தைத் தீர்க்க, மாருதி கோயிலுக்குச் சென்று எண்ணெய் வாங்கி விளக்கேற்றுவேன். இந்தக் காலத்து இளைஞர்களும் மாருதிக்கு எண்ணெய் வாங்குகின்றனர்; கோயில் மாருதிக்கு இல்லை, கார் மாருதிக்கு" என்று அங்கலாய்ப்பது நியாயமாகத்தானே இருக்கிறது?

– ஜெயஸ்ரீராஜ்

விஷ்ணு சத்யகாம: என்பதைப் பார்த்தோம். சத்யகாமனான அவனுடைய திருவடியைப் பற்றக் கூடியவர்களின் எண்ணங்களை நிறைவேற்றுகிறவன். அடுத்த தான குணம்: சத்யசங்கல்பம்.

வைகுண்டத்திலே பரமாத்மா எழுந்தருளியிருக்கிறான். கூர்ம வடிவிலே அமைந்திருக்கும்படியான அந்த வைகுண்ட லோகத்திலே, பரமாத்மா விராஜமானனாய் என்றென்றும் வீற்றிருக்கிறான். தன் நடக்கையின் கீழ் எல்லாவற்றையும் அடக்கி ஆளக்கூடிய சக்தி படைத்தவனாய் எழுந்தருளியிருக்கிறான். அந்த ஆதிசேஷ சர்ப்பத்தின் மேலே அமர்ந்த திருக்கோலனாக, ஒரு பாதத்தை மடித்து வைத்துக் கொண்டு ஒரு திருவடியைத் தொங்க விட்டுக் கொண்டு, ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவியுடன் அமர்ந்த திருக்கோலம்!

தர்மம்-அதர்மம்; சத்யம்-அசத்யம் இத்யாதி தேவதைகளெல்லாம் சாமரம் போட, நித்யசூரிகளெல்லாம் இமைக் கொட்டுதல் இல்லாமல் அவனை சேவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

சுவாமி தேசிகன் பரமார்த்த ஸ்துதியிலே சொல்கிறார்:

அவனுடைய திருமேனியிலே எத்தனையோ ஆபரணங்கள், ஆயுதங்களெல்லாம் தரித்திருக்கிறான் என்று சொல்கிறார்.

தமிழ்ப் பிரபந்தம் சொல்கிறது:

அத்திகிரி அருளாளப் பெருமாள் வந்தார்
ஆனைபரி தேரின்மேல் அழகர் வந்தார்
கச்சிதனில் கண்கொடுக்கும் பெருமாள் வந்தார்
கருதவரம் தரும்தெய்வப் பெருமாள் வந்தார்
..............................................
உம்பர் தொழும் கழலுடையார் வந்தார் தாமே
பிரும்மா யக்ஞம் பண்ணினார் பூர்வத்

52

# குறையொன்றுமில்லை

திலே... உத்தமமான யக்ஞம்! உலகத்தவர் அத்தனை பேருக்கும் அன்னம் கிடைக்க வேண்டும் என்பதற்காகப் பண்ணினார். யாரும் பிரசாதத்துக்குக் (உணவு) கஷ்டப்படக்கூடாது என்ற காரணத்தில் பண்ணியது.

எதைக் கொண்டு எல்லோருக்கும் அன்னம் கிடைக்கச் செய்வது... என்று பார்த்தபோது, வேதத்திலே முதலில் இந்த அச்வமேத மஹா யக்ஞத்தைத்தான் சொல்லியிருந்தது. அதனால்தான் பிரும்மா தாமே அதை அனுஷ்டித்து மற்றவர்களையும் அனுஷ்டிக்கும்படியாகப் பண்ணினார். அதை சத்யவ்ரத க்ஷேத்திரத்தில்-உயர்ந்த காஞ்சிபுரத்தில்-அனுஷ்டித்தார் பிரும்மா.

அந்த அச்வமேதத்திலே தோன்றியவன் தான் இந்த சத்யவ்ரத க்ஷேத்ரமாகிய காஞ்சி புரத்திலே எழுந்தருளியிருக்கிறான். அந்த தேவாதிராஜன், எல்லாவற்றையும் தன்னுடைய திருமேனியிலே தாங்கிக் கொண்டு



நிற்கிறான்.

பகவானுடைய வடிவழகைப் பார்க்கும் போது... எப்போதுமே அருகிலிருந்து சேவிக்கிறார்களே ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி... அவர்களுக்கே இமைகொட்டத் தோன்றாதாம். ஒரு க்ஷணம் அப்படிக் கண்ணை மூடினால் 'அந்த அழகை நாம் இழந்து விடுவோமோ' என்று, இமை கொட்டுதல் இல்லாமல் சேவிக்கும்படியான போக்யமாய் பரமாத்மா இருக்கிறான். அந்த தேவிகளுக்கே அவன் அப்படித் தோன்றுகிறான் என்றால், சாமானிய நித்ய சம்சாரிகளாய் இருக்கக் கூடிய நம்மைப் போன்றவர்களின் நிலைமையை என்னவென்று சொல்வது!

ஆகையினாலேதான் கம்ப ராமாயணத்திலே 'நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்' என்றார் கம்பர். ராமனைக் காண சீதைக்கு ஆயிரம் கண் வேண்டும் என்ற கம்பர், சீதையைப் பார்க்க ராமனுக்கு ஆயிரம் கண் வேண்டும் என்று சொல்லவில்லை! ஒவ்வொரு முறை அவன் அவளைப் பார்க்கும் போதும் ஆயிரம் நேத்திரம் வேண்டும் என்கிறார்! எப்பெப்போதெல்லாம் பார்க்கிறானோ, அப்பப்போது ஆயிரம் கண்கள்!

இந்த திவ்ய தம்பதிகளைப் பார்ப்பதற்கு நமக்கு எத்தனை ஆயிரமாயிரம் கண்கள் வேண்டுமோ?... யாரால் சொல்ல முடியும்!

ஆகையினாலே அப்படிப்பட்ட சௌந்தர்யம் மிக்கவன் இங்கும், அங்கும், எங்கும்... ஒரே ரீதியிலே சமஸ்த விதமான ஐச்வர்யத்தோடு வந்து பிறக்கிறான். வைகுண்டத்திலே எப்படியிருக்கிறானோ அப்படியேதான் அவதார காலத்திலும் இருக்கிறான்.

அவனுடைய அத்தனை சௌந்தர்யத்தையும் நித்யம் அனுபவிக்கக் கொடுத்து வைத்தாள் கௌசலை- அதனால்தான் 'கௌசல்யா, சுப்ரஜா-ராமா' என்று கொண்டாடப் பெறுகிறாள்.

ஸர்வகந்தமாய், ஸர்வரஸமாய், ஸர்வ சுகந்தங்களுக்கும் இருப்பிடமாய் இருக்கும் படியான சர்வேச்வரனை, குழந்தையாய் இருக்கும்போது பார்க்கக் கொடுத்து வைத்தவள் அல்லவா?!

– இப்படி அவதார காலத்திலே அவன் வடிவழகு குறைவில்லாமல் இருப்பதுபோல், அவனுடைய சங்கல்பமும் பங்கமில்லாமல் நிறைவேறுகிறது. அதனால்தான் சத்யசங்கல்பத்வம் என்ற குணம் அவனுக்குச் சொல்லப்படுகிறது. ஒரு நாளும் அந்த சங்கல்பத்துக்கு மாறாக நடக்க மாட்டான் அவன்.

சங்கல்பத்தின் முக்யத்துவத்தைப் பாருங்கள்...

திருவஹீந்திரபுரத்தில் ஒருமுறை சுவாமி தேசிகன் சங்கல்பம் பண்ணிக் கொண்டார். கருட மந்த்ரத்தை அவர் மாமாவிடம் உபதேசம் பெற்றுக் கொண்டார். உபதேசம் பெற்றுக் கொண்டு ஜபம் செய்தார்.

கருட மந்த்ரம் என்று பெயர் அதற்கு... கோயில்களிலே உத்ஸவ காலத்திலே கொடியேற்றுகிறபோது சொல்லுவார்கள் இந்த மந்திரத்தை.

அந்த கருடத்மானுக்கு காயத்ரி மந்திரமே நேத்திரமாயிருக்கிறது. ஸ்தோமம் என்பது யக்ஞத்திலே விசேஷமான ஹவிஸ்- அது கருடத்மானுக்கு சிரஸாக இருக்கிறது. ஸாம வேதம் திருமேனியாய்

## அருள்வாக்கு



நாம் பெரிசாக ஆசைப்பட்டுத் தேடிப் போகாமல் அதுவாகவே வந்து கலப்பில்லாத ஆனந்தம் தருவதாகவும் சில வஸ்துக்கள் இருக்கின்றன. கொஞ்சம் விச்ராந்தியாயிருக்கலாமென்று பீச்சில் போய் உட்காருகிறோம்; அல்லது மொட்டைமாடியில் போய் உட்காருகிறோம். நமக்கு அன்று பூர்ணிமை என்று தெரியாது. ஆனால் தலையைத் தூக்கிப் பார்த்தால் பூர்ண சந்த்ரன் வெண்ணெய்க்கட்டி மாதிரி அழகாகத் தெரிகிறது. குளுகுளு என்று சந்த்ரிகையைக் கொட்டுகிறது. நாம் ஆசைப்படாமலே ஆனந்தம் கிடைக்கிறது. இந்த ஆனந்தத்துக்காக நாம் எந்தக் கஷ்டமும் படவில்லை. இதற்கு அப்புறமும் இந்த அநுபவத்தால் ஒரு கெடுதலும் வரப்போவதில்லை. எல்லாம் ஸரிதான். ஆனாலும் இந்த ஆனந்தமும் எத்தனை நாழி சாச்வதம்? அது உள்ளளவும்கூட அதாவது ராத்ரி பூரா நம்மால் அதைப் பார்த்துக் கொண்டிருக்க முடிகிறதா? உகந்தால் ஒரு மணி பார்க்கிறோம். அப்புறம் அந்த ஆனந்தம் நீடிக்கிறதா? ஆனாலும் இன்றைக்குப் பார்த்ததில் 'ஹாபிட்' மாதிரிக் கொஞ்சம் ஏற்பட்டுவிட்டது. நாளைக்கும் சந்த்ரனைப் பார்க்கிறோம். ஆனால் அது இன்று மாதிரி இல்லை. கொஞ்சம் மூளியாகத்தானிருக்கிறது. இன்று பூர்ணமாகப் பார்த்து விட்டதாலேயே நாளைக்கு மூளியாகப் பார்க்கும்போது என்னவோ போல் இருக்கிறது. 'எப்போ பூர்ணிமை வரும்? எப்போ வரும்?' என்று இன்னும் ஒரு

இருக்கிறது... யக்ஞங்களெல்லாம் அதன் இறக்கையினுடைய துளியாகயிருக்கிறது. இப்படி விசேஷமாய்ப் பிரகாசிக்கக் கூடிய இறக்கைகளை உடைய கருடன்-பகவானுக்கு தாஸனாகவும் இருக்கிறான்; வாகனமாகவும் இருக்கிறான். சகாவாகவும் இருக்கிறான். அவனை மனத்திலே எண்ணி இந்த மந்திரத்தை ஜபித்தால் விஷ ஜந்துக்கள் கிட்டே வராது!

அப்படிப்பட்ட உத்தமமான கருடத்மான், ஸ்வாமி தேசிகன் சில ஆவர்த்திகளைப் பண்ணினவுடனேயே பிரத்யக்ஷமாகிவிட வேண்டும் என்று எண்ணினானாம்.

அப்படியானால் அவருடைய- ஸ்வாமி தேசிகனுடைய நிஷ்டையை என்னவென்று சொல்வது!

ஆனால் பிரத்யக்ஷமாக வேண்டும் என்று நினைத்த கருடன் பிரத்யக்ஷமாகவில்லை. ஏன் பிரத்யக்ஷமாகவில்லை என்றால், ஸ்வாமி ஓர் எண்ணிக்கை வைத்துக் கொண்டிருக்கிறார் இல்லையா... அவருடைய அந்த சங்கல்பம் கெட்டுப் போய் விடக் கூடாது என்பதால் தான் பிரத்யக்ஷமாகவில்லை. அது முடியும் வரை காத்திருந்தான் கருடத்மான்!

இப்படியாக, சங்கல்ப பங்கம் ஆகக் கூடாது என்று தேவதைகளும் நினைக்கிறார்கள். நாமும் சங்கல்ப பங்கம் பண்ணக் கூடாது. ஒரு சங்கல்பம் பண்ணிக் கொண்டு அதற்கு எதிராக நடக்கக் கூடாது. அந்த சங்கல்பத்தை நடத்தி வைக்க பகவானிடத்திலே பிரார்த்தனை பண்ண வேண்டும்...

நம்முடைய சங்கல்பமே இப்படியானால் பகவானுடைய சங்கல்பம் பற்றிச் சொல்ல வேண்டாம். அவனுடைய சங்கல்பம் ஒரு நாளும் பழுதுபடுவதில்லை.

ராமாவதார காலத்திலே தேவதைகளுக்கு வாக்தானம் பண்ணுகிறான் அவன்.

"ஹே பிரபு! நீ பூலோகத்திலே வந்து அவதாரம் பண்ண வேண்டும்"- அவர்கள் கேட்கிறார்கள்.

'நீ இத்தனை நாள் இருக்கணும்' என்று அவர்கள் சொல்லவில்லை... ஆனால் பகவானே சொல்கிறான்- சங்கல்பம் பண்ணிக் கொள்கிறான்.

"பதினோராயிரம் வருஷம் நான் இந்த பூமியிலே இருப்பேன். இருந்து இதைப் பரிபாலனம் பண்ணுவேன்... நீங்கள் கவலையை விடுங்கள்! ராவணனை சம்ஹரிப்பேன். தேவர்களுக்கு வாழ்வளிப்பேன்..."

பதினோராயிரம் வருஷம் சங்கல்பம்; அந்த நாளும் வந்துவிட்டது... பதினோராயிரம் வருஷம் முடியப் போகிறது...

யமன் இருக்கிறான் பாருங்கள்... அவன் தர்ம ராஜா. பாரபட்சம், ஓரவஞ்சனை யமனிடம் கிடையாது. அவனை ஏச முடியாது. வலியது கூற்றம் என்பார்கள்... என்ன உண்டோ அதை நடத்தித் தீருவான்.

ஆகையினாலே இங்கே யமன் தபஸ்வி வேஷம் போட்டுக் கொண்டு அயோத்தி மாநகர அரண்மனை வாசலிலே வந்து நிற்கிறான்... வந்து நின்று, "நான் வந்திருக்கிறேன்... ராமனிடத்திலே தெரியப்படுத்த வேண்டும்" என்கிறான்.

அங்கேயிருந்து உள்ளே வரச்சொன்னான் பரமாத்மா...

உள்ளே போய் யமன், தபஸ்வி வேஷத்திலே ராமனுடைய திருச்செவியிலே பேசுகிறான்...!

(தொடரும்)

மாஸத்துக்கு அப்புறம் அதேநாள் வருகிற வரைக்கும் ஒரு ஆசை அடித்துக் கொண்டேயிருக்கிறது. அதாவது முதலில் பூர்ணிமைக்காக- பின் ஆனந்தமே ஆசையை உண்டாக்கிவிடுகிறது. இப்படி எதிர்பாராமல் தானாகவே ரொம்ப ஆனந்தமாக வருகிறவையும், பிற்பாடு அது வராதா, வராதா என்று எதிர்பார்க்க வைக்கிற ஆசையை ஏற்படுத்திவிடுகிறது. எந்த ஆனந்தமானாலும் அது நிரந்தரமாய் இருப்பதில்லையாதலால், அந்த ஆனந்தத்துக்குக் காரணமான வஸ்து ஏதோ ஒரு ஸமயத்தில் மட்டுமே நமக்குக் கிட்டுவதாய் இருந்து கொண்டு மற்ற ஸமயங்களிலெல்லாம் அதற்காக நம்மை தவிக்கப் பண்ணிக் கொண்டிருக்கிறது.

நல்லதில்லாததுகளைப் போலவே நல்லதின் விஷயத்திலும் இப்படியே இருக்கிறது. ஈச்வர தர்சனம் க்ஷணகாலம் கிடைத்து அவன் மறைந்துபோய் விட்டானானால் அப்புறம் அந்த தர்சன ஆசை பக்தனைப் பைத்தியமாக, வெறியாக ஆக்கிவிடுகிறது. அதை ஒரு உத்தமமான விரஹ தாபமாகச் சொல்கிறார்கள். அந்த பாவத்தினாலேதான் மாணிக்கவாசகர், ஸ்ரீ க்ருஷ்ண சைதன்யர் எல்லாம் கதறு கதறு என்று கதறி மூர்ச்சை போட்டு விழுந்திருக்கிறார்கள். சென்ற நூற்றாண்டில் இப்படியே (ராமக்ருஷ்ண) பரமஹம்ஸரைச் சொல்கிறார்கள்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

கதிரொளி தீபம் கலசமுடனேந்தி
சதிரிள மங்கையர் தாம் வந்து எதிர்கொள்ள
மதுரையார் மன்னன் அடிநிலை தொட்டு எங்கும்
அதிரப் புகுதக் கனாக் கண்டேன் தோழீ! நான்

- கோதை ஆண்டாள்



# ஆனந்தப் பயணம் ஆரம்பம்
# ஆயுள் முழுவதும் பேரின்பம்!

பாசக் கூட்டில் பாடி வரும் ஜோடிப் பறவைகளை நேசச் சங்கிலியால் பிணைக்கப்பட்ட ஊஞ்சலில் அமரவைத்து உற்றாரும், உறவினரும் மிகுசுற்றும் உன்னத நிகழ்வு. இது ஆண்டாளுக்கு மாத்திரமல்ல அனைவருக்குமே பொதுவான விஷயம். இவை நீடித்த ஆயுளையும், நிறைவான வாழ்வையும், நின்று நிலைக்கும் தலைமுறைகளையும் உண்டாக்குமென்ற நம்பிக்கையின் அடிப்படையில் பின்பற்றப்படுபவை. அதே அடிப்படையில் தான் நடுநிலை தவறா செயல்முறை, மாசுபடா வணிகப்பண்பாடு, தொலைநோக்குடன் கூடிய சேவை, நேர்த்தியான செயல்திறன் கொண்டியங்கும் ஸ்ரீராம் சிட்ஸையும் 15 லட்சம் சந்தாதாரர்கள் மகிழ்வுடன் நம்பி ஏற்றுக் கொண்டுள்ளனர்.

இந்த உறவுகள் தான் உங்கள் வெற்றிக்குச் சிறகுகள்.

இந்த உறவுச் சங்கிலியில் உங்களுக்குத் தெரிந்தவரை சந்தாதாரராக அறிமுகம் செய்கையில் கிளை மேலாளரிடம் உங்கள் அதிர்ஷ்டத்தை மறைத்து வைத்திருக்கும் கூப்பனொன்றைப் பெற்று, அதை அவர் முன்னிலையிலேயே பிரித்து, கூப்பனுக்கேற்ற ஸ்ரீபெட் வாட்டர் ஜக் முதல் தங்க நெக்லஸ் வரையிலான பரிசுகளைப் பெறுங்கள். நீங்கள் அறிமுகப்படுத்தும் நபருக்கும் அவர் சேரும் சீட்டு மதிப்பிற்கேற்ப சந்தாதாரர் பரிசு உண்டு. இன்பத்தை அனைவருக்கும் பங்கு வைத்து இனிய பரிசுகளைப் பெறுவோம், வாருங்கள்.










# ஸ்ரீராம் சிட்ஸ்

**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்,**
'சுப்ரமணியன் பில்டிங்', 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை-600 002.
போன் : 8520700, 8520797, 8522651, 8523932, 8525536

**இழப்பற்ற அதிக லாபம் தரும் என்றும் ஏற்புடைய முதலீடு.**

| | சீட்டுத் தொகை* | | சந்தாதாரர் பரிசுகள் |
|---|---|---|---|
| 1. | 250 X 40 | 10,000 | [illegible] |
| 2. | 500 X 30 | 15,000 | [illegible] |
| 3 | 625 X 40 | 25,000 | [illegible] |
| 4 | 500 X 60 | 30,000 | செல்லோ செட் 500 மி.லி. |
| 5. | 1,000 X 50 | 50,000 | [illegible] |
| 6. | 2,500 X 30 | 75,000 | [illegible] |
| 7. | 2,500 X 40 | 1,00,000 | [illegible] |
| 8. | 5,000 X 30 | 1,50,000 | [illegible] |
| 9. | 5,000 X 40 | 2,00,000 | [illegible] |
| 10. | 10,000 X 30 | 3,00,000 | [illegible] |
| 11. | 20,000 X 25 | 5,00,000 | [illegible] |

*[illegible] *[illegible]

நேரடியாக சீட்டில் சேரும் ஒவ்வொரு சந்தாதாரருக்கும் ஒரு சந்தாதாரர் பரிசு உண்டு









1998 ஏப்ரல் 5
ஈசுவர பங்குனி 22
மலர் : 56
இதழ் : 36

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# சகுனி ராஜ்ஜியம்!

**து**ரோகம் செய்வதில் தாங்கள் ஜெயலலிதாவுக்குத் துளியும் சளைத்தவர்களல்ல என்று நிருபித்துள்ளார்கள் பி.ஜே.பி. தலைவர்கள்!

சபாநாயகர் பதவிக்கு சங்மாவை ஆதரிப்பதாக அவரிடமே கூறிவிட்டு, வேட்பு மனுவில் அவர் கையெழுத்திட்டதுமே, தெலுங்கு தேசத்தைச் சேர்ந்த மோகன் சந்திர பால யோகியைத் தங்கள் வேட்பாளராக நிறுத்தியிருக்கிறார்கள்.

ஹைதராபாத் விமானம் தாமதமாகிவிட, விழுந்தடித்துக் கொண்டு வந்த பாலயோகி, கடைசி நிமிஷத்தில் வேட்பு மனுவில் கையெழுத்திட்டிருக்கிறார். சுலபமாய் ஜெயித்திருக்கிறார். ஆனால், பாராளுமன்ற மரபுகளும் கௌரவமும் தோற்கடிக்கப்பட்டிருக்கின்றன.

அனைத்துக் கட்சித் தேர்வாகத் தாம் அமைந்தாலன்றி சபாநாயகர் பதவியை ஏற்க விரும்பவில்லை என்று பெருந்தன்மை காட்டிய சங்மா வஞ்சிக்கப்பட்டிருக்கிறார். எல்லோராலும் ஏற்கப்படக்கூடிய சபாநாயகரைத் தேடுகிறோம் என்று கூறிக் கொண்டே சந்திரபாபு நாயுடுவிடம் பேரம் பேசியதில், எதிர்க்கட்சியினர் அனைவரும் பி.ஜே.பியால் வஞ்சிக்கப்பட்டிருக்கிறார்கள்.

# அரசியல் சூப்பர் மார்க்கெட்




தாம் ஏமாற்றப்பட்டதை சங்மா பகிரங்கப்படுத்தியதுடன் பண்பாடு கருதி புதிய சபா நாயகரை வாழ்த்தி, வரவேற்றும் இருக்கிறார். 'மோகன சந்திர பாலயோகி' என்ற அவரது முழுப்பெயருக்குப் பொருள் கூறி, அதன் பொருத்தத்தைச் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

மோகன சந்திர என்றால் முழு நிலவு. பாலயோகி – இளம் முனிவர். 'பூரண சந்திரனைப் போல் இவர் ஒளி வீசியும், ஓர் இளம் முனிவரின் அறிவுக் கூர்மையுடன் திகழவும் வாழ்த்துகிறேன்...' என்று பேசியிருக்கிறார் சங்மா.

இந்த வாழ்த்துரையைக் கிண்டல் போல் தொனிக்கச் செய்துவிட்டன லோக் சபாவில் நடந்த சம்பவங்கள்.

முதல் நாளே, பிரதமரைப் பேச விடாமல் மாயாவதி குறுக்கிட, அவரைத் தடுக்க இயலாமல் சபாநாயகர் திணற... ஒரு வழியாக பி.எஸ்.பி உறுப்பினர்கள் அவையிலிருந்து வெளியேறியதால் பாலயோகி பிழைத்தார்!

லோக்சபா நடவடிக்கைகளை நிர்வகித்து நடத்திச் செல்ல உறுப்பினர் அனைவரது மதிப்பையும் மரியாதையையும் ஒருவர் பெற்றாக வேண்டும். அதற்குத் தேவையான அனுபவ அறிவும் தலைமைப் பண்பும் பாலயோகியிடம் போதுமான அளவு தற்போது இல்லை என்பது தெளிவாகிவிட்டது. அப்படியிருந்தும் நடைமுறை சிக்கல்களை ஏற்படுத்தக்கூடிய இந்தத் தேர்வுக்கு பி.ஜே.பி. ஏன் உடன்பட்டது?

நடைமுறைப் பிரச்னைகளைக் காட்டிலும், பாராளுமன்றத்தின் கௌரவத்தைக் காட்டிலும், சிறந்த மரபுகளைக் காட்டிலும், கொள்கைகளைக் காட்டிலும், ஆட்சியைப் பிடிப்பதும் அதில் எப்படியாவது ஒட்டிக் கொண்டிருப்பதும்தான் முக்கியம் என்று பி.ஜே.பி. கருதியிருக்கிறது. அதன் விளைவுதான் சபாநாயகர் தேர்வில் இப்படியொரு அந்தர் பல்டி...!

'காங்கிரஸை ஆதரிப்பதற்கில்லை; பி.ஜே.பிக்கும் நேரடி ஆதரவு இல்லை; ஆனால்




நம்பிக்கை வாக்கெடுப்பில் பங்கேற்காமல் பி.ஜே.பி ஆட்சியைக் காப்பாற்ற வகை செய்வோம்...' என்பதே சந்திரபாபு நாயுடுவின் நிலையாக இருந்தது. ஆனால், அவரும் ரகசிய பேரம் நடத்தி, ஆதரவுக்குக் கூலியாகத் தமது கட்சிக்காரருக்குச் சபாநாயகர் பதவியைக் கேட்டுப் பெற்றிருக்கிறார்.

சபாநாயகர் பதவி என்பது கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டதாயிருப்பது மரபு. பாரத தேசத்தின் பன்னிரண்டாவது லோக் சபாவிலோ, கட்சி அரசியல்தான் சபாநாயகர் தேர்வையே நிர்ணயம் செய்திருக்கிறது!

ஃபரூக் அப்துல்லாவின் தேசியப் பேரவை, அஸ்ஸாம் கணதந்திர பரிஷத், தெலுங்கு தேசம், ஆகிய கட்சிகளின் ஆதரவு தற்போது கிடைத்திருப்பதால் பி.ஜே.பி. இனி ஜெயலலிதாவின் மிரட்டல்களுக்குப் பணிய வேண்டாம் என்பது ஒரு சிறிய ஆறுதல் என்றாலும் திக்குக்கு ஒருவராக இழுத்துக் கொண்டிருக்கும் கட்சிகளை அணைத்துக் கொண்டு போய் நிலையான நல்லாட்சி வழங்குவது என்பது பிரதமருக்குப் பெரிய தலைவலியாக இருக்கும். பிற கட்சிகளை அவர் அனுசரித்துப் போகும்போது பி.ஜே.பி. கட்சிக்குள்ளேயே அதிருப்தியும் முணுமுணுப்பும் உருவாகும்.

'ராமராஜ்யத்தை உத்தரவாதம் செய்தார்கள்; சகுனி ராஜ்யமாக அல்லவா அது ஆரம்பித்திருக்கிறது!' என்று ஏமாற்றமுற்றிருக்கிறார்கள் இந்திய வாக்காளர்கள். ஆட்சிக்கு வந்ததும் முதல் காரியமாக ஐக்கிய முன்னணியை உடைக்கும் புனிதப் பணியை பி.ஜே.பி. நிறைவேற்றியிருக்கிறது!

அவப்பெயருடன் தொடங்கியிருக்கிற பி.ஜே.பி. ஆட்சி, மக்களின் நல்லெண்ணத்தை மீண்டும் பெற வேண்டுமாயின், சேற்றில் விளைந்த செந்தாமரையாகத் தாமதமின்றி நல்விளைவுகளைத் தரவேண்டும்.

**கோவை குண்டு வெடிப்பை அடுத்து முஸ்லீம் தீவிரவாதிகளின் பயங்கரவாத நடவடிக்கைகள் தமிழகத்தை உலுக்கிக் கொண்டிருக்கிற இந்தச் சமயத்தில் முஸ்லீம் சமூகத்தைச் சேர்ந்த அரசியல் தலைவர்கள் இந்த அபாயம் பற்றி என்ன நினைக்கிறார்கள்?**

**இந்திய யூனியன் முஸ்லீம் லீக் கட்சியின் அகில இந்திய பொதுச் செயலாளரும் தமிழகத் தலைவருமான ஏ.கே.ஏ. அப்துல் சமதை (72) சந்தித்தோம்.**

"நடந்த சம்பவங்கள் பற்றி...?"

"கோவை குண்டு வெடிப்புச் சம்பவங்களும், முஸ்லீம் இளைஞர்கள் சிலரின் தீவிரவாதப் போக்கும் எதிர்பாராத அதிர்ச்சி தரக்கூடிய நிகழ்ச்சிகள். தமிழகத்தில் எதெல்லாம் நடக்கக் கூடாது என்று பாடுபட்டு வந்தோமோ, அதெல்லாம் நடப்பது வேதனையளிக்கிறது. இப்படிப் பட்ட வன்முறையை கடுமையாக நாங்கள் கண்டிக்கிறோம்.

"இந்தச் சம்பவங்களால் முஸ்லீம்களைக் கேவலமாக மற்றவர்கள் பார்ப்பது தாங்க முடியாத வேதனையாக இருக்கிறது. எந்தப் பிரச்னைக்கும் அமைதியான முறையில் தீர்வு காண வேண்டும் என்று நாங்கள் எழுதுவதும் பல கூட்டங்களில் பேசுவதும் தீவிரவாதப் போக்கை நாடும் இளைஞர்களிடம் எடுபடவில்லை. அவர்களை எங்களால் கட்டுப்படுத்த முடியவில்லை. அதற்காக இந்தச் செயல்களையெல்லாம் எங்களால் அனுமதிக்க முடியாது.' இஸ்லாம் வன்முறையைக் கண்டிக்கிறது. இஸ்லாம் தனி நபரையோ அல்லது பிற மதத்தையோ வெறுப்பதில்லை. இஸ்லாத்தின் பெயரால் வன்முறையைத் தூண்டும் அமைப்புகளை வன்மையாகக் கண்டிக்கிறோம். இத்தகைய அமைப்புகளை முஸ்லீம்கள் எத்தருணத்திலும் ஆதரிப்பதில்லை."

**"குண்டு வெடிப்புச் சதியில் ஈடுபட்ட தீவிரவாதிகளுக்கு பயங்கரமான குண்டுகள், ஆயுதங்களையெல்லாம் திரட்ட எங்கிருந்து பணம் வந்தது? முஸ்லீம் சமுதாயம் இவர்களை ஆதரிக்கவில்லை என்பது உண்மையென்றால் வேறு யார் ஆதரிக்கிறார்கள்?"**

"இதையெல்லாம் புலனாய்வுத் துறை தான் கண்டுபிடிக்க வேண்டும். புலனாய்வுத் துறை 'எஃபெக்டிவாக'ச் செயல்பட்டிருந்தால் இப்படிப்பட்ட தீவிரவாதம் தமிழகத்தில் வளர்ந்திருக்காது. எல்லாரும் கோவை குண்டுவெடிப்பு பற்றிப் பேசுகிறார்கள். ஆனால், இதற்குப் பின்னணி என்ன என்பதைப் பார்ப்பதில்லை. தமிழ்நாட்டில் இந்து முன்னணி ராமகோபாலன் பேசிய பேச்சுக்களால் பல முஸ்லீம் இளைஞர்கள் தங்களை மீறி, தவறான வழிக்குச் செல்ல நேர்ந்தது உண்மை. ராமகோபாலன் மற்றும் அவரைச் சார்ந்தவர்களின் பிரசாரம் 10, 15 வருடங்களாக நடக்கிறது. எங்களிடம் அவர்கள் பேசிய நூற்றுக்கணக்கான ஒலி நாடாக்கள் இருக்கின்றன. அல்லாவை ஏசிப் பேசினால் கூட முஸ்லீம்கள் மன்னித்து விடுவார்கள். தங்கள் தாய் தந்தையை இழிவாகப் பேசினால் கூடப் பொருட்படுத்த மாட்டார்கள். ஆனால் திருநபியைப் பற்றியோ, திருநபி குடும்பத்தினரைப் பற்றியோ இழிவாகப் பேசினால் மன்னிக்க மாட்டார்கள்!

"முஸ்லீம்களின்

# "குண்டு வைத்தவர்கள்,

இயல்பு அப்படிப்பட்டது. இந்த உணர்வை ராமகோபாலனும் அவரைச் சார்ந்தவர்களும் கடுமையாகக் கிளறி விடுகிறார்கள். எந்த அரசாங்கமும் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கவில்லை. அவர்களின் பேச்சு அடங்கிய ஒவ்வொரு காஸெட்டும் நூறு வெடி குண்டு அழிவுக்குச் சமமானது! இந்தப் பேச்சைக் கேட்கும் சில முஸ்லீம் இளைஞர்கள் மனித வெடிகுண்டுகளாக மாறி விடு

கிறார்கள். அதை நான் கேட்டால் கூட உணர்ச்சிவசப்படுவேன். நீங்கள் கேட்டால் கூட உணர்ச்சிவசப்படுவீர்கள். அதற்காகத் தீவிரவாதத்தை நான் நியாயப்படுத்துவதாக நினைத்து விடாதீர்கள். இதே பாணியில் பெரும்பான்மை சமுதாயமும் திருப்பித் தாக்கினால் என்ன நடக்கும் என்றெல்லாம் பல கூட்டங்களில் நான் பேசியிருக்கிறேன். பாலஸ்தீன விடுதலை இயக்கத்தின் யாசர் அராபத்தை விடப் பெரிய தீவிரவாதி யாருமே இல்லை. அப்படிப்பட்டவரே தனது மக்களின் நலனுக்காக ஆயுதங்களை எறிந்து விட்டு அமைதிப் பேச்சுவார்த்தை மூலம்தான் தீர்வு கண்டார் என்பதையும் நான் எங்கள் மக்களிடம் வலியுறுத்தி வருகிறேன்.

"இந்த குண்டு வெடிப்பு சம்பவங்களுக்காக ஒட்டுமொத்தமாக முஸ்லீம் சமுதாயத்தைக் குற்றவாளியாகப் பார்க்கக் கூடாது. குண்டு வெடிப்புகளை கோழைகள் செய்திருக்கிறார்கள். இவர்கள் முஸ்லீம்களுக்கு அவமானத்தைத் தேடித் தந்திருக்கிறார்கள். பிடிக்க வேண்டிய இடத்தையெல்லாம் விட்டுவிட்டு எல்லா இடங்களிலும் சோதனை போடுவது எந்த வீட்டுக்குள் வேண்டுமானாலும் போலீஸ் நுழைவதெல்லாம் சகஜமாகி விட்டதால் முஸ்லீம்கள் கூனிக் குறுகி நிற்கிறார்கள். அப்பாவி மக்களுக்குப் பாதுகாப்பு இல்லை!"

**"இப்போதைய கொந்தளிப்பான சூழ்நிலையை எப்படிச் சரிசெய்வது?"**

"பத்திரிகைகள், அரசியல் தலைவர்கள், மதத் தலைவர்கள், நடுநிலையாளர்கள் எல்லாரும் சேர்ந்து தீர்வு காண வேண்டும். எந்த மதத்தையும் மதத் தலைவர்களையும் வழிபாட்டு முறைகளையும் யார் தரக்குறைவாகப் பேசினாலும் தடுத்து நிறுத்த வேண்டும். அரசியல் தலைவர்கள் பிரச்னையின் தீவிரம் புரியாமல் பொறுப்பற்ற முறையில் 'புள்ளி விவரக் கணக்கு' சொல்லிப் பேசக் கூடாது. பத்திரிகைகள் ரொம்பவும் ஆக்கபூர்வமாகச் செயல்பட வேண்டும். தீவிரவாதிகள் என்று மட்டும் குறிப்பிடாமல் 'முஸ்லீம்' தீவிரவாதிகள் என்று போடுவதில் அப்படி என்ன இனிப்பு? குற்றவாளிகளின் பெயரைக் குறிப்பிடுங்கள், மதத்தைக் குறிப்பிடக் கூடாது. பாஷாவை விசாரணைக்காக கொண்டு வருவதை போட்டோ எடுத்துப் போடுகிறார்கள். டி.வி.யில் காட்டுகிறார்கள். பாஷா ஆவேசமாகப் பேசுவதையெல்லாம் ஏன் போட வேண்டும்? இதெல்லாம் பயங்கரவாதத்தைத் தூண்டி விடும்.

"வன்முறையையும் வகுப்புவாதத்தையும் தூண்டுகிற எந்தச் சமயத்தைச் சார்ந்த அமைப்பாக இருந்தாலும், அதனை அனைத்து சமுதாயத்தினரும் புறக்கணிப்பதுடன் மனப்பூர்வமாகக் கண்டிக்கவும் வேண்டும்!" ●

சந்திப்பு :
**மு. சிவலிங்கம்**

# கோழைகள்!"



# KALKI SHOPPING PAGE

**கடுமையான தேர்தல் தோல்விக்குப் பிறகும் மைலாப்பூரில் உள்ள இ.காங்கிரஸ் அலுவலகத்தில் கூட்டம் இருக்கவே செய்கிறது. இரவு மணி பத்தை நெருங்கிக் கொண்டிருந்த போதிலும் சுமார் 50க்கும் மேற்பட்ட தொண்டர்கள் தலைவர் தங்கபாலு தரிசனத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். தொண்டர்களிடம் காட்டிய அதே உற்சாகத்தை நம்மிடம் தொடர்ந்தார் தங்கபாலு!**

# மூப்பனார் தலைமையில் தொண்டனாகச் செயல்படத் தயார்!



“திருநாவுக்கரசு கட்சியை காங்கிரஸ் கூட்டணிக் கட்சியாகக் கடந்த தேர்தலில் ஏற்றுக் கொள்ளத் தேவையில்லை என்று அர்ஜுன்சிங் மிகத் தெளிவுடன் இருந்தார். அதி.மு.க. இரண்டு என்ற அமைப்பு அவருடன் இருந்ததால், நான்தான் சிபாரிசு செய்து கூட்டணிக் கட்சியாக ஏற்றுக் கொள்ள வைத்தேன். ஐந்து தொகுதிகளைப் பெற்ற பின் தடாலடியாக, 'எம்.ஜி.ஆர். அ.தி.மு.க' என்ற பெயரில்தான் தமது கட்சி கூட்டணியில் இருக்கும் என்று சொன்னார். அவர் அ.தி.மு.க. (2) என்று தமது கட்சிக்குப் பெயர் வைத்திருந்ததால்தான் காங்கிரஸ் கூட்டணியில் சேர்த்துக் கொண்டோம் என்பதைத் தெளிவுபடுத்தினோம். தனிக் கட்சியாக நின்று வோட்டுக்கள் பெற்றால்தான் எதிர்காலத்தில் தமக்குப் பயன் கிடைக்கும் என்று சொல்லி கைச் சின்னத்தையும் வேண்டாமென்று சொல்லி விட்டார். நான் சுற்றுப் பயணத்தில் இருந்த போதும் அர்ஜுன்சிங் அவர்களை மிக கஷ்டப்பட்டுத் தொடர்பு கொண்டு அவரது கட்சியினருக்காக எங்கள் வேட்பாளர் நால்வரை வாபஸ் வாங்க வைத்தேன். இன்று கொஞ்சம்கூட நன்றியில்லாமல் ஏதோ பேசுகிறார், பரவாயில்லை. இவர் தமிழகம் முழுதும் அறிந்த தலைவராயிற்றே! எங்கள் காங்கிரஸ் வேட்பாளருக்குப் பிரசாரம் செய்தாரா? ஆனால் நான் இவர் தொகுதி உட்பட எல்லா தொகுதியிலும் பிரசாரம் செய்தேன். ஆனால் இவரும், இவரது கட்சியினரும் பணம் கேட்டு நச்சரித்தார்கள். காங்கிரஸ் வேட்பாளர்களுக்கே பணம் கொடுக்காத நிலையில் அவர்களுக்கு எங்கிருந்து கொடுப்பது?

இந்தத் தேர்தல் தோல்விக்குப் பிறகு நான் ராஜினாமா செய்ய வேண்டும் என்று சிலர் சொல்கிறார்கள். நான் தயார். ஆனால்



## எமன் ஜோக்ஸ்

எமனிடமிருந்து பேஜர் செய்தி: ரமேஷ் உடனே மவுண்ட் ரோடுக்கு வரவும். அங்கு உங்களுக்கு ஒரு விபத்து காத்திருக்கிறது...!

ஒரு டாக்டரிடம் எமன்: என்னது... ஆபரேஷன் செய்யறதையே நிறுத்திடப் போறீங்களா... நோ, நோ! நீங்க இன்னமும் 133 பேரை மேலே அனுப்ப வேண்டியிருக்குன்னு சித்திரகுப்தன் கணக்கு சொல்லுதே?

—ராஜிராதா



''கருத்துக் கணிப்பு பற்றி ஆசிரியர் ரொம்ப எரிச்சலா இருக்கார்!''

''அப்படியா?''

''இனிமே கருத்துக் கணிப்பு வெளியிடுறப்ப 'கடைசி நேர மாறுதலுக்குட்பட்டது'ன்னு போடச் சொல்லியிருக்கார்!''

– அம்பை தேவா

கட்சியின் நிர்வாகக் குழுவும், மாவட்ட கமிட்டிகளும் நான் ராஜினாமா செய்யத் தேவையில்லை என்று தீர்மானம் போட்டு அனுப்பியிருக்கின்றன. கோவை குண்டு வெடிப்பு இல்லையென்றால் இப்போது 6 சதவித வோட்டுக்களைப் பெற்ற காங்கிரஸ், குறைந்தது 15 சதவித வோட்டுக்களைப் பெற்றிருக்கும். தமிழ்நாட்டில் இருக்கும் காங்கிரஸ் தொண்டர்களின் பலத்தில் தான் நான் இருக்கிறேன். அன்பரசு, பிரபு போன்றவர்களை அவர்கள் வீட்டில் உள்ளோர் கூட ஆதரிக்க மாட்டார்கள். அவ்வளவு 'செல்வாக்கு' அவர்களுக்கு! தமிழக காங்கிரஸ் அலுவலகப் பொறுப்பாளர்கள் அனைவரும் உட்கட்சித் தேர்தலில் வென்று பதவிக்கு வந்தவர்கள். குமரி அனந்தன் தலைவராக இருந்தபோது உள்ளாட்சித் தேர்தல் நடந்தது. அப்போது 93 சதவிகித இடங்களில் காங்கிரஸ் சார்பில் போட்டியிட ஆட்கள் இல்லை. அந்த நிலையிலிருந்து 6.5 சதவிகிதம் வோட்டு வாங்கும் அளவுக்கு உயர்ந்திருக்கிறோம். 25 தொகுதிகளில் நாங்கள் பெற்ற வாக்குகள்தான் வெற்றி- தோல்வியை நிர்ணயித்திருக்கின்றன.

மூப்பனார் மற்றும் த.மா.கா தலைவர்களுடன் தொடர்ந்து நல்ல முறையில் உறவு வைத்துக் கொண்டிருக்கிறேன். அன்னை சோனியா அவர்கள் தலைமைப் பொறுப்புக்கு வந்துவிட்ட நிலையில், மூப்பனார் காங்கிரஸில் இணைய வேண்டும் என்பது எங்கள் எல்லோரது விருப்பம். மூப்பனார் அவர்களும் நேரு குடும்பத்தின் மீது மிக்க மரியாதை வைத்துள்ளார். மூப்பனார் காங்கிரஸில் இணையும் பட்சத்தில் என் தலைமைப் பதவியையும் விட்டுக் கொடுத்துவிட்டு அவர் தலைமையின் கீழ் தொண்டனாகப் பணி புரியத் தயாராக இருக்கிறேன். மூப்பனார் காங்கிரஸுக்கு வருவதை அன்பரசு, பிரபு, திண்டிவனம் ராமமூர்த்தி போன்றோர் சுயநலம் காரணமாக எதிர்ப்பார்கள். தொண்டர்கள் பலம் இல்லாத அவர்களைக் கண்டு மூப்பனார் கவலைப்பட வேண்டியதில்லை. 2001ல் தமிழகத்தில் காங்கிரஸ் ஆட்சிக்கு வர வேண்டுமென்பதே எங்கள் அனைவரது விருப்பம்."

சந்திப்பு: **ப்ரியன்**

முகூர்த்த நேரம் நெருங்கிக் கொண்டிருக்கும் நிலையில் வெளியூரிலிருந்து வர வேண்டிய மாப்பிள்ளை வரவில்லையென்றால் பெண் வீட்டார் மனசு என்ன பாடு படும்? கிட்டத்தட்ட இதே மனநிலையில்தான் வாஜ்பேயி, மற்றும் பா.ஜ.க. முக்கியஸ்தர்கள் அன்று இருந்தார்கள். விமான நிலையத்திலிருந்து செல் போனில் பாராளுமன்ற விவகார அமைச்சரான மதன்லால் குரானாவுக்கு 'பாலயோகி வந்த விமானம் தரையிறங்கி விட்டது' என்று தகவல் வந்தவுடன் அனைவர் முகங்களும் தாமரை ஆகிவிட்டன. கடைசி நிமிடத்தில் விரைந்து வந்து மனுதாக்கல் செய்து, ஓர் அதிரடி அரசியல் சாணக்கியத்தால், இந்தியாவின் 12வது சபாநாயகராக பொறுப்பேற்று விட்டார் கண்ட மோகன சந்திர பாலயோகி.

47 வயதான பாலயோகி ஒரு வழக்கறிஞர். கல்லூரியில் படிக்கும் காலத்தில் இருந்தே தீவிர என்.டி.ஆர். ரசிகர். அதன் காரணமாக தெலுங்கு தேசத்தில் இணைந்தவர். சட்டப் படிப்பை முடித்தவுடன் நீதித்துறையில் மாஜிஸ்திரேட் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் பாலயோகி. அந்தச் சமயத்தில் என்.டி.ஆரைச் சந்தித்து, "அரசுப் பொறுப்பில் சேர்ந்து விட்டால் என்னால் தொடர்ந்து அரசியலில் இருக்க முடியாதே, என்ன செய்வது?" என்று கவலையுடன் கேட்டார். உடனே என்.டி.ஆர், "நீ அந்தப் பொறுப்பில் இருந்தாலும், உன்னை எந்த சந்தர்ப்பத்தில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று எனக்குத் தெரியும்!" என்று சொல்லி விட்டாராம்.

அதன்படி மறக்காமல் 1987ல் பாலயோகியை கிழக்கு கோதாவரி மாவட்ட ஜில்லா பரிஷத்தின் தலைவராகப் போட்டியிட வைத்து வெற்றிபெற வைத்தார். அதன் பிறகு 1991ல் அமளாபுரம் தனித் தொகுதியில் நின்று பாராளுமன்ற உறுப்பினராகவும் ஆனார் பாலயோகி.

பாலயோகிக்கு சொந்த ஊர் போலவரம் அருகிலுள்ள எதுருலங்கா என்ற மீனவர் கிராமம். அந்தக் கால கட்டத்தில் அருகிலுள்ள மும்முடிவாரம் என்ற இடத்தில் பாலயோகி



# மர்மயோகி போல வந்த பாலயோகி!

என்ற சாமியார் இருந்தார். வருடத்திற்கு ஒரு முறைதான் அவர் பக்தர்களுக்குக் காட்சி தருவார். அந்த பாலயோகியின் நினைவாகத்தான் கண்ட மோகன சந்திரனுடன் பாலயோகி என்ற பெயரை இணைத்தார்கள் அவரது பெற்றோர்கள்.

விசாகபட்டிணத்தில் பட்ட மேல் படிப்பும், சட்டமும் பயின்று கொண்டிருந்தபோது பெற்றோரைத் தொந்தரவு செய்யாமல் இரண்டு மூன்று நிறுவனங்களில் பகுதிநேர வேலை செய்து சம்பாதித்து, கல்லூரிச் செலவைச் சமாளித்துக் கொள்வாராம் பாலயோகி. 1996ல் பாராளுமன்றத் தேர்தலில், அதே அமலாபுரம் தொகுதியில் தோல்வியடைய, சில மாதங்கள் கழித்து, மும்முடிவாசம் சட்டமன்றத் தொகுதியில் நடந்த இடைத் தேர்தலில் ஆந்திர சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். என்.டி.ஆரையே எதிர்த்து நாயுடு தனி ஆவர்த்தனம் துவங்கியபோது, பாலயோகியும் நாயுடுவின் நம்பிக்கைக்கு உரியவராக அவருடன் இணைந்தார். பாலயோகிக்கு உயர்கல்வி அமைச்சர் பொறுப்பு கொடுத்தார் நாயுடு.

அவ்வப்போது கொஞ்சம் உணர்ச்சி வேகத்தில் முடிவு எடுத்துவிடுவாராம் பாலயோகி. சென்ற வருடம் கேள்வித்தாள் லீக் ஆனதற்காக தமது அமைச்சர் பதவியை ராஜினாமா செய்தார். ஆனால் நாயுடு அதை ஏற்றுக் கொள்ளவில்லை!

தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த ஒருவர், பாராளுமன்ற சபாநாயகர் ஆவது இதுவே முதல்முறை. ஜாம்பவான்கள் இடம் பெற்றுள்ள அவையில் ஆளும் கூட்டணி, மெஜாரிட்டிக்குத் தவிக்கும் சூழ்நிலையில், பாலயோகியின் பாடு திண்டாட்டம்தான்.

மர்மயோகி போல் திடீரென்று வானிலிருந்து வந்திறங்கிய பாலயோகியை, அவர் சபாநாயகராகத் தேர்வு செய்யப்பட்டவுடன் சங்மா வாழ்த்திப் பேசினார்.

பாலயோகியின் முகத்தில் ஓர் அசைவு கூட இல்லை.

"அவர் வாழ்த்தியதற்கு ஒரு புன்சிரிப்பாவது காண்பித்திருக்கக் கூடாதா?" என்று ஆந்திர காங்கிரஸ் எம்.பி. ஒருவர் கேட்கப் போக, "அதற்கு இனி நிறைய வாய்ப்புக்கள் வரும்!" என்று பதில் அளித்தார் பாலயோகி!

**- ஆரெஸ்வி, நம்பி**

## மத்திய

● ஏற்கனவே தம்மிடம் வாஜ்பேயியும், அத்வானியும் ஒப்புக் கொண்டபடி, ஆர்.கே. குமாருக்குத் தனிப் பொறுப்புடன் கூடிய நிதி இலாகா இணை அமைச்சர் பதவி கொடுக்காததால் ஜெ. மிகவும் கடுப்புடன் இருக்கிறார். அதன் காரணமாக குமாரின் பதவியேற்புகூட இரண்டு நாட்கள் தள்ளித்தான் நடந்தது. சென்னையிலிருந்து, ஜெ. விடாமல் தம் பிரஷரைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்ததால், தனிப் பொறுப்பு இல்லாவிடினும், சில கூடுதல் அதிகாரங்கள் குமாருக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றனவாம். உதாரணமாக வருமானவரி மற்றும் சுங்கத் தீர்வை இலாகாக்களில் மாநில அளவில் உயர் பதவியில் உள்ள அதிகாரிகளை இட மாற்றம் செய்யும் அதிகாரம், வங்கிகளுக்கான இயக்குனர் மற்றும் சேர்மன்களை நியமிக்கும் அதிகாரம் ஆகியன கொடுக்கப்பட்டுள்ளதாம். இதற்கிடையில் சென்னையைச் சேர்ந்த வழக்கறிஞர்கள் சிலர் ஜெ.யின் வருமான வரி வழக்குகள் பற்றிய கோப்புகளும், சசிகலாவின் அந்நியச் செலாவணி மோசடி வழக்குக் கோப்புகளும் ஆர்.கே. குமாருக்கு எந்த ஒரு முடிவுக் காகவும் அனுப்பப்படக் கூடாது என்று ஒரு வழக்கை உயர்நீதி மன்றத்தில் தொடுக்க இருக்கிறார்கள்.

● வாழப்பாடி பெட்ரோலியத் துறை அமைச்சராக நியமிக்கப்பட்டதைத் தொடர்ந்து அவர் பதவியேற்பதைக் கண்டு களிப்பதற்காகத் தமிழ்நாட்டிலிருந்து, அவரது அணுக்கத் தொண்டர்கள் சுமார் பத்துப் பேர் டெல்லி சென்றார்கள். பொதுவாக அவர்களிடம் பேசும்போது வாழப்பாடியார் "இந்தத் துறையில் மிகவும் ஜாக்கிரதையாகச் செயல்பட வேண்டும். சதீஷ் ஷர்மா அமைச்சராக இருந்தபோது, பலருக்கு முறைகேடான முறையில் பெட்ரோல் பங்கு உரிமங்களைக் கொடுத்து விட்டார். சுப்ரீம் கோர்ட் கடுமையான கண்டனம் தெரிவித்தது மட்டுமல்லாமல், உரிமங்களையும் ரத்து செய்துவிட்டது" என்றாராம். தலைவர் எதற்காக இதை நம்மிடம் கூறுகிறார் என்று நெருக்கமாக உள்ள தொண்டர்கள் மண்டையைக் குடைந்து கொண்டிருக்கிறார்கள்!

● மெர்கன்டைல் வங்கி விவகாரத்தில் தி.மு.க. மீது ஏற்கனவே "சந்தேகக் கத்தி" தொங்கிக் கொண்டிருக்கிறது. சமீபத்தில் சட்டமன்றத்தில் தாமரைக்கனி இந்த விவகாரத்தில் தி.மு.க. அரசைப் பிடி பிடி என பிடித்துக் கொண்டிருந்தபோது, நாடார் இனத்தைச் சேர்ந்த அமைச்சர்கள் இருவரும் பேசாமல் 'தேமே' என்று




அமர்ந்து இருந்ததைச் சுட்டிக் காட்டுகிறார்கள் வங்கி மீட்புக் குழுவினர். குறிப்பாக எஸ்ஸார் நிறுவனம் மற்றும் 'ஸ்டெர்லிங்' சிவசங்கரனுடன் தமிழக அரசு நடத்திய பேச்சு வார்த்தைகள் ஆலடி அருணாவுக்குத் தெரியும். ஆனால் அன்றும் வழக்கப்படி முதல்வர் எழுந்து முழுவதையும் விளக்கும்படி ஆகி விட்டது. இந்த நிலையில் 'தமிழக அரசை நம்பி ஒரு பிரயோஜனமுமில்லை; வங்கிகளுக்குப் பொறுப்பாக இருக்கும் மத்திய நிதி இணையமைச்சர் ஆர்.கே. குமாரை அணுகலாம் என்று, மீட்புக் குழுவில் சிலர் முயன்று வருகிறார்கள்.

● ஒரு பெரிய அளவில் அமைச்சரவை மாற்றம் வரும் என்று எதிர்பார்த்துக் காத்திருந்த இளம் தி.மு.க. எம்.எல்.ஏ.க்களுக்கு ஏமாற்றம். ''தலைவர் தங்கபாண்டியன் 'வேகன்ஸியை' மட்டும் நிறைத்து விட்டு விஷயத்தை முடித்து விட்டாரே'' என்று பலர் நொந்து போனார்கள். ஆனாலும் அவர்களது ஆர்வத்தைத் தக்க வைக்கும் விதமாக பட்ஜெட் கூட்டத் தொடருக்குப் பின்னர், அமைச்சரவையில் கூட்டல், கழித்தல் இருக்கும் என்று கலைஞர் அறிவித்திருக்கிறார். ''தா. கிருஷ்ணனைத் தேர்தலுக்கு முன்பே நியமித்திருந்தால், முக்குலத்தோர் மத்தியில் தி.மு.க. கூட்டணிக்குக் கொஞ்சம் செல்வாக்கு கூடியிருக்கும்'' என்று சொன்னார் தேவர் பேரவைப் பிரமுகர் ஒருவர். இதற்கிடையில் நெடுஞ்சாலைத் துறைக்கென்று தனியாக ஓர் அமைச்சர் நியமிக்கப்பட்டது குறித்து சிலாகிக்கப்படுகிறது. ஜெ ஆட்சி என்றில்லாமல், எல்லா ஆட்சிகளிலும் 'பணப் புழக்கம்' ஏராளமாக இருப்பது நெடுஞ்சாலைத் துறையில்தானாம். அதுவும் நிதியாண்டு முடியும் தருவாயில், விடுமுறை நாட்கள் உட்பட 24 மணி நேரமும் அந்த அலுவலகம் இயங்குமாம். அ.தி.மு.க. ஆட்சியில் கண்ணப்பன் பொதுப் பணித் துறை அமைச்சராக இருந்தபோது நெடுஞ்சாலை அவரிடம் இருந்தது. தி.மு.க. அரசில் துரைமுருகனிடம் இந்தத் துறை கொடுக்கப்படாமல், போக்குவரத்து அமைச்சர் பொன்முடியிடம் கொடுக்கப்பட்டது. அப்போது ''நமக்குக் கடன் கொடுக்கும் உலக வங்கி போன்ற நிதி நிறுவனங்கள் போக்குவரத்தும், நெடுஞ்சாலையும் ஒரே அமைச்சரிடம் இருக்க வேண்டும்'' என்று சொன்னதால்தான் பொன்முடியிடம் நெடுஞ்சாலை கொடுக்கப்பட்டதாகச் சொன்னார்கள். இப்போது ஏன் அது தனிமைப் படுத்தப்பட்டது என்பதில் பலருக்கும் குழப்பம்!

# அமைச்சரவையில் ம.தி.மு.க?

● 'ம.தி.மு.க. மத்திய அமைச்சரவையில் பங்கு கொள்ளாது' என்று வை.கோ அறிவித்து விட்டாலும் சேரும்படி கட்சிக்குள் பிரஷர் வந்து கொண்டிருக்கிறதாம். ''இத்தனை வருட காலம் போராடி அரசியல் செய்தோம். ஏதோ பதவியைப் பயன்படுத்தி, நாலு தொண்டர்களுக்கு நன்மை செய்தால்தானே கட்சி நிற்கும்!'' என்று சொன்னார் தாயகப் பிரமுகர் ஒருவர். ●

**— தில்லப்பா**

# பூமராங் மாப்பிள்ளை

தீபாவளிக்கு வந்த மாப்பிள்ளையும் பெண்ணும் குழந்தைகளும் மாசக் கணக்கில் டேரா போட்டு விட்டார்கள்.

மழைக் காலத்து சென்னை நகர தெருக்கள் போல் கடன் மழையில் முழுகித் தவிக்கிறேன். இனிமேல் ஆபீசில் யாரிடமாவது கடன் வாங்க வேண்டுமானால் நாளைக்கு யாராவது புதிதாக வேலைக்குச் சேர்ந்தால்தான்.

வேறு வழியில்லை. மாப்பிள்ளையை எப்படியாவது உடனடியாக ஊருக்குக் கிளப்ப வேண்டும். நேரடியாக அவரிடம் சொல்லி விடுவது என்ற ஆக்ரோஷத் தீர்மானத்தை மகள் முகம் பார்த்து கடைசி நிமிடத்தில் ரத்து செய்தேன். என்றாலும் இனியும் ஒத்திப் போட முடியாத நிலை. மாமனார் வீட்டில் மாப்பிள்ளையின் நீண்ட நாள் இருப்பை, பழைய பாலசந்தர் சினிமா பாணியில் சிம்பாலிக்காக உணர்த்துவது என்று முடிவு செய்தேன்.

ஆபீசுக்கு 'லாஸ் ஆஃப் பே' யில் ஒரு நாள் லீவு போட்டுவிட்டு புதிதாக ஒட்டடைக்குச்சி வாங்கி வந்து, வீட்டை ஒட்டடை அடிக்கத் தயாரானேன்.

ஹாலில் ஹாய்யாகச் சாய்ந்து உட்கார்ந்து டி.வி. பார்த்துக் கொண்டிருந்தார் மாப்பிள்ளை.

"என்ன மாமா திடீர்னு ஒட்டடை அடிக்கிறீங்க?"

"ரொம்ப நாளா ஒட்டடை தங்கிப் போச்சு மாப்பிள்ளை. இன்னைக்கு அடிச்சு ஒழிச்சுட்டுத்தான் மறுவேலை. இப்படியே விட்டா ஒட்டடையிலே நான் காணாம போயிடுவேன் போல இருக்கு."

"நானும் ஹெல்ப் பண்றேன் மாமா."

"வேண்டாம் மாப்பிள்ளை. நீங்க அப்படியே சாய்ந்து உக்காந்து பார்த்துக்கிட்டிருங்க. ஒட்டடை அடிக்கும்போது என்னோட உணர்ச்சிகளை க்ளோஸா வாட்ச் பண்ணுங்க. அப்போது எனக்கு ஏற்படற கோபத்தையும் ஒட்டடை ஒழிஞ்சதும் எனக்கு ஏற்படற நிம்மதியையும் கவனிங்க..."

மாப்பிள்ளை சாய்ந்து கொள்ள, நான் சர்ரென்று எகிறி மடாரென்று ஒட்டடையை ஒரு போடு போட்டேன். சரக்கென்று என் வேட்டி கிழிந்து போனது. புது வேட்டி காலி.

"பரவாயில்லை மாமா. வேறே வேஷ்டி வாங்கிக்கலாம். எனக்கும் ஒண்ணு சேர்த்து வாங்கிடுங்க!"

'தேவுடா! என்று தலையில் கை வைக்கத் தோன்றினாலும் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், வேட்டியை டப்பா மடிப்பு கட்டிக் கொண்டு ஒரு நாற்காலியில் ஏறப் போனேன். பழைய நாற்காலி உடைந்து, அடுப்பெரிக்க விறகானது. பரிதாபமும், கோபமும் கலந்து மாப்பிள்ளையைப் பார்த்தேன்.

"நான் பார்த்துக்கிட்டுத்தான் இருக்கேன் மாமா. நல்லா தமாஷா இருக்கு!"

மேஜை மேல் ஏறலாமென்று மேஜையை இழுத்தேன். சற்றுக் கோபமாக இழுத்து விட்டேன் போலிருக்கிறது. மேஜை மேலிருந்த ரேடியோ, பீங்கான் ஜாடி, டைம்பீஸ் என்று சகலமும் கீழே விழுந்து நொறுங்கின.

"பார்த்து மாமா."

"நான் பார்த்துத்தான் செய்யறேன் மாப்பிள்ளை. எனக்கு எதுவும் அடிபடாது. நீங்க நல்லா பாருங்க."

"உங்களுக்கு அடிபடறதைப் பத்தி நான் சொல்லலை மாமா. சாமானெல்லாம் போட்டு உடைக்கறீங்களே. திரும்ப வாங்க முடியுமா? யார் கடன் கொடுப்பாங்க!"

ஆக என் நெற்றி ஸ்டிக்கர் இவருக்குத் தெரிந்திருக்கிறது. தெரிந்துமா என்னை ஒட்டடை அடிக்கிற நிலைமைக்குக் கொண்டு வந்து விட்டிருக்கே? அடேய் மருமகா, பெருங் கடன்காரா!

அ. வின்சென்ட்

அடுத்த ஒட்டடையை அடிப்பதற்குள் ஒரு டியூப் லைட்டும் ஒரு சாமி படமும் உடைந்து போயின.

மாப்பிள்ளைக்கு நஷ்டம் அழுவது போதாதென்று, ஒட்டடை வைபவத்தால் ஏற்பட்ட இலவச இணைப்பு நஷ்டங்களும் சேர்ந்து கொண்டு, என்னைக் கடுங் கோபத்துக்கு ஆளாக்கியது. ஒட்டடைக்குச்சியை அருணாச்சலம் ரஜினி ஸ்டைலில் கூரை மேல் அடித்தேன். ஒட்டடைக் குச்சி திரும்பி வந்து என் முகத்தைத் தாக்கியது. தள்ளாடி மேஜையிலிருந்து கீழே விழுந்தேன். கீழே விழுந்தபோது அடிபட்ட இடங்களுக்கு ஒத்தடம் கொடுப்பதுபோல், தரையிலிருந்த உடைந்த கண்ணாடித் துண்டுகள் உடம்பில் அங்கங்கே ஏறிக் கொண்டன.

வலியில் அலறித் துடித்துத் தோல்வியில் கதறி அழுத என்னைத் தூக்கி விட்டு, கைத்தாங்கலாகக் கூட்டிப் போய் உட்கார வைத்தார் மாப்பிள்ளை.

"ரொம்ப டயர்டாயிட்டிங்க மாமா. ஒரு சின்ன ஒட்டடை அடிக்கிற வேலை இத்தனை சுவாரஸ்யமான விஷயம்னு எனக்கு இன்னைக்குத்தான் தெரிஞ்சுது. ரொம்ப சிரத்தையா பண்ணீங்க. உங்க முகத்துலேதான் எத்தனை பாவம்! சூப்பர் மாமா! ஆனா ஒட்டடை ஒழியறதுக்குப் பதிலா, ஒட்டை உடைசல்தான் சேர்ந்து போச்சு. ஹால் வரைக்கும் இப்போதைக்குப் போதும். மிச்ச சாமான்களை நாங்க இன்னைக்கு மதியம் ஊருக்குப் புறப்பட்டுப் போனப்புறம் உடைங்க!"

சட்டென்று எழுந்து கொண்டேன். கண்களில் பெருகிய ஆனந்தக் கண்ணீரோடும், காயங்களில் பெருகிய சோக ரத்தத்தோடும் மாப்பிள்ளையைத் தழுவிக் கொண்டேன். ஒட்டடை சிம்பாலிஸம் ஓர்க் அவுட் ஆயிடுச்சு, சில பல கஷ்ட நஷ்டங்களோடு. பாலசந்தருக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் அவர் பாணியிலேயே 'சக்ஸஸ்! வெற்றி!' என்று மொழி பெயர்ப்போடு கத்திக் கொண்டே ஆனந்தக்கூத்தாடினேன்.

மாப்பிள்ளையும் பெண்ணும் ஊருக்குப் புறப்பட்டுப் போன அடுத்த நாள். அடுத்த வீட்டில் எனக்கு ஃபோன் வந்திருப்பதாகக் கூப்பிட்டார்கள்.

பேசியது என் பெண். "அப்பா! மாசக் கணக்குலே வீடு பூட்டியிருந்ததாலே வீடு முழுக்க ஒட்டடை சேர்ந்திருந்துச்சு. ஒட்டடை அடிக்கிறேன்னு ஏணியிலே ஏறின உங்க மாப்பிள்ளை கீழே விழுந்து காலை உடைச்சிக்கிட்டாரு. ஊருக்குக் கூட்டிக்கிட்டு வந்து நம்ம வீட்டுலே வைச்சுத்தான் வைத்தியம் பார்க்கணும். அதனால அவரக் கூட்டிக்கிட்டு அங்க தான் இப்ப வந்துக்கிட்டிருக்கேன்..." என்று அழுதாள்.

# 'ஜெ' தர்மதேவதையாகி விடுவாரே...?

● வெ. நீலா, மன்னார்குடி.

*? ஒவ்வொரு நாட்டுக் கொடிக்கும் இலட்சியம் இருப்பது போல், அரசியல் கட்சிகளின் கொடிகளுக்கு என்னென்ன இலட்சியங்கள் உள்ளன?*

! ஆட்சியைப் பிடிப்பது என்கிற ஒரே இலட்சியம்தான்! அப்படிப் பிடிக்க முடியா விட்டால், குதிரை வியாபாரத்திலாவது பணம் பண்ண வேண்டும் என்பதுதான்.

● செ. சக்திராஜ், திருச்சி – 17.

*? நிலையற்ற மத்திய அரசுக்குக் காரணம் 'வாஸ்து சாஸ்திரப்படி' பாராளுமன்றம் கட்டப்படாததுதான் என்கிறாரே அஜய் பாரத் கட்சியின் சந்தோஷ் சிங்?*

! சமீப சரித்திரத்தைக் கூட எண்ணிப் பார்க்காதவர்களின் அரை வேக்காட்டுப் பேச்சு.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

*? வாஜ்பாய் பிரதமராகப் பதவியேற்ற நாளில் குண்டு வெடிக்காமல் பார்த்துக் கொண்ட 86,000 போலீசாருக்குத் தலா ஆயிரம் ரூபாய் பரிசளிப்பதாக முதல்வர் அறிவித்துள்ளது தவறான முன்னுதாரணம் ஆகி விடாதா?*

! நிச்சயமாகத் தவறான முன்னுதாரணம் தான்! கடமையைச் செய்ய யாருக்கும் ஊக்கத் தொகை கொடுக்கவே கூடாது. அது சோம்பலை வளர்க்கும். கடமைக்கும் மேலாக சாதனை புரிந்தவர்களுக்குத் தரலாம். அது செயல் திறனை வளர்க்கும்.

● ராஜி, கமுதி.

*? ராமர் கோவிலைக் கட்ட முயற்சி செய்தால் பாஜ. ஆட்சியைக் கவிழ்ப்பேன் என்று 'அரசியல் ஜோதிடர்' சொல்லியிருக்கிறாரே?*

! மஸ்ஜித் தகர்க்கப்பட்ட இடத்தில் அவர்கள் ராமர் கோயிலைக் கட்ட முயற்சி மேற்கொள்ளப் போவதுமில்லை; இவர் அதற்காக அவர்களைக் கவிழ்க்க வேண்டிய அவசியம் நேரப் போவதுமில்லை. ஆனால் ஒன்று.... 'சிவபெருமானின் உறைவிடமாகக் கருதப்படும் கைலாசம், சீனாவின் ஆதிக்கத்தில் உள்ளது; அதை பி.ஜே.பிக்காரர்கள் மீட்க முன்வரட்டுமே' என்ற சு. சுவாமியின் நக்கல், டாப்! Give the devil its due!

● கே. என். செந்தில்குமார், வைரிசெட்டிபாளையம்.

*? ரஜினி, எம்.ஜி.ஆரை விட ஐந்து மடங்கு அதிகம் 'வாய்ஸ்' உள்ளவர் என்று சோ கூறுகிறாரே?*

! வாஸ்தவம்தான். சுடப்பட்ட விபத்துக்குப் பிறகு எம்.ஜி.ஆர். குரல் கம்மி விட்டதே...! அதைச் சொல்லியிருப்பார்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

*? மத்திய ஆட்சியின் 'சக்தி 98' ஆக ஜெயலலிதா விளங்கப் போவதாகக் கூறப்படுவது பற்றித் தங்களின் கருத்து...?*

! ஜெ ஆதரவு பிஜேபி ஆட்சிக்கு ஐ.ஸி.யூவில் கொடுக்கப்பட்ட ஆக்ஸிஜன் தான். சந்திரபாபு நாயுடுவின் பல்டி என்கிற மருந்தும் டானிக்கும்தான் அந்த ஆட்சியை இப்போது ஸ்பெஷல் வார்டுக்குக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறது.

● சீதாமகன், திருவண்ணாமலை.

*? தமிழகத்துக்கு அதிமுக்கியம் மத்திய அரசு உதவிகளா? மாநில அரசு உதவிகளா?*

! உதவியா...? கடமைகள் ஐயா! கடமைகள்! தமிழகத்துக்கு ஆற்ற வேண்டிய கடமைகளை நிறைவேற்றட்டும். ரேஷன் கார்டு இன்னமும் இழுபறி; மின்சார வெட்டு பிரும்மாண்ட பயமுறுத்தல்; இன்னும் பல... பட்ஜெட்டில் புதுச் சுமைகள் ஏற்றாமலிருந்தாலே பெரிய உதவி.

● மல்லிகை மன்னன், மதுரை – 17.

*? அரசியல் சதுரங்க விளையாட்டில் மிகவும் கெட்டிக்காரத்தனமாக விளையாட ஆரம்பித்திருக்கிறாரே சார் சோனியா காந்தி...?*

! கேசரியை எளிதில் வென்று கிராண்ட் மாஸ்டர் பட்டம் பெறலாம்; ஆனால் இப்போது பவார், அர்ஜுன் சிங் போன்றவர்களோடு ஆடி ஜெயிக்க வேண்டும் என்னும் போது கிராண்ட் மாஸ்டர் பட்டத்தை



• வெற்றி தொடருமா?

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :



எத்தனை காலம் தக்கவைத்துக் கொள்ள முடியும் என்ற கேள்வி எழுந்தான் செய்கிறது.

● ஆர். தமிழரசி,
மூலக்குப்பம்.

? எம்.ஜி.ஆர். இறுதி ஊர்வலத்தில் 'ஜெ'யின் நடிப்பு; 1989 தி.மு.க. பட்ஜெட் தாக்கலின்போது சட்டசபையில் நடைபெற்ற ஜெ.யின் நடிப்பு. ஆளுனர் சென்னா ரெட்டி குறித்து அபாண்ட புகார் செய்த ஜெவுடைய நடிப்பு; இனி நகைகள் அணிய மாட்டேன் என்று சபதம் செய்த நடிப்பு; 'அத்வானியும் வாஜ்பாயும் என்னை இரண்டாந்தரப் பிரஜை போல் நடத்துகிறார்கள்' என்று அங்கலாய்த்த 'ஜெ'யின் நடிப்பு... இதில் எந்த நடிப்பு சார் உங்கள் மனத்தைத் தொட்டது?

! தமிழ்நாட்டின் நலன் காக்கும் அ.தி.மு.க.வின் திட்டங்களை தேசிய செயல் திட்டத்தில் சேர்த்துக் கொண்டு விட்டதாக நடிக்கும் லேட்டஸ்ட் நடிப்புத்தான் சூப்பர்ப்!

● கு. அருணாசலம், தென்காசி.

? சென்னை, கோடம்பாக்கத்தில் பிடிபட்ட சம்சுதீன் – ஆரிப்பேகம் தீவிரவாத தம்பதி, "நாங்கள் மட்டும் தீவிரவாதிகள் அல்ல. எங்களுக்குப் பிறக்கப் போகும் குழந்தையும் தீவிரவாதியாகத்தான் இருக்கும்" என்று ஜம்பமாகச் சொல்லியுள்ளது பற்றி?

! இப்படிப் பேச வைப்பது கூலிப் பணம் மட்டுமல்ல... வெறியர்கள் வளர்த்து விடும் துவேஷமும்தான். ஈச்வர அல்லா தேரே நாம் சப்கோ சன்மதி தே பகவான்! என்பது போன்ற காந்திஜியின் பிரார்த்தனைகளை, நமது தலைவர்கள் 'மதச் சார்பின்மை' என்ற மாயைக்குக் கட்டுப்பட்டுக் கைவிட்டதன் பலன்.

● செ. சல்மான், பாம்பன்.

? கவர்னர் உரையின் போது அ.தி.மு.க. உறுப்பினர்கள் கறுப்புக் கொடி காட்டியது குறித்து...?

! ஜெயலலிதாவின் ஆசியோடு(?) வேண்டுமென்றே செய்த அநாகரிகம். கீழ்த்தரமான செயல்.

● ஜி. பாரதி, கோவை – 4.

? நீங்கள் மயங்குவது எந்தப் பூவின் மணத்தில்...?

! பாரிஜாதம், மல்லிகை, ஜாதி, சம்பங்கி, செண்பகம் என்று எத்தனையோ இருந்தாலும் இருந்தும் இல்லாதது போன்ற நளினமான சுகந்தம் பன்னீர்ப்பூவினுடையது. அந்த அடக்கமான வெண்முத்து மலர்களிடம் சரணாகதி அடைகிறேன்!


• ...யலாமும்!


• சக்தி!


• குரலும்....

• கடமைக்கு போனஸ்!


• நக்கல் நாயகன்!

● எம். அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி.

? எனது ஒரு வோட்டில்தான் பி.ஜே.பியின் ஆயுள் ஓட்டிக் கொண்டிருக்கிறது என்கிறாரே சு. சுவாமி...?

! பாவம் சு. சுவாமி! நாயுடுதான் அந்த நிலையை மாற்றி விட்டாரே!

● தாமரைச் செல்வி, கோவை. ❑

? சட்டத்துறை இலாகாவை அ.தி.மு.க. வசம் ஒப்படைத்ததற்கு இப்பொழுது எதிர்ப்புக் குரல் வலுக்கவில்லையென்றால் ஜெயலலிதா தர்மதேவதையாகி விடுவாரே...?

! எதிர்ப்புக் குரல் ஒலிக்க ஆரம்பித்துள்ளது... சேடபட்டி அமைச்சராக்கப்பட்டிருப்பதை எதிர்த்து பொதுநலநோக்கு மனு கூட பிறூசினல் தொடுத்திருக்கிறது. அதர்மத்துக்கு எதிராகக் குரல் கொடுக்க இன்னமும் சிலர் இருக்காங்களேன்னு சந்தோஷப்படுங்க!

● எஸ். சீதாராமன், கும்பகோணம்.

? பாராளுமன்றத் தேர்தலில் பாதிக்கப்பட்ட தி.மு.க. பஸ் கட்டண உயர்வைக் குறைக்க முயற்சி செய்யுமா...?

! அதான் குறைச்சுட்டாங்களே – கி.மீ.க்கு இரண்டு பைசா! ஒட்டகத்து முதுகிலே ஒரு பொதியை ஏத்திட்டு, ஒரே ஒரு வைக்கோல் குச்சியை மட்டும் உருவிப் போட்டால், எழுந்து ஓடுமாம்! ⭘

ாமரைச் செல்வி, P. பத்மா, 165, சாஸ்திரி வீதி, இராம் நகர், கோவை - 641 009.

# Are You Appearing For Engg Entrance?
# If So Please read......

A Specially developed Software package to fulfill your plus two dreams....




**SHREYAASENGINEERING ENTRANCE PACKAGE**

With a team of the best academics at hand to guide you through the TNPCEE ( Tamil Nadu Professional Courses Entrance Examination) to the portals of Tamil Nadu's premier engineering colleges.



...Made easy and ready to consume

- **33**hrs of intensive training per week.
- **24**hrs access to lab
- a comprehensive course material that contains all question (with answer) that appeared in TNPCEE Exams until last year.
- a supplimentary question bank created by eminent academics.
- an interactive software that gives you instant performance evaluation.
- trend - based model - question papers set by the computer.

## Surely, SEEP is your best bet in getting you an engineering seat. If not, you get your money back.

**First in India which provides computer aided training**

**Nearly 87% of the questions predicted by us, appeared in last year's TNPCEE exams**




**SHREYAAS SOFTWARE SOLUTIONS**
**in association with**
**SRICHAKRA'S CONCEPT 21**
**(Near S.B.O.A Mat. Primary School)**
**✆ 6282869 / 6285959**

## COMPUTERISED TRG. & MONEY BACK GUARANTEE



# என்.எம். 75:
# பேரறிவாளன் திரு!

தொழில் வர்த்தகத்தில் மேன் மேலும் வளர்ந்து கொடிகட்டிப் பறக்கிற வர்கள் பலர் உண்டு. ஆனால் சில கொள் கைகளை வைத்துக் கொண்டு அவற்றை விட்டுக் கொடுக்காமலும் சமரசம் செய்து கொள்ளாமலும் முன்னேறு கிறவர்கள் அபூர்வம். பொள்ளாச்சி நா. மகாலிங்கம் அப்படிப்பட்ட ஒருவர். அதுவே அவரது தனித் தன்மை.

ஓர் உதாரணம் : ஒரு கால கட்டத்தில் அயல்நாட்டு சுற்றுலாப் பயணிகளை நிறைய ஈர்க்க வேண்டும் என்பதற்காக ஐந்து நட் சத்திர ஓட்டல்கள் அமைக்க அரசு நிறைய உதவி செய் தது. "இந்தச் சலு கையைப் பயன் படுத்திக் கொண்டு விரிவாக்கத்தில் இறங்கலாமே" என்று ஒரு சமயம் நான் மகாலிங்கத் திடம் பேச்சு வாக்கில் குறிப்பிட்டேன்.

அதற்கு அவர், "ஓட்டல் தொழில் எனக்கு சரிப்பட்டு வராது. நடத்த முடியாது என்ப தில்லை; ஆனால் என் கொள்கைகளை விட்டுக் கொடுக்க வேண்டியிருக்கும். ஐந்து நட்சத்திர ஓட்டல் என்றால் அசைவ உணவு பரிமாற வேண்டும்; பார் வைக்க வேண்டும்; நைட் கிளப் நடத்த வேண்டும்; இன்னும் சில தப்பான காரியங்கள் நடந்தாலும் கண் டும் காணாதது போல் இருந்து விட வேண் டும். இதெல்லாம் என்னால் முடியாது" என் றார்.

அப்போது மகாலிங்கத்தின் உள்ளம் பாதி அளவு எனக்குப் புரிந்தது. பணம் பண்ணுவ தற்காக இவர் தமது கொள்கைகளை விட்டுக் கொடுக்கத் தயாரில்லை என்பது ஐம்பது சத வீதம். அடுத்த என் கேள்விக்கு விடை கிடைத்தபோது, அவர் உள்ளம் நூறு சதம் புரிந்து போயிற்று.

"அப்படியானால் எத்தகைய தொழில்கள் நடத்த விரும்புகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"விவசாயம் தொடர்பான தொழில்களுக் குத்தான் முக்கியத்துவம் தர வேண்டும்" என்

நார் என்.எம். காரணங்களையும் விளக்கி னார்: "நமது தேசத்தின் ஜனத் தொகையில் பெரும்பாலானவர்கள் விவசாயிகளே. எனவே நாம் ஆரம்பித்து நடத்தும் தொழில் கள் அவர்களுக்கு உதவுவதாக இருக்க வேண் டும். அவர்களை உயர்த்த வேண்டும். விவ சாயிகள் நிலை மேம்படவில்லை என்றால் நாட்டுக்குப் புதிய பிரச்னைகள் முளைத்துக் கொண்டே இருக்கும். இது தவிர இன்னொரு காரணமும் இருக்கிறது. விவசாயம் தொடர் பான தொழில்களில் நல்ல நிர்வாகம் இருப் பின் நஷ்டம் ஏற்படாது என்று நான் நம்பு கிறேன். ஏனென்றால், உணவு என்பது மனித னுக்கு இன்றியமையாதது!"

ஆக, தொழில் நடத்துவது சுய லாபத்துக் காக மட்டுமல்ல; அதிலே சமுதாய நலனும் பின்னிப் பிணைந்திருக்க வேண்டும் என்பது மகாலிங்கத்தின் மறுபாதி உள்ளம். இதை

**"திடீர்னு நம்ம படத்தில் ஏன் ஒரு டாக்டர் கேரக்டரை சேர்த்திருக்கீங்க?"**

**"நீங்கதானே இந்த சப்ஜெக்டுக்கு கொஞ்சம் வித்தியாசமான ட்ரீட்மென்ட் கொடுக்கச் சொன் னீங்க!"**

**— வெ. ராஜாராமன்**



விளங்க வைத்த அவர் பதிலில், 'நல்ல நிர் வாகம் இருப்பின்...' என்று ஒரு நிபந்தனை போட்டிருந்தார்.

"நல்ல நிர்வாகம் என்று எதைக் கருது கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"அதைத் திருவள்ளுவரே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் சொல்லியிருக்கிறாரே" என்றார் என்.எம். "எல்லாவற்றையும் நாமே இழுத்துப் போட்டுக் கொண்டு செய்து கொண்டிருக்கக் கூடாது. திறமையானவர் களைத் தேர்ந்தெடுத்து அவர்களிடம் பொறுப்புக்களை ஒப்படைத்து சுதந்திரமாக இயங்க அனுமதிக்க வேண்டும். தப்பு நேராமல், சோம்பல் புகாமல் கண்காணித்துக் கொண்டிருந்தால் போதும். சிறப்பான செயல்பாட்டினை அவ்வப்போது தட்டிக் கொடுத்துக் கொண்டு போக வேண்டும்.

"இதனை இதனால் இவன் முடிக்கு என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்."

இதைத் தவிர, ராஜாஜிக்கு மிகவும் பிடித்தமான இன்னொரு குறள் வழிப்படியும் மகாலிங்கம் நடந்து கொண்டு வருகிறார். 'மகாத்மா காந்தியின் தர்மகர்த்தா கொள்கை முழுவதும் இந்தக் குறளின் இரண்டு வரி களிலே அடங்கி விட்டது' என்று வியந்து கூறுவார் ராஜாஜி.

ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்
பேரறிவாளன் திரு.

அதாவது ஊருக்கு மத்தியில் உள்ள கேணி எப்படி ஊரார் அனைவருக்கும் நீர் கொடுத்துக் கொண்டிருக்கிறதோ, அப்படி ஒரு செல்வந்தனின் திரவியம் சமுதாயத் துக்குப் பயனாக வேண்டும். அவனே பேரறி வாளன்.

மகாலிங்கம் தமது செல்வத்தைப் பல தொழில்களில் முதலீடு செய்து வேலை வாய்ப்புக்களைப் பெருக்கியதன் மூலமே பேரறிவாளன் ஆகிறார். அதைத் தவிர அந்தத் தொழில்களிலிருந்து தம் பங்குக்குக் கிடைக்கும் வருவாயின் பெரும் பகுதியையும் பல்வேறு நற்பணிகளுக்கே செலவிட்டு வரு கிறார்.

ராமலிங்கர் பணிமன்றம் என்பதாக ஓர் அறக்கட்டளை நிறுவி அதன் மூலம் பல அரிய நூல்களை வெளியிட்டு வருகிறார்; அல்லது, நூல்கள் வெளியிட பதிப்பகங் களுக்கு உதவி வருகிறார். இந்த உதவி இல்லையெனில் தமிழ் இலக்கியத்துக்கும் ஆன்மீகத்துக்கும் பேரிழப்பாகியிருக்கும். சைவ வைஷ்ணவ பக்தி இலக்கியங்கள் சில வற்றை இந்தியிலும் ஆங்கிலத்திலும் ஒலி மாற்றமும் மொழி பெயர்ப்பும் செய்து பிர சுரித்திருக்கிறார்.

கல்விக் கூடங்கள் நிறுவியிருக்கிறார். வேலையில்லாத் திண்டாட்டம் குறைய தொழில் கல்விதான் உதவும் என்று உணர்ந்து, தகப்பனார் பெயரால் நாச்சிமுத்து பாலிடெக்னிக் நடத்தி வருகிறார். ஆண்டு தோறும் வள்ளலார் - காந்தி விழா, பாரதி விழா, தமிழிசை விழா எல்லாம் அவர் பொறுப்பில் நடைபெறுகின்றன. இவற்றை சொற்பொழிவுகளோடு முடித்து விடாமல் ஆய்வரங்குகளையும் நடத்தி பல்வேறு பிரச்னைகள் குறித்து அறிஞர் பெருமக்களின் கருத்துக்களைத் தொகுத்து சம்பந்தப்பட்ட

வர்களின் பார்வைக்குக் கொண்டு போகிறார். இதற்கு முக்கியக் காரணம் மகாலிங்கமே ஒரு சீரிய சிந்தனையாளர் என்பது தான். தேசத்தை எதிர் நோக்கும் எந்தப் பிரச்னை யானாலும் சரி, அதற்கு அவரிடம் தெளிவான, யதார்த்தமான, காரிய சாத்திய மான தீர்வு இருக்கும். இந்தச் சிந்தனைகளின் தொகுப்பு சில நூல்களாகவும் வெளிவந்துள்ளன. இவையெல்லாம் பிரபலமடைந்தது போலின்றி அவரது வேறு சில அறப் பணிகள் யாருக்கும் தெரியாமலே நடந்திருக்கின்றன. அவற்றுள் ஒன்று தொழு நோயாளிகளின் புனர் வாழ்வுக்கு அவர் எடுத்துக் கொண்ட முயற்சி.

இதனாலெல்லாம் 'அருட் செல்வர்' என்று அழைக்கப்படுவதற்கு முற்றிலும் தகுதி பெற்று விட்ட பொள்ளாச்சி வள்ளலின் 75வது பிறந்த தின விழா, அண்மையில் சென்னையில் கொண்டாடப்பட்டது. அன்று பேசிய சிலர், 'அவருக்குக் கோபம் வந்தே பார்த்ததில்லை' என்று சொன்னார்கள். ஆனால் நான் அவருக்குக் கோபம் வந்த போது அருகிலிருந்திருக்கிறேன். அப்போது நான் சிரிப்பை அடக்கிக் கொள்ள ரொம்ப சிரமப்பட வேண்டியிருந்தது! ஏனெனில் மகாலிங்கத்தின் கோபம், கடுகடுப்பாக மாறி, சிடு சிடுப்பாக சிறுத்துப் போய், ஒரு மிருதுவான அதட்டலாக முடிந்ததுதான். அவரால் குரலைக் கூட உயர்த்த முடியவில்லை. அதனால் என்ன? தவறு புரிந்தவர் 'ஐயாவுக்கு மனக்கஷ்டத்தைத் தந்து விட்டோமே' என்ற எண்ணத்திலேயே துடி துடித்துப் போனாரே, அது போதாதா? தவறு திருத்தப்படும் என்பதற்கும் மறுபடி நேராது என்பதற்கும் அதை விட வேறு உத்தரவாதம் என்ன வேண்டும்!

ஒரே ஒரு விஷயத்தில் மகாலிங்கம் படு தோல்வி அடைந்திருக்கிறார். அது அரசியலில் புகுந்து நல்லது செய்யலாம் என்ற நோக்கத்தில் எம்.எல்.ஏ. ஆகக் கூட இருந்திருக்கிறார். ஆனால் சீக்கிரமே அவருக்குப் போதும் போதும் என்றாகி விட்டது. அதுவே தமிழ் நாட்டின் நல் அதிர்ஷ்டமாகவும் முடிந்தது. எம்.எல்.ஏ. ஆகவோ, மந்திரியாகவோ இருந்து சாதிக்கக் கூடியதை விடப் பல மடங்கு அதிகமாக தேசத்துக்குச் செய்திருக்கிறார் என்.எம்.

தகப்பனார் ஆரம்பித்து நடத்திய பஸ் போக்குவரத்துத் தொழிலில் ஈடுபட்டு வெகு வேகமாக முன்னேறி பிரமிக்கத்தக்க வளர்ச்சி

''பாங்க்லேர்ந்து பணம் எடுத்துக் கிட்டு வந்தப்ப யாரோ பிடுங்கிட்டு ஓடிட்டான் சார்...''

''சரி... பாங்க்ல உனக்கு இன்னும் எவ்வளவு பணம் பாக்கி இருக்கு?''

— சீர்காழி
வி. ரேவதி



♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

பெற்றுள்ள என். மகாலிங்கம், இன்று தமது 75வது வயதில் தமது நன்மக்கள் மேன்மக்களாக விளங்குவது கண்டு மன நிறைவு கொள்ளலாம். அவருக்குப் பல்லாண்டு கூறும் போதே வாழையடி வாழையாக வளர்ந்து வரும் அவரது வாரிசுகளுக்கு வாழ்த்துச் சொல்லி மகிழலாம்.

எத்தனையோ கோயில்களுக்கு எவ்வளவோ செய்திருக்கிற மகாலிங்கம், ஒரு சமயம் ஒரு கோயிலின் அறங்காவலர்களால் சூழ்ந்து கொள்ளப்பட்டார். "எங்க கோயிலுக்கு ஒரு யானை வேண்டும்" என்று அவர்களுடைய ஆசையை வெளியிட்டனர். உடனே மகாலிங்கம் அந்தக் கோயிலுக்கு எந்தெந்த வழிகளில் எவ்வளவு வருமானம்; எந்தெந்த முறைகளில் எவ்வளவு செலவு என்றெல்லாம் கணக்குப் பார்க்க ஆரம்பித்து அவர்களைக் குடைந்தெடுத்து விட்டார். யானை கேட்டவர்கள், 'பூனை கூட வேண்டாம், ஆளை விட்டால் போதும்' என்ற நிலைக்கு வந்து விட்டார்கள். கடைசியாக மகாலிங்கம், "உங்கள் கோயிலின் வருவாயை வைத்துப் பார்க்கும்போது யானை கட்டித் தீனி போட உங்களால் முடியாது என்று புரிகிறது. அதனால் யானையின் பராமரிப்புக்கு என்று ஒரு கணிசமான தொகையை வங்கியில் வைப்பு நிதியாகப் போட்டு விடுகிறேன். அதிலிருந்து வரும் வட்டி யானையின் பராமரிப்புக்கு மட்டுமே செலவாக வேண்டும் என்பது நிபந்தனை" என்றார். அவ்வாறே செய்து யானையையும் வாங்கிக் கொடுத்தார்.

மகாலிங்கம் என்ற அருளாளரை மட்டுமின்றி, சிந்தனையாளரையும் வெற்றியாளரையும் ஒரே சமயத்தில் இனம் காட்டும் நிகழ்ச்சி இது. ●

— கி. ராஜேந்திரன்

# பட்டுக்கோட்டை பிரபாகர்

**காதல் டைரிக் குறிப்பு:**

**நீ அருகில் இருந்தால்தான் என் உலகம் பூர்த்தியடைகிறது.**

**என் கண்களை உற்றுப் பார்த்தால் என் இதயம் சிரிப்பதை உணர முடியும்.**

"என்ன பதிலைக் காணம்?" என்றார் லால்சந்த்.

மூன்று வட்டி வரையில் சமாளித்துவிட முடியும் என்றுதான் அரவிந்த் மனத்தில் தனக்குள் போட்டு வைத்திருந்தான்.

அதனால் சேட்டு நான்கு வட்டி கணக்கு போட்டு, தவணைத் தொகையைச் சொன்னதும் அதிர்ச்சியாக இருந்தது.

"வந்து... வட்டி கொஞ்சம் அதிகமாத் தெரியுது. நானோ புதுசா தொழில்ல இறங்கறேன். ஏற்கனவே ரொம்ப போட்டி உள்ள தொழில் இது. ராத்திரி பகலா உழைக்கணும். அலைஞ்சி திரிஞ்சி மிஷினுக்கு ரெஸ்ட் கொடுக்காம வேலை வெச்சிட்டிருக்கிறதுக்கு ஆர்டர் பிடிக்கணும்."

"இருங்கோ தம்பி. இதெல்லாம் உங்க தொழில்ல உள்ள பிரச்னை. எந்தத் தொழில்ல பிரச்னை இல்லை? சினிமாவுக்கு ஃபைனான்ஸ் பண்றது சுலபமான வேலைன்னு நினைக்கிறீங்களா? பெரிய ஆர்ட்டிஸ்டு கால்ஷீட் காமிச்சி பூஜை போடறாங்கோ. நம்பி ஃபைனான்ஸ் பண்றோம். அந்த ஆர்ட்டிஸ்ட்டுக்கு ரெண்டு படம் ஓடாமப் போச்சின்னா இந்தப் படத்துக்கு டிஸ்ட்ரிபியூட்டர் அட்வான்ஸ் தர மாட்டான். படம் நிக்கும். படம் முடிஞ்சாத்தான் எனக்குக் காசு. கொடுத்த காசை எப்படி வசூலிக்கிறது? மானத்துக்கு பயந்தவன், தொடர்ந்து இன்டஸ்ட்ரில இருக்கணும்னு நினைக்கிறவன் வீடு, மனைன்னு வித்தாவது செட்டில் பண்ணிடுவான். சொத்தே இல்லாதவன்கிட்ட எப்படி வசூலிக்கிறது? அதனாலதான் இப்ப எங்க அசோசியேஷன்ல தீர்மானமே போட்டுட்டோம். மொத்த பட்ஜெட்ல முப்பது பர்செண்ட் பணத்தைப் போட்டு படத்தை எடுக்க ஆரம்பி, அதுக்கப்புறம் நாங்க ஃபைனான்ஸ் பண்றோம்னு சொல்றோம். அநியாய வட்டின்னு தெரியலாம். போடற முதலுக்கு, தேற தொகைக்கும், பண்ற செலவுக்கும் கணக்குப் போட்டா நியாயமான வருமானம் தான் தம்பி" என்றார் லால்சந்த்.

"நீங்க அநியாய வட்டி சொல்றிங்கன்னு நான் சொல்லலை சார். எனக்கு கட்டுப்படியாகுமான்னுதான் யோசிக்கிறேன்."

"ஒண்ணும் அவசரம் இல்லை தம்பி. நல்லா யோசிச்சி முடிவு பண்ணுங்க. நாளைக்கு பணம் திருப்பித் தர்றதில பிரச்னை எதுவும் இருக்கக் கூடாது. நாளைக்கு நான் பாம்பே போறேன். பதினஞ்சி நாள் கழிச்சி திரும்பி வருவேன். உங்க முடிவை அப்போ சொல்லுங்க."

"பதினஞ்சி நாளாகுமா?"



# நான் உன்னை சுவாசிக்கிறேன்

## 13

''உங்களுக்கு அதுக்குள்ளே பணம் தேவைப்படுதா?''

''நான் பார்த்து விலை பேசி வெச்சிருக்கிற செகண்ட்-ஹேண்ட் மிஷினுக்கு இன்னும் அட்வான்ஸ் எதுவும் தரலை. இன்னும் ஒரு வாரத்துக்குள்ளே பேசின மொத்தத் தொகையும் கொடுத்துட்டு மிஷினை டெலிவரி எடுத்துக்கறதாச் சொல்லிருக்கேன். அந்த பார்ட்டிக்கு கொஞ்சம் பண நெருக்கடி. அதனால மார்க்கெட் மதிப்பை விடவும் அறுபதாயிரம் ரூபா குறைச்சலா எனக்குத் தர ஒத்துக்கிட்டிருக்கான். ஒரு வாரத்துக்குள்ளே நான் டீலிங் முடிக்கலைன்னா அவன் வேற யார்கிட்ட வேணும்னாலும் வித்துடுவான். இந்த விலைக்கு வாங்க நிறையப் பேர் தயாரா இருக்காங்க. அதிக தேய்மானம் இல்லாத மிஷின். கம்பெனியோட கேரண்டி பீரியட் இன்னும் முடியலை. அதனால தாமதம் செய்யாம வாங்கிடணும்னு நினைக்கிறேன் சார்.''

''வட்டி எவ்வளவுன்னு சொல்லிட்டேன். முதல் ஆறு மாசத்துக்கு திருப்பித் தர முடியாதுன்னு நீங்க சொன்னதுக்கும் ஒத்துக்கிட்டேன். இருபத்தி நாலு தவணையில அடைக்கிறதாச் சொன்னீங்க. ஏழாம் மாசத்திலேர்ந்து மாசம் நீங்க அசல், வட்டி சேர்த்து எவ்வளவு கட்ட வேண்டியிருக்கும்னு கணக்கும் சொல்லிட்டேன். நீங்க சரின்னு சொன்னா எனக்குப் பத்து நிமிஷம் போதும் பணத்தை உங்க முன்னாடி வைக்கிறதுக்கு. நீங்கதான் சொல்லணும்.''

சேட் திரும்பிப் பார்க்க, தூரத்தில் அவர் பார்வைக்காகக் காத்திருந்த ஒரு வேலையாள் தன் கையில் வைத்திருந்த பெட்டகம் போலிருந்த ஒரு சிறிய வெள்ளிப் பெட்டியை அவருக்கு முன்னால் வந்து திறந்து நீட்டினான்.

அதற்குள்ளிருந்து ஒரு பீடாவை எடுத்துப் போட்டுக் கொண்டு இவர்களைப் பார்த்து, 'வேண்டுமா?' என்று ஜாடையில் கேட்டார்.

''நோ, தேங்ஸ்'' என்றான் அரவிந்த். சந்துருவைப் பார்த்தான். ''சந்துரு, நீ சொல்லுடா, என் அவசரத்துக்கு பேங்க்ல கடன் கிடைக்காதுன்னுதான் இவர்கிட்ட வந்திருக்கேன். மூணு வட்டி போட்டுக்கச் சொல்லு. நல்லா சம்பாரிச்சா சீக்கிரமே கட்டி முடிச்சிடறேன்னு சொல்லு,'' என்றான்.

''சேட்டு, இவன் என் பெஸ்ட் ஃப்ரெண்டு. நாணயத்தைப் பத்தி நீங்க கொஞ்சம்கூட சந்தேகப்பட வேணாம். மூணு வட்டி போட்டுக் கொடுங்க. இதைத் தொழிலா நினைக்காம உதவியா நினைச்சி செய்ங்க'' என்றான் சந்துரு.

லால்சந்த் உதட்டோரம் கோடாக வழிந்த வெற்றிலைச் சாறை உறிஞ்சிவிட்டு, கைக்குட்டையால் துடைத்துக் கொண்டு கழுத்தை உயர்த்திக் கொண்டு பேசினார்.

"சந்துரு சார், இதை நான் தொழிலா நினைச்சா, கன்சிடர் கூட பண்ணிருக்க மாட்டேன். சினிமா தவிர வேற எதுக்கும் நான் ஃபைனான்ஸ் பண்றதில்லை. நீங்க சொன்ன நாலதான் செஞ்சுத் தரலாம்னு நினைச்சேன். ஒரு நிமிஷம்."

சேட் கால்குலேட்டரில் கணக்குகள் போட்டுப் பார்த்தார். நிமிர்ந்தார்.

"இப்படிப் பண்ணலாம். வட்டில மாத்தம் வேணாம். அதே நாலு வட்டியாவே இருக்கட்டும். முதல் ஆறு மாசத்துக்குத் திருப்பித் தர முடியாதுன்னு சொன்னாரில்லையா, அதில மூணு மாசத்துக்கு வட்டி வேணாம். மொத்தம் இருபத்தி நாலும் மூணும் இருபத்தி ஏழு மாசத்துக்கு மட்டும் வட்டி தரட்டும். இன்னொரு சலுகையும் தர்றேன். நாலு மாசம் முன்னாடியே கடனை அடைச்சாலும் வழக்கமா வட்டி தள்ள மாட்டேன். இவர் விஷயத்தில எத்தனை மாசம் முன்னாடி அடைக்கிறாரோ அத்தனை மாச வட்டி தள்ளிக்கிறேன். திருப்தியா?"

சந்துரு அரவிந்தைப் பார்த்து, "நீதான் இப்ப முடிவு செய்யணும் அரவிந்த்" என்றான்.

"சரி சார்" என்று தலையசைத்தான் அரவிந்த்.

"வெரிகுட். நாளைக்கு ஈவினிங் ஃப்ளைட்ல நான் பாம்பே போறேன். அதுக்குள்ளே உங்களுக்கு மிஷின் விக்கிற பார்ட்டியை இங்க கூட்டிட்டு வந்துருங்க. நீங்க என்ன விலை பேசிருக்கிங்களோ அந்தத் தொகையை நான் அவர்கிட்ட நேரடியாக் கொடுத்துடறேன். மிஷின் கிரயப் பத்திரம் என் பேர்ல போட்டுக்கறேன். நீங்க கடனை அடைச்சதும் உங்க பேர்ல மாத்திக் கொடுத்துடறேன். பத்து லட்சத்தில மிஷினுக்குக் கொடுத்த தொகை போக மீதித் தொகையை ரொக்கமா உங்க கைல கொடுத்துடறேன். அந்தத் தொகைக்கு சும்மா ஒரு புரோநோட்டு மட்டும் எழுதிக் கொடுத்துடுங்க. சரிதானா?"

"சரி சார்."

"அச்சா, போன் பண்ணிட்டு பார்ட்டியைக் கூட்டிட்டு வாங்கோ" என்ற சேட்டு சிணுங்கிய செல்லுலாரில் பேசத் துவங்க, தங்களுக்குள் பார்த்துக் கொண்டு இருவரும் எழுந்து கொண்டார்கள்.

**"மாற்றுக்கட்சிக்காரர்கள் உங்களை ஏமாற்றி பணம் கொடுத்து வோட்டு வாங்க வருவார்கள். அவர்களிடம் ஏமாந்து விடாதீர்கள். நியாயமான விலை கொடுத்து உங்கள் வோட்டுகளை நாங்களே வாங்கிக் கொள்கிறோம்!"**

**— கு. அருணாசலம்**

அவர் பேசி முடிந்ததும் சொல்லிவிட்டு கைகுலுக்கிவிட்டு பங்களாவை விட்டு வெளியேறினார்கள்.

சந்துரு தன் காரை ஓட்ட, அருகில் சிந்தனையாக அமர்ந்திருந்தான் அரவிந்த். ரியர்வியூ மிர்ரருக்கு அடியில் தொங்கிய சிறிய நாய்க்குட்டி பொம்மையை அவன் விரல்கள் நிமிண்டியபடி இருந்தன.

"டீலிங்ல உனக்குத் திருப்திதானே அரவிந்த்?"

"மூணு வட்டிக்குத்தான் நான் தயாரா இருந்தேன்."

"அப்போ யோசிச்சிச் சொல்றேன்னு நழுவியிருக்கலாமே..."

"டயம் இல்லையே சந்துரு. அந்த மிஷினை ஒரு வாரத்துக்குள்ளே வாங்கியாகணுமே."

"வேற மிஷின் கிடைக்காதா?"

"இந்த மிஷின் குறைச்ச விலையில கிடைக்குதே."

"ஆனா அதிக வட்டி கட்டப் போறியே..."

"பரவால்லை விடு, எடுத்துடலாம்."

"எப்படி எடுப்பே?"

"நாலு விஷயமும் யோசிச்சிப் பார்க்காம இதில நான் இறங்க நினைப்பேனா சந்துரு? இவ்வளவு வட்டி கட்டினதுக்கப்புறமும் எனக்கு லாபம் நிக்கிற மாதிரி செஞ்சுக்குவேன். அதுக்கெல்லாம் வழி இருக்கு."

"என்ன வழி?"

"கவர்ன்மெண்ட் ஆர்டர்ஸ் பிடிக்கிறதுக்கு சில ரூட்ஸ் வெச்சிருக்கேன் சந்துரு. லம்ப்பா ரெண்டு மூணு பெரிய ஆர்டர்ஸ் பிடிச்சி அதிகாரிகளுக்குக் கணிசமா வெட்டினா நாம கொடுக்கற கொட்டேஷனை கண்ணை மூடிக்கிட்டு சேங்ஷன் பண்ணுவாங்க. அதுக்கெல்லாம் ஆள் வெச்சிருக்கேன் சந்துரு."

"அதானே பார்த்தேன். நேர்மையான முறையில தொழில் செஞ்சா இவ்வளவு அதிக்மான வட்டி எப்படி கட்ட முடியும்னு எனக்குக் கவலையாக் கூட இருந்திச்சி,



விஷயமான ஆள்தான்ப்பா நீ" என்று சந்துரு அவன் தோளில் தட்ட, அரவிந்த் மெதுவாக சிரித்தபடி இரண்டு சிகரெட்டுகளைப் பற்ற வைத்து ஒன்றை அவனுக்குக் கொடுத்தான்.

ஒரு வாரத்திற்குள் காரியங்கள் துரிதமாக நிகழ்ந்தன.

சொன்னபடி லால்சந்த் சேட் அரவிந்த் அழைத்துச் சென்ற மிஷின் நபரிடம் பணம் கொடுத்தார். மிஷின் தொகை போக மீதித் தொகையை அரவிந்திடம் ரொக்கமாகக் கொடுத்தார்.

ராயப்பேட்டையில் ஏற்கனவே பார்த்து வைத்திருந்த இடத்திற்கு அரவிந்த் அட்வான்ஸ் கொடுத்தான். மாத வாடகை எட்டாயிரம் என்று பேசி ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டான்.

விலைக்கு வாங்கிய ஆஃப்செட் இயந்திரத்தை அந்த கம்பெனி நபர்களைக் கொண்டு பிரித்துப் புதிய இடத்தில் அதை நிர்மாணிக்கும் பணி துவங்கியது.

பழைய மிஷினில் வேலை பார்த்த நான்கு ஊழியர்களை புதிய சம்பளம் பேசி, தன் நிறுவனத்திற்கு வேலையில் சேர்த்தான்.

எலெக்ட்ரிசிடி, தொழில் லைசன்ஸ், டெலிபோன் என்று பல அலுவலகங்களுக்கு அலைந்து ஏற்பாடுகள் செய்தான்.

'அரவிந்த் ஆஃப்செட் பிரிண்ட்டர்ஸ்' என்று நிறுவனத்திற்குத் தன் பெயரையே சூட்டி போர்டு எழுதக் கொடுத்தான். லெட்டர் பேடுகள், பில் புத்தகங்கள், ரசீது புத்தகங்கள், ரப்பர் ஸ்டாம்புகள் என்று எல்லாவற்றுக்கும் ஆர்டர் செய்தான்.

அலுமினிய சேனல்களைக் கொண்டு கண்ணாடிச் சுவர்கள் எழுப்பி ஒரு அலுவலக அறை உருவாக்கும் பணிக்கு தச்சர்களை அமர்த்தினான். கணக்குகளுக்காக ஒரு கம்ப்யூட்டர் வாங்கினான். நிறுவனத்தின் பெயரில் அருகாமையிலிருந்த வங்கியில் கணக்கு துவக்கினான்.

வருகிற பதினெட்டாம் தேதி துவக்க விழா என்று தேதி தீர்மானித்து, மிக நெருக்க மானவர்களை மட்டும் அழைப்பதென்று முடிவு செய்து நூறு அழைப்பிதழ்கள் மட்டும் தயார் செய்தான்.

பிரஸ் திறப்பு விழாவிற்கு இன்னும் ஆறு தினங்கள் இருக்கும் சூழ்நிலையில் வெளியிலிருந்து வீட்டிற்குத் திரும்பிய அரவிந்த் கடுகடுவென்று முகத்தை வைத்துக் கொண்டிருந்த தன் அப்பாவையும், அவர் அருகில் அமைதியாக அமர்ந்திருந்த அக்கா யாமினியையும் பார்த்தான்.

"வாக்கா, எப்ப வந்தே?" என்றான் இயல்பாக.

"அவ வர்றது இருக்கட்டும்டா. பிரஸ் ஆரம்பிக்கற வேலைகள்ல நீ தீவிரமா இருக்கறதாவும், மிஷின் எல்லாம் வாங்கி எல்லா ஏற்பாடுகளையும் செஞ்சிட்டதாவும் இவ கேள்விப்பட்டாளாம். அது உண்மையான்னு முதல்ல சொல்லு" என்றார் அப்பா.

"யாருக்கா சொன்னது?"

"நீ அக்கவுண்ட் ஆரம்பிச்சிருக்கியே அந்த பேங்க் மேனேஜர் சொன்னார். ராயப்பேட்டையில இடம் பிடிச்சி, மிஷின் வாங்கிப் போட்டு இவ்வளவு வேலைகள் நடந்திருக்கு. இங்க வீட்டுக்கு வந்து கேட்டா யாருக்குமே எதுவும் தெரியாதுன்னு சொல்றாங்க, என்னடா இதெல்லாம்?" என்றாள் யாமினி.

"திறப்பு விழா பத்திரிகை நாளைக்குத் தான் கைக்குக் கிடைக்குது. அதைக் கொடுத்துட்டு விவரம் சொல்லலாம்னு இருந்தேன்" என்றான் அரவிந்த் வேறு திசையில் பார்த்துக் கொண்டு.

துடித்துப் போனார் சோமசுந்தரம்.

"இவ்வளவு விஷயங்களை எங்களுக்குத் தெரியாம செஞ்சிருக்கியா? ஏண்டா, எங்களை எல்லாம் என்னன்னு நினைச்சே?"

"உங்க தம்பிதானே மேடம், உங்களுக்கு விஷயமே தெரியாதான்னு அந்த பேங்க் மேனேஜர் கேட்டப்ப எனக்கு அவமானமா இருந்திச்சிப்பா" என்றாள் யாமினி.

"உங்கிட்ட ஏதுடா அவ்வளவு பணம்?" என்றார் அப்பா.

"உங்களுக்கு என் மேல நம்பிக்கை இல்லாம இருக்கலாம். ஆனா என்னை நம்பி பணம் கொடுக்க ஆளுங்க இருக்காங்கப்பா."

"அதுகூட விசாரிச்சிட்டேன்ப்பா. அநியாய வட்டிக்கு பத்து லட்சம் கடன் வாங்கியிருக்கான்" என்ற யாமினியை எரித்து விடுவது போலப் பார்த்தான் அரவிந்த்.

(தொடரும்)

# பர்வதம் நாராயணசாமி ஆஸ்பத்திரி

# கர்ப்பரக்ஷாம்பிகை ஃபர்டிலிடி சென்டர்

## இணைந்து மகளிர் மேம்பாட்டிற்காக செயல்படுத்தும் பிரத்யேக மருத்துவப் பரிசோதனை திட்டங்கள்!

**எகானமி மருத்துவப் பரிசோதனை திட்டம் – ரூ. 300/-**

- இரத்தப் பரிசோதனை - பொது மற்றும் சர்க்கரை நோய் கண்டு பிடிப்புக்காக
- முழு சிறுநீர் பரிசோதனை
- எக்ஸ்-ரே (நெஞ்சுப் பகுதி)
- பாப் ஸ்மியர் பரிசோதனை
- பெண்களுக்கான பிரத்யேக உடல் பரிசோதனைகள்

**சிறப்பு மருத்துவப் பரிசோதனைத் திட்டம் – ரூ. 1000/-**

- முழு ரத்தப் பரிசோதனை, இரத்த வகைப்படுத்துதல்
- சிறுநீர், மலம் பரிசோதனை
- சர்க்கரை நோய், அதிகப்படி கொழுப்பு கண்டு பிடிப்பு சோதனை
- எக்ஸ்-ரே (நெஞ்சுப் பகுதி)
- எலக்ட்ரோ கார்டியோ கிராப் (ECG)
- பாப் ஸ்மியர் டெஸ்ட்
- ஸ்கேன் மூலம் அடிவயிறு, கருப்பை சோதனை
- மார்பகம், கருப்பை, நுரையீரல், சிறு நீரகம், இருதயம், எலும்பு, கண் (அ) பற்கள் முழுச்சோதனை

## குழந்தையில்லா தம்பதியினருக்கு குறைந்த செலவு பரிசோதனை ரூ. 500/-

- உள்நோக்கு கருவி மூலம் (TVS Scan) கருப்பை, சினைப்பை பரிசோதனை
- கம்ப்யூட்டரில் ஆண் அணு பரிசோதனை
- சினைக்குழாய் பரிசோதனை (Tube test)
- மாதவிடாய் ஆன 12- 16ம் நாளில் பெண்முட்டை கண்டறியும் ஸ்கேன் பரிசோதனை

# Garbba Rakshambigai Fertility Centre (P) Ltd.

**Dr. Ms. Jayam Kannan,** M.D., D.G.O.,
Managing Director & Consultant in Reproduction

**மேற்கொண்டு விவரங்களுக்கும் பதிவு செய்து கொள்வதற்கும் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :**

**United India Colony, 4, 6th Cross, Kodambakkam, Chennai - 600 024. Phone : 4844718**

8-B, Ramarayar Street, Tennur, Trichirapalli - 620 017 Phone : 762790, 761769
*Infertility Clinic :* Rama Rau Poly Clinic, 829/2, Poonamalle High Road, Chennai - 600 010. Phone : 6420548.

# பொன்னியின் செல்வன்




**கல்கி கலெக்ஷன்**

இருபத்தேழாம் அத்தியாயம்

## ஆஸ்தானப் புலவர்கள்

பராக்! பராக்! இதோ வருகிறார்கள் புலவர் பெருமக்கள்! கவிஞர் சிகாமணிகள்! தமிழ்ப் பெருங்கடலின் கரை கண்டவர்கள்! அகத்தியனாரின் வழி வந்தவர்கள்! தொல்காப்பியம் முதலிய சங்க நூல்களைக் கரைத்துக் குடித்தவர்கள்! சிலப்பதிகாரம் முதலிய ஐம்பெருங் காவியங்களைத் தலைகீழாகப் படித்தவர்கள்! தெய்வத் தமிழ் மறையான திருக்குறளையும் ஒரு கை பார்த்தவர்கள்! இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் அறிந்தவர்கள்! இலக்கணம் கூறியதற்கு இலக்கியம் தெரிந்தவர்கள்! தாங்களே சுயமாகவும் கவி பாட வல்லவர்கள். அவர்கள் ஒவ்வொருவரும் எழுதிய கவிகள் அடங்கிய ஏட்டுச் சுவடிகள் கோடானு கோடி கரையான்களுக்குப் பல்லாண்டு உயிர் வாழ்வதற்கு உணவாகும் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

புலவர் பெருமக்கள் அவ்வளவு பேரும் கும்பலாகச் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் சந்நிதானத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

''வாழ்க! வாழ்க! ஏழுலகமும் ஒரு குடையின் கீழ் ஆளும் சுந்தர சோழ மகா சக்கரவர்த்தி வாழ்க! பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமான் வாழ்க! புலவர்களைப் புரக்கும் பெருமான் வாழ்க! கவிஞர்களின் கதியான கருணை வள்ளல் வாழ்க! பண்டித வத்ஸலராகிய பராந்தக சக்கரவர்த்தியின் திருப் பேரர் நீடூழி வாழ்க!'' என்று வாழ்த்தினார்கள்.

இந்தக் கோஷங்களையும் கூச்சல்களையும் சுந்தர சோழர் அவ்வளவாக விரும்பவில்லை. எனினும் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், தமது நோயையும் மறந்து, வந்தவர்களை வர

**அமரர் கல்கி**



வேற்பதற்காக எழுந்திருக்க முயன்றார்.

உடனே, சின்னப் பழுவேட்டரையர் முன்வந்து, "பிரபு, புலவர்கள் தங்களைத் தரிசித்து மரியாதை செலுத்திவிட்டுப் போக வந்திருக்கிறார்களேயன்றித் தங்களுக்குச் சிரமம் கொடுக்க வரவில்லை. ஆகையால் தயவுசெய்து தங்களைச் சிரமப்படுத்திக் கொள்ளக் கூடாது!'' என்றார்.

"ஆம், ஆம்! அரசர்க்கரசே! சக்கரவர்த்திப் பெருமானே! தங்களுக்குச் சிறிதும் சிரமம் கொடுக்க நாங்கள் வந்தோமில்லை!'' என்றார் புலவர்களின் தலைவராகிய நல்லன் சாத்தனார்.

"உங்களையெல்லாம் நெடுநாளைக்குப் பிறகு பார்ப்பதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி. அனைவரும் அமர வேண்டும். சில பாடல்கள் சொல்லிவிட்டுப் போக வேண்டும்!'' என்றார் தமிழன்பரான சக்கரவர்த்தி.

தரையில் விரித்திருந்த ரத்தின ஜமக்காளத்தில் எல்லோரும் உட்கார்ந்தார்கள். அதுதான் சமயமென்று நமது வீரன் வல்லவரையனும் புலவர் கூட்டத்துடன் கலந்து உட்கார்ந்து கொண்டான். தான் சொல்ல விரும்பியதை முழுதும் சக்கரவர்த்தியிடம் சொல்லாமல் போக அவனுக்கு மனம் இல்லை. சந்தர்ப்பம் ஒருவேளை கிடைத்தால் சொல்லிவிட்டுப் போகலாம் என்று எண்ணி உட்கார்ந்தான்.

இதைச் சின்னப் பழுவேட்டரையர் கவனித்தார். அவருடைய மீசை துடித்தது. முதலில் அவனை வெளியில் அனுப்பி விடலாமா என்று நினைத்தார். பிறகு, அவன் அங்கே தம்முடைய கண்காணிப்பில் இருப்பதே நலம் என்று தீர்மானித்தார். எனவே, அவனைப் பார்த்தும் பார்க்காததுபோல் இருந்தார். இந்தப் புலவர்கள் சென்ற பிறகு அவனை வெளியே அழைத்துச் சென்று அவன் மகாராஜாவிடத்தில் சொன்ன செய்தி என்னவென்பதை நன்கு தெரிந்து கொள்ள விரும்பினார். "அபாயம்! அபாயம்!'' என்ற அவனுடைய குரல் அவர் காதில் இன்னும் ஒலித்துக் கொண்டே இருந்தது.

"புலவர்களே! தமிழ்ப் பாடல்கள் கேட்டு அதிக காலமாயிற்று. என் செவிகள் தமிழ்ப் பாடலுக்குப் பசித்திருக்கின்றன. உங்களில் எவரேனும் புதிய பாடல் ஏதேனும் கொண்டு வந்திருக்கிறீர்களா?'' என்று சக்கரவர்த்தி சுந்தர சோழர் கேட்டார்.

உடனே ஒரு புலவர் சிகாமணி எழுந்து நின்று, "பிரபு! உலகபுரத்தில் தங்கள் திருப்பெயரால் விளங்கும் சுந்தர சோழப்

பெரும் பள்ளியிலிருந்து அடியேன் வந்தேன். சிவநேசச் செல்வராகிய தாங்கள் பௌத்த மடாலயத்துக்கு நிவந்தம் அளித்து உதவியதை இந்தத் தமிழக மெங்கும் உள்ள பௌத்தர்கள் பாராட்டிப் போற்றுகிறார்கள். தாங்கள் உடல் நோயுற்றிருப்பது அறிந்தது முதல், பிக்ஷுக்கள் மிக்க கவலை கொண்டு தங்கள் உடல்நலத்துக்காகப் பிரார்த்தனை நடத்தி வருகிறார்கள். அந்தப் பிரார்த்தனைப் பாடலை இவ்விடம் சொல்ல அருள் கூர்ந்து அனுமதி தரவேண்டும்!'' என்றார்.

"அப்படியே சொல்லவேணும்; கேட்கக் காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார் சக்கரவர்த்தி.

புலவரும் பின்வரும் பாடலை இசையுடன் பாடினார்.

*"போதியந் திருநிழல் புனித!நிற்*
*பரவுதும்*
*மேதகு நந்திபுரி *மன்னர் சுந்தரச்*
*சோழர் வண்மையும் வனப்பும்*
*திண்மையும் உலகிற் சிறந்துவாழ்*
*கெனவே!''*

பாடலைக் கேட்டதும் புலவர்கள் அத்தனை பேரும் "நன்று! நன்று!" என்று கூறித் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள்.

"புத்தர்கள் இவ்வளவு நன்றியுடையவர்களாயிருப்பது வியப்பு, வியப்பு!" என்றார் ஒரு வீர சைவக் கவிராயர்.

"ஆம்; அது வியப்பான காரியந்தான். உலகபுரம் புத்தமடத்துக்கு நான் செய்த சேவை மிக அற்பம். அதற்கு இவ்வளவு பாராட்டு வேண்டுமா?" என்றார் மன்னர்.

"சக்கரவர்த்தியின் வண்மைத் திறத்தை அநுபவித்தவர் யார்தான் என்றென்றைக்கும் நன்றி செலுத்திப் பாராட்டாதிருக்க முடியும்? இந்திரனும் சூரியனும் சிவபெருமானும் கூடத் தங்களுடைய வண்மையின் பயனை அநுபவித்திருக்கிறார்கள்!" என்றார் மற்றொரு புலவர் சிரோமணி.

சுந்தரசோழர் முகத்தில் புன்னகை தவழ, "அது என்ன? இந்திரனும் சூரியனும் சிவபெருமானும் கூடவா? அவர்கள் எதற்காக என்னிடம் நன்றி செலுத்த வேண்டுமாம்?" என்று கேட்டார்.

''ஒரு பாடல் சொல்ல அநுமதி தரவேண்டும்!" என்றார் அப் புலவர்.

"அப்படியே நடக்கட்டும்!" என்றார் மன்னர்.

புலவர் கையில் கொண்டு வந்திருந்த ஓலையைப் பிரித்துப் படிக்கலுற்றார் :

*"இந்திரன் ஏறக் கரி அளித்தார்*
*பரிஏ ழளித்தார்*
*செந்திரு மேனித் தினகரற்கு,*
*சிவனார் மணத்துப்*
*பைந்துகி லேறப் பல்லக்களித்தார்,*
*பழையாறை நகர்ச்*
*சுந்தரச்சோழரை யாவரொப்பார்கள்*
*இத்*
*தொன்னிலத்தே!''*

பாடலைப் புலவர் படித்து முடித்ததும் சபையிலிருந்த மற்றப் புலவர்கள் எல்லாரும் சிரக்கம்ப கரக்கம்பம் செய்தும், 'ஆஹாகாரம்' செய்தும், "நன்று! நன்று!" என்று கூறியும் தங்கள் குதூகலத்தை வெளியிட்டார்கள்.

சுந்தரசோழர் முகமலர்ச்சியுடன், "இந்தப் பாடலின் பொருள் இன்னதென்பதை யாராவது விளக்கிச் சொல்ல முடியுமா?" என்றார்.

ஒரே சமயத்தில் பலர் எழுந்து நின்றார்கள். பிறகு நல்லன் சாத்தனாரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் உட்கார்ந்தார்கள். நல்லன் சாத்தனார் பாடலுக்குப் பொருள் கூறினார் :

''ஒரு சமயம் தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் போர் நடந்தது. அதில் இந்திரனாருடைய ஐராவதம் இறந்து போய் விட்டது. அதற்கு இணையான வேறொரு யானை எங்கே கிடைக்கும் என்று இந்திரன் பார்த்துக் கொண்டிருந்தான். கடைசியில் பழையாறை நகரில் வாழ்ந்த சுந்தர சோழ சக்கரவர்த்தியிடம் அவன் வந்து 'ஐராவதத்துக்கு நிகரான ஒரு யானை வேண்டும்' என்று யாசித்தான். 'ஐராவதத்துக்கு நிகரான யானை என்னிடம் இல்லை. அதைவிடச் சிறந்த யானைகள்தான் இருக்கின்றன!'

* அந்நாளில் பழையாறை நகருக்கு நந்திபுரி என்னும் பெயரும் உண்டு. சில காலத்துக்கு முன்பு சோழ மண்டலம் பல்லவர் ஆட்சியின் கீழ் இருந்தபோது நந்திபுரி என்னும் பெயர் பிரபலமாய் விளங்கியது. ஆகையினாலேயே இந்தப் பழம்பாடலில் நந்திபுரி மன்னர் என்று குறிப்பிட்டிருக்கிறது.

என்று கூறி, இந்திரனைத் தமது யானைக் கொட்டாரத்துக்கு அழைத்துச் சென்றார். அங்கே குன்றங்களைப் போல் நின்ற ஆயிரக்கணக்கான யானைகளைத் தேவேந்திரன் பார்த்துவிட்டு, 'எதைக் கேட்பது?' என்று தெரியாமல் திகைத்து நின்றான். அவனுடைய திகைப்பைக் கண்ட சுந்தர சோழர், தாமே ஒரு யானையைப் பொறுக்கி இந்திரனுக்கு அளித்தார். 'அந்த யானையை எப்படி அடக்கி ஆளப் போகிறோம்? நம் வஜ்ராயுதத்தினால் கூட முடியாதே!' என்ற பீதி இந்திரனுக்கு உண்டாகி விட்டதைக் கவனித்து வஜ்ராயுதத்தை விட வலிமை வாய்ந்த ஓர் அங்குசத்தையும் அளித்தார்....

"பின்னர் ஒரு காலத்தில், செங்கதிர் பரப்பி உலகுக்கெல்லாம் ஒளி தரும் சூரிய பகவானுக்கும் ராகு என்னும் அரக்கனுக்கும் பெரும்போர் மூண்டது. ராகு, தினகரனை விழுங்கப் பார்த்தான். முடியவில்லை! தினகரனுடைய ஒளி அவ்விதம் ராகுவைத் தகித்து விட்டது. ஆனால் சூரியனுடைய தேரில் பூட்டிய குதிரைகள் ஏழும் ராகுவின் காலகோடி விஷத்தினால் தாக்கப்பட்டு இறந்தன. சூரியன் தன் பிரயாணத்தை எப்படித் தொடங்குவது என்று திகைத்து நிற்கையில், அவனுடைய இக்கற்ற நிலையைக் கண்ட சுந்தரசோழர், ஏழு புதிய குதிரைகளுடன் சூரிய பகவானை அணுகி, 'ரதத்தில் இந்த குதிரைகளைப் பூட்டிக் கொண்டு சென்று உலகத்தை உய்விக்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டார். தன் குலத்தில் வந்த ஒரு சோழ சக்கரவர்த்தி இவ்விதம் சமயத்தில் செய்த உதவியைச் சூரியனும் மிக மெச்சினான்.

"பின்னர் சிவபெருமானுக்கும் பார்வதி தேவிக்கும் கைலயங்கிரியில் திருமணம் நடந்தது. பெண் வீட்டார் கலியாணச் சீர் வரிசைகளுடன் வந்திருந்தார்கள். ஆனால் பல்லக்குக் கொண்டு வரத் தவறி விட்டார்கள். ஊர்வலம் நடத்துவதற்கு எருது மாட்டைத் தவிர வேறு வாகனம் இல்லையே என்று கவலையுடன் பேசிக் கொண்டார்கள். இதை அறிந்த சுந்தர சோழச் சக்கரவர்த்தி உடனே பழையாறை அரண்மனையிலிருந்து தமது முத்துப் பல்லக்கைக் கொண்டுவரச் சொன்னார். பயபக்தியுடன் சிவபெருமான் திருமணத்துக்குத் தம் காணிக்கையாக அப் பல்லக்கை அளித்தார். அப்படிப்பட்ட சுந்தர சோழ சக்கரவர்த்திக்கு உவமை சொல்லக்கூடியவர்கள் இந்த விரிந்து பரந்த, அலைகடல் சூழ்ந்த பெரிய உலகத்தில் வேறு யார் இருக்கிறார்கள்?..."

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சுந்தர சோழ சக்கரவர்த்தி 'கலீர்' என்று சிரித்தார். நோயின் வேதனையினால் நெடுநாள் சிரித்தறியாத சக்கரவர்த்தியின் சிரிப்பு அவருடைய இணை பிரியாப் பத்தினியான மலையமான் மகள் வானவன்மாதேவிக்கும் தாதியர்களுக்கும் அரண்மனை வைத்தியருக்கும் கூடச் சிறிது உற்சாகத்தை அளித்தது.

கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையர் இத்தனை நேரமும் நின்றுகொண்டேயிருந்தவர், சக்கரவர்த்தியைக் கைகூப்பி வணங்கி, "பிரபு! நான் பெரிய தவறு செய்து விட்டேன்; பிழை பொறுத்து மன்னிக்க வேண்டும்!" என்றார்.

"ஆ! தளபதியா பேசுகிறது? நீர் என்ன பிழை செய்தீர்? எதற்காக மன்னிப்பு? ஒருவேளை இந்திரனுக்கு நான் அளித்த வெள்ளை யானையையும் சூரியனுக்கு அளித்த குதிரைகளையும் திரும்பப் பறித்துக் கொண்டு வந்து விட்டீரோ? சிவபெருமானிடமிருந்து சிவிகையையும் பிடுங்கிக் கொண்டு வந்து விட்டீரோ?



செய்யக்கூடியவர்தான் நீர்!'' என்று சுந்தர சோழர் சொல்லி மீண்டும் சிரித்ததும், சக்கரவர்த்தியுடன் சேர்ந்து புலவர்களும் சிரித்தார்கள். எல்லாரையும் காட்டிலும் அதிகமாக வந்தியத்தேவன் சிரித்தான். அதைச் சின்னப் பழுவேட்டரையர் கவனித்து அவனை நோக்கிக் கடுமையாக ஒரு பார்வை பார்த்தார். உடனே, சக்கரவர்த்தியின் பக்கம் திரும்பிப் பார்த்துக் கூறினார் :-

"அரசர்க்கரசே! நான் செய்த பிழை இதுதான். இத்தனை காலமும் நான் இவர்களைப் போன்ற புலவர் சிகாமணிகளைத் தங்களிடம் வரவொட்டாமல் தடை செய்து வைத்திருந்தேன். அரண்மனை மருத்துவர் சொற்படி செய்தேன். ஆனால் இப்போது அது பிழை என்று உணர்கிறேன். இந்தப் புலவர்களின் வரவினால் தங்கள் முகம் மலர்ந்தது. இவர்களுடைய பேச்சைக் கேட்டுத் தாங்கள் வாய்விட்டுச் சிரித்தீர்கள். அந்தக் குதூகலச் சிரிப்பின் ஒலியைக் கேட்டு * உடைய பிராட்டியின் முகமும் தாதியரின் முகங்களும் மலர்ந்தன. நானும் மகிழ்ந்தேன். இவ்வளவு குதூகலம் தங்களுக்கு அளிக்கக்கூடியவர்களை இத்தனை நாள் தங்கள் சந்நிதானத்துக்கு வரவொட்டாமல் தடுத்தது என்னுடைய பெரும் பிழைதானே?..." என்றார்.

"நன்று சொன்னீர், தளபதி! இப்போதாவது இதை நீர் உணர்ந்தீர், அல்லவா? 'வைத்தியர் சொல்லுவதைக் கேட்க வேண்டாம்; புலவர்கள் வருவதைத் தடுக்க வேண்டாம்' என்று உமக்கு நான் அடிக்கடி சொன்னதின் காரணம் தெரிகிறது அல்லவா?'' என்றார் சக்கரவர்த்தி.

அரண்மனை வைத்தியர் எழுந்து கைகட்டி வாய் புதைத்து ஏதோ சொல்லத் தொடங்கினார். அதைச் சுந்தர சோழர் சட்டை செய்யாமல் புலவர்களைப் பார்த்து "இந்த அருமையான பாடலைப் பாடிய புலவர் யார் என்று உங்களில் யாருக்காவது தெரியுமா? தெரிந்தால் சொல்ல வேணும்!'' என்றார்.

நல்லன் சாத்தனார், "அரசர்க்கரசே! அதுதான் தெரியவில்லை! நாங்களும் அதைக் கண்டுபிடிக்க முயன்று கொண்டு தானிருக்கிறோம். கண்டுபிடித்து அந்த மாபெரும் புலவருக்குக் 'கவிச் சக்கரவர்த்தி' என்று பட்டம் சூட்டவும் சிவிகையில் ஏற்றி அவரை நாங்கள் சுமந்து செல்லவும் சித்தமாயிருக்கிறோம். இது காறும் எங்கள் முயற்சி பலன் அளிக்கவில்லை" என்று சொன்னார்.

''அதில் வியப்பு ஒன்றுமில்லை. நாலுவரி கொண்ட பாடலில் இவ்வளவு பெரும் பொய்களை அடக்கக்கூடிய மகா கவிஞர் தமது பெயரை வெளிப்படுத்திக் கொண்டு முன்வர விரும்ப மாட்டார் தானே?'' என்று மகாராஜா கூறியதும், புலவர்களின் திருமுகங்களைப் பார்க்க வேண்டுமே! ஒருவர் முகத்திலாவது ஈ ஆடவில்லை. என்ன மறுமொழி சொல்லுவது என்றும் அவர்களுக்குத் தெரியவில்லை.

ந்த நிலைமையில் நமது வந்தியத்தேவன் துணிச்சலாக எழுந்து, "பிரபு!



* பட்டத்து அரசியை 'உடைய பிராட்டி' என்று குறிப்பிடுவது அக்காலத்து மரபு.



என்னை மடக்கி விட்டாய்!'' என்றார். பிறகு சபையைப் பார்த்து, "புலவர்களே! பாடல் மிக அருமையான பாடலாக இருந்தாலும், அதைப் பாடியவரைக் கண்டு பிடிக்க வேண்டிய சிரமமும், அவருக்குக் கவிச் சக்கரவர்த்தி என்னும் பட்டம் சூட்டவேண்டிய அவசியமும் இல்லை. இதைப் பாடிய புலவரை எனக்குத் தெரியும். ஏற்கெனவே அவருடைய சிரஸின் பேரில் தூக்க முடியாத கனமுடைய சோழ சாம்ராஜ்ய மணி மகுடம் உட்கார்ந்து அழுத்திக் கொண்டிருக்கிறது. 'புவிச் சக்கரவர்த்தி', 'திரிபுவனச் சக்கரவர்த்தி', 'ஏழுலகச் சக்கரவர்த்தி', என்னும் பட்டங்களையும் அந்தக் கவிராயர் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டிருக்கிறார்!'' என்றார் சுந்தர சோழர்.

இதைக் கேட்ட புலவர்கள் அத்தனை பேரும் ஆச்சரியக் கடலில் முழுகித் தத்தளித்தார்கள் என்று கூறினால், அதை வாசகர்கள் பொய் என்று தள்ளி விடக் கூடாது! ஆசிரியரின் கற்பனை, அணி அலங்காரம், இல்பொருள் உவமை - என்று இவ்விதம் ஏதாவது ஒருவகை இலக்கணம் கூறி ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்!

அப்படி ஒரே அடியாகப் பொய் என்று தள்ளி விடக் கூடாது. இல்லாத விஷயத்தைச் சாதாரண பாமர மக்கள் சொன்னால் அது பொய்; இராஜாங்க நிர்வாகத்தில் ஈடுபட்டவர்கள் அவ்விதம் சொன்னால், அது இராஜதந்திர சாணக்கியம்; கவிகள் அவ்வாறு கூறினால் அது கற்பனை, அணி அலங்காரம், இல்பொருள் உவமை...'' என்றான்.

புலவர்கள் அத்தனை பேரும் அவன் பக்கமாகப் பார்த்து "நன்று! நன்று!" என்று உற்சாகத்துடன் ஆர்ப்பரித்தார்கள்.

சக்கரவர்த்தியும் வந்தியத்தேவனை உற்று நோக்கி, "ஓ! நீ காஞ்சியிலிருந்து ஓலை கொண்டு வந்தவன் அல்லவா? கெட்டிக்காரப் பிள்ளை! நன்றாக

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# இரும்புப் பிடி

திடீரென்று பொங்கிய புது வெள்ளம் போன்ற ஆச்சரியத்தின் வேகம் சிறிது குறைந்ததும், புலவர் தலைவரான நல்லன் சாத்தனார், "பிரபு! அப்படியானால், இந்தப் பாடலை இயற்றிய கவி....'' என்று தயங்கினார்.

''உங்கள் முன்னால், கால்களின் சுவாதீனத்தை இழந்து, நோய்ப் படுக்கையில் படுத்திருக்கும் புவிச் சக்கரவர்த்திதான்!'' என்றார் சுந்தர சோழர்.

புலவர்களிடையே பலவித வியப்பொலிகளும் ஆஹாகாரமும் எழுந்தன. சிலர் தங்களுடைய மனோநிலையை எவ்விதம் வெளியிடுவது என்று தெரியாமல் தலையையும் உடம்பையும்

அசைத்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் சிலர் தங்களுடைய மனோநிலை இன்னதென்று தங்களுக்கே தெரியாமல் கல்லாய்ச் சமைந்திருந்தார்கள்!

சுந்தரசோழர் கூறினார் : – "புலவர் பெருமக்களே! ஒரு சமயம் பழையாறையில் புலவர்களும் கவிஞர்களும் என்னைப் பார்க்க வந்தார்கள். அந்தக் கூட்டத்தில் உங்களில் சிலரும் இருந்திருக்கலாம். ஒவ்வொருவரும் சோழ குலத்தின் வள்ளல் தன்மையைக் குறித்து ஒவ்வொரு பாடல் சொன்னார்கள். என்னைப் பற்றியும் பாடினார்கள். நான் 'இவருக்கு அதைக் கொடுத்தேன்', 'அவருக்கு இதை அளித்தேன்' என்றெல்லாம் பாடினார்கள். அச் சமயம் இளையபிராட்டி குந்தவையும் என் அருகில் இருந்தாள். புலவர்கள் பரிசில்கள் பெற்றுச் சென்ற பிறகு அவர்கள் பாடிய பாடல்களை அரசிளங்குமரி புகழ்ந்து பாராட்டினாள். குந்தவையிடம் நான் 'புலவர்களையெல்லாம் விட என்னால் நன்றாகப் பாட முடியும்' என்று சபதம் கூறினேன். பிறகுதான் வேடிக்கையாக இந்தப் பாடலைப் பாடினேன். 'எனக்குப் பரிசு கொடு!' என்று கேட்டேன். குழந்தை என் முதுகின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு, 'இந்தாருங்கள் பரிசு" என்று கன்னத்துக்கு ஒன்று அறை கொடுத்தாள்! அது நேற்று நடந்தது போல் எனக்கு ஞாபகம் இருக்கிறது. ஆனால் ஆண்டு எட்டுக்கு மேல் ஆகிறது!...." என்றார்.

"விந்தை! விந்தை!" என்றும், "அற்புதம்! அற்புதம்!" என்றும் புலவர்கள் கூறி மகிழ்ந்தார்கள்.

குந்தவை என்ற பெயரைக் கேட்டதுமே வந்தியத்தேவனுக்கு மெய்சிலிர்த்தது. சோழகுலத்தில் பிறந்த அந்த இணையில்லாப் பெண்ணரசியின் எழிலையும் புலமையையும் அறிவுத்திறனையும் பற்றி அவன் எவ்வளவோ கேள்விப்பட்டதுண்டு. அந்தகைய அதிசய அரசகுமாரியைப் பெற்றெடுத்த பாக்கியசாலியான தந்தை இவர்; தாய் அதோ பக்கத்தில் அமர்ந்திருக்கும் மூதாட்டி. சுந்தரசோழர் தம் செல்வப் புதல்வியைக் குறித்துப் பேசும் போது எவ்வளவு பெருமிதத்துடன் பேசுகிறார்? அவர் குரல் எப்படித் தழுதழுத்து உருக்கம் பெறுகிறது?....

வந்தியத்தேவனுடைய வலக் கரம் அவனுடைய இடையைச் சுற்றிக் கட்டியிருந்த பட்டுத் துணிச் சுருளைத் தடவிப் பார்த்தது. ஏனெனில் குந்தவைப்பிராட்டிக்கு அவன் கொண்டு வந்திருந்த ஓலை அச் சுருளுக்குள் இருந்தது. தடவிப் பார்த்த கை திகைப்படைந்து செயலிழந்து





பதியவில்லை.

சுந்தர சோழர் வியப்புக் கடலில் மூழ்கியிருந்த புலவர் கூட்டத்தைப் பார்த்து மேலும் கூறினார்: -

''நான் விளையாட்டாகச் செய்த பாடலைக் குந்தவை யாரிடமாவது சொல்லியிருக்க வேண்டும். ஒருவேளை பழையாறை திருமேற்றளி ஆலயத்தின் ஈசான்ய பட்டாச்சாரி யாரிடம் சொல்லியிருக்கலாம். அவர் இப் பாடலை நாடெங்கும் பரவும்படி செய்து என்னை உலகம் பரிகசிப்பதற்கு வழி செய்து விட்டார்!''

''பிரபு! தாங்களே பாடியிருந்தால் என்ன? பாடல் அற்புதமான பாடல்தான்! சந்தேகமே இல்லை. தாங்கள் 'புவிச் சக்க ரவர்த்தி'யாயிருப்பதோடு 'கவிச் சக்கர வர்த்தி'யும் ஆவீர்கள்!'' என்றார் நல்லன் சாத்தனார்.

''ஆயினும், இச் சமயம் அதே பாடலை நான் பாடியிருந்தால் இன்னொரு கொடையையும் சேர்த்திருப்பேன். இந்திரனுக்கு யானையும், சூரியனுக்குக் குதிரையும், சிவனாருக்குப் பல்லக்கும் கொடுத்ததோடு நிறுத்தியிருக்க மாட்

நின்றது; அவனுடைய உள்ளம் திக்பிரமை கொண்டது. 'ஐயோ! இது என்ன? ஓலையைக் காணோமே? எங்கே போயிற்று? எங்கேயாவது விழுந்து விட்டதோ? சக்கரவர்த்தியின் ஓலையை எடுத்தபோது அதுவும் தவறி விழுந்திருக்குமோ? எங்கே விழுந்திருக்கும்? ஒருவேளை ஆஸ்தான மண்டபத்தில் விழுந்திருக்குமோ? அப்படியானால் சின்னப் பழுவேட்டரையரின் கையில் சிக்கி விடுமோ? சிக்கிவிட்டால் அதிலிருந்து ஏதேனும் அபாயம் முளைக்குமோ? அடடா? என்ன பிசகு! எத்தனை பெரிய தவறுதல்! இதிலிருந்து எப்படிச் சமாளிப்பது?.....

குந்தவை தேவிக்குக் கொணர்ந்த ஓலை தவறிவிட்டது என்று அறிந்த பிறகு வந்தியத்தேவனுக்கு அங்கு இருப்புக் கொள்ளவில்லை. மேலே நடந்த பேச்சு வார்த்தைகளும் அவன் காதில் சரியாக விழவில்லை; விழுந்ததும் மனத்தில் நன்கு

டேன். மார்க்கண்டனுக்காக மறலியைச் சிவபெருமான் உதைத்தார் அல்லவா? அந்த உதைக்கு யமன் தப்பித்துக் கொண்டான். ஆனால் அவனுடைய எருமைக் கடா வாகனம் சிவபெருமான் கோபத்தைத் தாங்காமல் அங்கேயே விழுந்து செத்து விட்டது. வாகனமில்லாமல் யமன் திண்டாடிக் கொண்டிருந்ததையறிந்து பழையாறைச் சுந்தர சோழர் யமனுக்கு எருமைக்கடா வாகனம் ஒன்றை அனுப்பினார்!... இப்படி ஒரு கற்பனையும் சேர்த்திருப்பேன். அந்த எருமைக் கடாவின் பேரில் ஏறிக் கொண்டுதான் யமன் இப்போது ஜாம் ஜாம் என்று என்னைத் தேடி வந்து கொண்டிருக்கிறான். நமது தஞ்சைக் கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையரால் கூட யமதர்ம ராஜனையும், அவனுடைய எருமைக்கடா வாகனத்தையும் தடுத்து நிறுத்திவிட முடியாது அல்லவா?!''

இப்படிச் சுந்தரசோழர் சொன்ன போது அவர் அருகில் வீற்றிருந்த உடைய பிராட்டி வானவன்மா தேவியின் கண்களில் நீர் அருவி பெருகிற்று. அங்கிருந்த புலவர்கள் பலர் விம்மி அழத் தொடங்கி விட்டார்கள்.

சின்னப் பழுவேட்டரையர் மட்டுமே மனோதிடத்துடன் இருந்தார்.

''பிரபு! தங்களுடைய சேவையில் யமனுடன் போர் தொடுக்கவும் நான் சித்தமாயிருப்பேன்!'' என்றார்.

''அதற்கு ஐயமில்லை, தளபதி! ஆயினும் யமனுடன் போர் தொடுக்கும் சக்தி மானிடர் யாருக்கும் இல்லை. யமனைக் கண்டு அஞ்சாமலிருக்கத்தான் நாம் இறைவனைப் பிரார்த்திக்க வேண்டும். புலவர்களே! 'நமனை அஞ்சோம்' என்று தமிழகத்தின் தவப்புதல்வர் ஒருவர் பாடினார் அல்லவா?'' என்றார் சக்கரவர்த்தி.

ஒரு புலவர் எழுந்து அப்பாடலைப் பாடினார் :

*''நாமார்க்கும் குடியல்லோம்*
*நமனை அஞ்சோம்*
*நரகத்தில் இடர்ப்படோம்*
*நடலையல்லோம்*
*ஏமாப்போம் பிணியறியோம்...''*

சக்கரவர்த்தி இந்த இடத்தில் குறுக்கிட்டு, ''ஆகா! இறைவனைப் பிரத்யட்சமாகத் தரிசித்த மகானைத் தவிர வேறு யாரால் இவ்வளவு துணிச்சலாகப் பாட முடியும்? அப்பர் சுவாமிகளுக்குக் கொடிய சூலை நோய் இருந்தது. இறைவன் அருளால் நோய் நீங்கிற்று. எனவே, 'பிணியறியோம்' என்று பாடியிருக்கிறார்! புலவர்களே! என்னைப் பற்றியும் என் கொடைகளைப் பற்றியும் பாடுவதை நிறுத்திவிட்டு, இனி இத்தகைய அருள் வாக்கைப் பாடுங்கள்! அப்பரும், சம்பந்தரும், சுந்தரமூர்த்தியும் இதுபோல் ஆயிரக்கணக்கான பக்திமயமான தீந்தமிழ்ப் பாடல்களைப் பாடியிருக்கிறார்கள். அப் பாடல்கள் எல்லாவற்றையும் ஒருங்கு சேர்த்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? படித்தும் பாடியும் பரவசம் அடைவதற்கு ஓர் ஆயுட்காலம் போதாது அல்லவா?'' என்றார்.

''அரசர்க்கரசே! தாங்கள் அநுமதித்தால் அந்தத் திருப்பணியை இப்போதே தொடங்குகிறோம்!''

''இல்லை; என்னுடைய காலத்தில் நடக்கக்கூடிய



திருப்பணி அல்ல அது. எனக்குப் பின்னால்..." இவ்விதம் கூறித் தயங்கி நின்ற சுந்தரசோழர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

அரண்மனை மருத்துவர், சின்னப் பழுவேட்டரையரின் அருகில் வந்து அவர் காதில் ஏதோ சொன்னார்.

அதைக் கவனித்த சுந்தரசோழர் தூக்கி வாரிப் போட்டவரைப் போல் கண்ணை நன்கு விழித்துச் சபையோரைப் பார்த்தார். வேறொரு உலகத்திலிருந்து, மரணத்தின் வாசலிலிருந்து, யமனுலகக் காட்சியிலிருந்து, திடீரென்று திரும்பி வந்தவரைப் போல் சக்கரவர்த்தி தோன்றினார்.

"பிரபு! சங்கப் பாடல் ஒன்றைக் கேட்க வேண்டும் என்று தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தீர்கள். அதை மட்டும் சொல்லி விட்டு இவர்கள் போகலாமல்லவா?" என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

"ஆம், ஆம்; மறந்து விட்டேன். என்னுடைய உடல் மட்டும் அல்ல; உள்ளமும் சுவாதீனத்தை இழந்து வருகிறது. எங்கே? சங்கப் பாடலைச் சொல்லட்டும்!" என்றார் மன்னர்.

சின்னப் பழுவேட்டரையர் நல்லன் சாத்தனாருக்குச் சமிக்ஞை செய்தார். புலவர் தலைவர் எழுந்து கூறினார் :-

"அரசே! தங்களுடைய முன்னோர்களில் மிகப் பிரபலமானவர் கரிகால் பெருவளத்தார். இமயமலையில் புலிக் கொடியைப் பொறித்த மாவீரர். அவருடைய ஆட்சிக் காலத்தில் பூம்புகார் - காவேரிப்பட்டினம் - சோழ மகாராஜ்யத்தின் தலைநகரமாயிருந்தது. பற்பல வெளிநாடுகளிலிருந்தும் பற்பல பொருள்கள் மரக்கலங்களில் வந்து இறங்கிய வண்ணமிருந்தன. பூம்புகாரின் செல்வப் பெருக்கையும் வளத்தையும் வர்ணிக்கும் சங்கப் புலவர் ஒருவர் இன்னின்ன நாட்டிலிருந்து இன்னின்ன பொருள்கள் வந்தன என்பதைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். அந்தப் பாடல் பகுதி இது :-

*வடமலைப் பிறந்த மணியும்*
*பொன்னும்*
*குடமலைப் பிறந்த வாரமும் அகிலும்*
*தென்கடல் முத்தும் குணகடல்*
*துகிரும்*
*கங்கை வாரியும் காவிரிப் பயனும்*
*ஈழத்து உணவும் காழகத்*
*தாக்கமும்...."*

பாடலில் இந்த இடம் வந்தபோது சுந்தர சோழர் கையினால் சமிக்ஞை செய்யவே, புலவர் நிறுத்தினார்.

"தளபதி! கரிகால் வளவர் காலத்தில் ஈழநாட்டிலிருந்து தமிழகத்துக்கு உணவுப் பொருள் வந்து கொண்டிருந்தது என்று இப்பாடல் சொல்கிறது. அதை நான் அறிவதற்காகத்தானே இப் புலவர்களை அழைத்து வந்தீர்?"

"ஆம், அரசே!" என்று கோட்டைத் தளபதி கூறியது சிறிது ஈனஸ்வரத்தில் கேட்டது.

"அறிந்து கொண்டேன். இனி, இப் புலவர்களைப் பரிசில்கள் கொடுத்து அனுப்பி விடலாம்!" என்றார் மன்னர்.

"புலவர்களே! நீங்கள் இப்போது விடைபெற்றுக் கொள்ளலாம்!" என்றார் கோட்டைத் தளபதி.

புலவர்கள், மன்னருக்கு "வாழி!" கூறிக் கோஷித்துக் கொண்டு புறப்பட்டுச் சென்றார்கள்.

குந்தவை தேவிக்குக் கொண்டு வந்த ஓலையைக் காணாததால் மனக்கலக்கம் அடைந்திருந்த வல்லவரையன், அப்புலவர்களுடனே தானும் நழுவி விடலாம் என்று எண்ணி எழுந்து கூட்டத்தின் நடுவில் நடந்து சென்றான்.

ஆனால், அவன் எண்ணம் நிறைவேறவில்லை. வாசற்படியை நெருங்கியபோது ஒரு வலிய இரும்புக் கை அவனுடைய கையின் மணிக்கட்டை இறுகப் பிடித்தது. வல்லவரையன் நல்ல பலசாலிதான்! ஆயினும் அந்த வஜ்ரப் பிடியின் வேகம் அவன் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் ஒரு குலுக்குக் குலுக்கி அவனைச் செயலிழந்து நிற்கும்படி செய்து விட்டது.

அவ்விதம் பிடித்த இரும்புக்கரம் சின்னப் பழுவேட்டரையரின் கரந்தான் என்பதை நிமிர்ந்து பார்த்துத் தெரிந்து கொண்டான்.

புலவர்கள் தரிசன மண்டபத்திலிருந்து வெளியேறினார்கள்.

(தொடரும்)

**பா**ரத தேசத்தில் இந்த வருஷம் ஜனவரி மாதம் 26-ந் தேதி ஓர் அற்புதம் நிகழ்ந்தது. அதுதான், கத்தியின்றி இரத்தமின்றி முப்பத்து முக்கோடி மக்கள் பூரண சுதந்திரம் பெற்றுக் குடியரசு ஸ்தாபித்த அற்புதம். அதைப் பற்றிப் படித்துப் படித்து நேயர்களுக்கெல்லாம் இதற்குள்ளே அலுத்துப் போயிருக்கும். ஆகையால் அந்த இருபத்தாறாந் தேதி அற்புதத்தை அத்துடன் விட்டு விட்டு, இருபத்தெட்டாந் தேதி நிகழ்ந்த இரண்டாவது அற்புதத்தைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன். இது தமிழ்க் கலை உலகத்திலே நடந்த அற்புதம். அன்றைக்கு ஒரே மேடையில் பல மகாராஜாக்களும் மகாராணிகளும் வீற்றிருந்தார்கள். மந்திரிகளும் பிரதானிகளும் அமர்ந்திருந்தார்கள். சூரிய சந்திரர்களும் இந்திராதி தேவர்களும் வீற்றிருந்தார்கள். மும்மூர்த்தி

# இருபத்தெட்டாந்

களும் முனிபுங்கவர்களும் கூடக் காணப்பட்டார்கள். அவர்களுக்குப் பக்கத்திலேயே பல பிரகாசமான நட்சத்திரங்கள் ஜொலித்துக் கொண்டிருந்தன.

நாடக மேடையிலும் வெள்ளித் திரையிலும் புகழ்பெற்ற மகாராஜாக்கள், மகாராணிகள், மந்திரி பிரதானிகள் முதலியோரைப் பற்றித்தான் சொல்கிறேன்.

இத்தனை பேருக்கு நடுவில் இந்தக் காலத்து நிஜ அரசாங்க மந்திரிகள் இருவரும் காணப்பட்டார்கள். ஆஸ்தானக் கவி ஒருவரும் அங்கே வீற்றிருந்தார்.

தேனாம்பேட்டை காங்கிரஸ் பொருட்காட்சியைச் சேர்ந்த அரங்க மேடையிலேதான் மேற்கூறிய அதிசயமான காட்சியை

**அமரர் கல்கி**

28-ந் தேதி மாலை கண்டோம்.

ஸ்ரீ டி.கே. ஷண்முகம், ஸ்ரீ வி.சி. கோபாலரத்தினம் இவர்களைப் போன்ற நாடகமேடை மன்னர்கள் என்ன, ஸ்ரீ தியாகராஜ பாகவதர், ஸ்ரீ கே.பி. சுந்தராம்பாள் போன்ற வெள்ளித்திரை நட்சத்திரங்கள் என்ன, ஸ்ரீ சாரங்கபாணி, ஸ்ரீ ராமச்சந்திரன் போன்ற 'வால்' நட்சத்திரங்கள் என்ன, - இவர்களுக்கு மத்தியில் இக்கால அரசாங்க மந்திரிகளான கனம் பக்தவத்ஸலமும் கனம் ரோச் விக்டோரியாவும் அமர்ந்திருந்தார்கள்.


டி.கே. ஷண்முகம்

அதுவே அரங்க மேடை. ஒரு மாதத்துக்கு மேலாக தினந்தோறும் அந்த மேடையில் ஒரு நாடகமோ அல்லது நாட்டிய நாடகமோ நடந்து வந்தது. சில தினங்களில் இரண்டு நாடகங்கள் கூட நடந்தன. அப்படிப்பட்ட அரங்க மேடையில் நாடக மன்னர் யாராவது ஒருவர் திடீரென்று எழுந்து நின்று கொண்டு,

"மந்திரி! நாட்டில் மும்மாரி பெய்கிறதா? நீர்வளம், நிலவளம் குறைவின்றி இருக்கிறதா? மக்களுக்குத் தினம் தவறாமல் மூன்று வேளை உணவு கிடைக்கிறதா?" என்று இப்படி ஏதாவது கேட்டு வைத்தால், கனம் பக்தவத்ஸலமும், கனம் ரோச் விக்டோரியாவும் என்ன பதில் சொல்வார்கள் என்பதைப் பற்றி எனக்குக் கவலையாயிருந்தது. அவர்கள் சொல்லும் பதில் மேற்படி நாடக மேடை மன்னருக்குத் திருப்தியளிக்காவிட்டால், "மந்திரி! உம்மை இந்தக்ஷணமே பதவியிலிருந்து

நீக்குகிறோம்!'' என்றும் சொல்லிவிடக் கூடும் அல்லவா?

நல்ல வேளையாக, அப்படியொன்றும் நேர்ந்துவிடவில்லை. ஏனெனில், அந்த அரங்க மேடையில் வீற்றிருந்த மன்னர்கள் முதலியோர் அங்கு எதற்காக கூடியிருக்கிறோம் என்பதை மறந்துவிடவில்லை. அவர்கள் அதை மறக்க முடியாதபடி நாடகக் கழகம் தொடங்குவதின் நோக்கம் என்ன என்பதை டைரக்டர் சுப்பிரமணியம் ஆரம்பத்திலேயே விளக்கமாக எடுத்துரைத்து விட்டார். பிறகு நாடகக் கழகத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ டி.கே. சண்முகம் அவர்களும் அந்த நோக்கத்தை விளக்கி, வெகு அழகாகப் பேசினார்.

ஆகவே அந் தக் கூட்டத்தின் நோக்கம் என்ன என்பதை யாரும் மறப்பதற்கில்லாமல் போய் விட்டது.

அந்த நோக்கம் என்ன என்பதை நானும் இங்கே சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

# தேதி அற்புதம்!

தமிழ்நாடு இந்த நாளில் பல துறைகளிலும் சிறப்பாக முன்னேறியிருக்கிறது. சங்கீதம், நடனம், கவிதை, வசனம், சித்திரம், பத்திரிகை, – ஆகிய துறைகளில் தமிழ் நாட்டை வேறு எந்த மாகாணமும் நெருங்க முடியாது! ஏன்? சென்ற ஒரு வருஷ காலத்தில் ஸினிமாவிலே கூடப் பிரமாதமான வெற்றி அடைந்திருக்கிறோம்.

ஆனால் கலைகளிலேயெல்லாம் மிக முக்கியமான நாடகக் கலை மட்டும் முன்னேற்றம் அடையவில்லை; க்ஷீணித்து வருகிறது என்று கூடச் சொல்லலாம்.

இதன் காரணம் என்ன? நம்மவர்களுக்கு நடிப்புத் திறமை இல்லையா? நாடகக் கலையில் நமக்கு ஆர்வம் இல்லையா?

பிரமாதமான நடிப்புத் திறமை படைத்தவர்கள் தமிழ் நாட்டில் இருக்கிறார்கள். நாடகக் கலையில் அளவில்லாத ஆர்வம் உள்ளவர்களும் இருக்கிறார்கள்.

நவாப் ராஜமாணிக்கத்தின் தேவி நாடக சபையார், சக்தி நாடக சபையார், ஸ்ரீ டி.கே. சகோதரர்கள்,– இவர்களை நடிப்புத் திறமையில் மிஞ்சக் கூடியவர்கள் இந்தியாவில் வேறு எங்குமில்லை. இவர்களையன்றி, வேறு அமெச்சூர் நடிகர்கள் எவ்வளவோ பேர் சிறந்த திறமையுள்ளவர்களாகத் தமிழ் நாடெங்கும் இருக்கிறார்கள். இருந்தும் என்ன பயன்?

நவாப் ராஜமாணிக்கம் அவர்கள் எத்தனையோ இன்னல்களுக்கிடையில் அய்யப்பனிடம் வைத்த அசையா நம்பிக்கையின் காரணமாகவே தேவி நாடக சபையைத் தொடர்ந்து நடத்தி வருகிறார்.

ஸ்ரீ டி.கே. சகோதரர்கள் தங்கள் நாடகக் கம்பெனியை மூடிவிடுவதென்று தீர்மானித்திருக்கிறார்கள்.

மற்றத் தொழில் நாடக சபைகள் அநேகமாகப் பிராணனை விட்டு விட்டன; அல்லது குற்றுயிராக ஜீவித்துக் கொண்டு வருகின்றன.

அமெச்சூர் நாடக சபைகளில் பழைய காலத்து ஸுகுண விலாஸ



• சாரங்கபாணி

சபை முதலியவற்றுடன் ஒப்பிடக் கூடிய சபை தற்சமயம் ஒன்றுமேயில்லை.

நாடகக் கலைக்கு இந்த நிலைமை ஏன் ஏற்பட்டது என்று ஆராய்ந்தால், சில காரணங்கள் உடனே புலப்படும்.

1. ஸினிமாக்கள் நாடகங்களுக்கு எதிரிகளாக முளைத்திருக்கின்றன. நாடகத்தைக் காட்டிலும் சொற்பக் கட்டணத்தில் பல கவர்ச்சிகரமான அம்சங்கள் பொருந்திய ஸினிமாக்களை மக்கள் பார்க்க முடிகிறது. ஸினிமாக்களுக்கு ஏராளமான செலவில் விளம்பரம் செய்யப்படுவதால் நாடக மேடையைக் காட்டிலும் ஸினிமா மக்களின் மனத்தை அதிகமாகக் கவர முடிகிறது.

2. குறைந்த கட்டணத்தில் ஏராளமான ஜனங்கள் வசதியுடன் பார்க்கும்படியான நல்ல நாடகக் கொட்டகைகள் தமிழ் நாட்டில் இல்லை. இரண்டொரு நாடகக் கொட்டகைகள் இருக்கின்றன; அவையும் மோசமான நிலைமையில் இருக்கின்றன. அவற்றுக்குப் போலீஸ் லைஸென்ஸ் கிடைப்பது பிரம்மப் பிரயத்தனமாயிருக்கிறது.

3. லட்சக்கணக்கான மூலதனம் போட்டு உற்பத்தி செய்யப்படும் ஸினிமாக்களையும் கலை ஆர்வங் காரணமாக நடத்தப்படும் நாடகங்களையும் ஒரே தரமாகச் சர்க்கார் மதித்து 'எண்டெர்டெயின்மெண்ட் டாக்ஸ்' விதிக்கிறார்கள். அதற்குத் தமிழில் 'தமாஷா வரி' என்ற அழகான பெயரும் வந்திருக்கிறது. நாடகக் கலைக்குத் 'தமாஷா வரி' போடுவதைப் போன்ற தமாஷ் வேறு ஒன்றும் இருக்க முடியாது. இந்தத் தமாஷா வரி நாடகம் நசிப்பதற்கு ஒரு முக்கிய காரணமாயிருக்கிறது.



• டி.ஆர். ராமசந்திரன்



• பக்தவத்சலம்

இந்த மூன்று பெருங் காரணங்களினாலும் மற்றும் சில சில்லறைக் காரணங்களினாலும் க்ஷீணித்துக் கொண்டு வரும் நாடகக் கலைக்குப் புத்துயிர் கொடுத்து வளர்ப்பதற்காகவும், அவ்விதம் வளர்ப்பதற்குரிய வழிகளைக் கண்டு பிடித்துத் தகுந்த பிரயத்தனங்களைச் செய்வதற்காகவுமே 'நாடகக் கழகம்' ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

* * * *

நாடகக் கலை நசித்து வருவதாக இருந்தால், அதற்கு அப்படிப் பிரயத்தனப்பட்டுப் புத்துயிர் கொடுக்க வேண்டிய அவசியம் என்ன? அதை வளர்க்க வேண்டிய அவசியந்தான் என்ன? நாடகக் கலை க்ஷீணித்து நசித்துப் போனால் போகட்டுமே?- என்று சிலருக்குத் தோன்றக்கூடும்.

நாடகக் கலை க்ஷீணிக்கும்படியோ, நசித்துப் போகும்படியோ விடவே கூடாது.

அப்படி விடுவது விவேகம் சிறிதும் அற்ற செயலாகும்.

ஏனெனில், ஒரு நாட்டின் புனருத்தாரண முயற்சிகளுக்கு மிகவும் உதவி செய்யக்கூடிய சாதனங்களுக்குள்ளே நாடகக் கலை மிகச் சிறந்த சாதனம்.

நாடகக் கலை, மற்றும் பல கலைகளைத் தனக்குள் அடக்கி வைத்துக் கொண்டிருக்கும் கலைப் பொக்கிஷம். நாடகத்தில் இலக்கியம் இருக்கிறது; சங்கீதம் இருக்கிறது; நடனம் இருக்கிறது; சித்திரம் இருக்கிறது; சிற்பமுங்கூட இருக்கிறது. மற்ற எல்லா அருங் கலைகளுக்கும் நாடகத்தில் இடம் இருக்கிறது. ஆகவே, நாடகக் கலை வளருவதின் மூலம் மற்ற எல்லாக் கலைகளும் வளருகின்றன.

அதுமட்டுமல்ல; மற்ற எந்தத் தனிக் கலையைக் காட்டிலும் நாடகக் கலை பெருந்திரளான மக்களின் கவனத்தைக் கவர்ந்து அவர்களை ரஸிகர்களாக்கக் கூடியது.

கவிதையை அநுபவிக்க மிக்க அறிவாற்றலும் பண்பாடும் வேண்டும். உயர்தர சங்கீதத்தை எல்லாரும் ரஸித்து விட முடியாது. பரத நாட்டியத்தின் நுட்பங்களை அறிந்து ரஸிப்பது மிகக் கடினமான காரியம். அவ்விதமே சித்திரமும் சிற்பமும் சிலருடைய கவனத்தையே கவருகின்றன.

எனினும் இந்தக் கலைகளை வளர்ப்

பதற்காக நம்முடைய சுதந்திர சர்க்கார் எவ்வளவோ செய்கிறார்கள். ஆஸ்தான கவிஞர்களை நியமித்திருக்கிறார்கள். சிறந்த இலக்கியங்களுக்குப் பரிசு கொடுக்கிறார்கள். சங்கீத-சித்திர-சிற்பக் கலா சாலைகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்த மாதிரி பிரயத்தனங்களின் அவசியத்தைப் பொது மக்களும் உணர்ந்து ஆதரிக்கிறார்கள்.

ஆனால், நாடகக் கலை மட்டும் என்ன பாவத்தைச் செய்தது? நாடகக் கலையை ஏன் சர்க்காரும் பொது மக்களும் புறக்கணிக்க வேண்டும்? அந்தக் கலைக்கு உதவி செய்ய வேண்டியதன் அவசியத்தை ஏன் உணராமலிருக்க வேண்டும்?

ருஷியாவில் ஸோவியத் அரசாங்கம் ஸ்தாபனம் ஆனதும், ஸோவியத் சர்க்கார் முதன் முதலாகச் செய்த காரியம் ஒன்றை நேயர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன்.

ஸோவியத் அரசாங்கம் ஸ்தாபிதமான முதல் மூன்று வருஷத்துக்குள்ளே ருஷியாவில் ஒவ்வொரு நகரத்திலும் ஒவ்வொரு பட்டணத்திலும் ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு நாடக மேடை ஏற்பட வேண்டும் என்று உத்தரவு போட்டார்கள். அந்த உத்தரவு காரியத்தில் நடப்பதற்கும் வேண்டிய ஏற்பாடு செய்தார்கள்.

இவ்விதம் நாடெங்கும் ஏற்பட்ட ஆயிரக் கணக்கான நாடக மேடைகளைக் கொண்டே பொது மக்களுக்குச் சொல்ல வேண்டியதையெல்லாம் சொன்னார்கள். பிரசாரம் செய்ய வேண்டியதையெல்லாம் செய்தார்கள். ருஷியா இன்றைக்கு உலகத்திலே மிகப் பெரிய வல்லரசாக-அமெரிக்காவையும் எதிர்த்து நிற்கக் கூடிய பேரரசாக-விளங்குவதற்கு அந்த ஆயிரக்கணக்கான நாடக மேடைகளே காரணமாகும்.

அவ்வளவு சக்தியுள்ள ஒரு சாதனத்தை நசிக்கும்படி விடுவதைப்போல அறிவீனம் வேறு என்ன இருக்க முடியும்?

* * * *

இந்தியா இன்றைக்குப் பூரண சுதந்திரம் பெற்றிருக்கிறது. குடியரசும் ஸ்தாபிதமாகிவிட்டது. ஆனால் இத்துடன் வேலை முடிந்து விடவில்லை. நாட்டில் எல்லாவித முன்னேற்றங்களும் இனிமேலேதான் ஏற்பட வேண்டும்.


• தியாகராஜ பாகவதர்

நாடகக் கலையை நன்கு உபயோகப்படுத்தினால் எல்லாவித முன்னேற்றங்களும் துரிதமாக ஏற்படும்.


• கே.பி. சுந்தராம்பாள்

நாடகக் கலையை என்ன நோக்கத்துக்காகப் பயன்படுத்த வேண்டும் என்பது பற்றிப் பல்வேறு அபிப்பிராயங்கள் இருக்கத்தான் இருக்கும்.

பரம பக்த சிரோமணியான நவாப் ராஜ மாணிக்கம் அவர்கள் அன்று அனுப்பியிருந்த நீண்ட வாழ்த்துச் செய்தியில், "நாடகக் கலையின் மூலம் ஆஸ்திகத்தையும் தெய்வ பக்தியையும் வளர்ப்போமாக!"என்று குறிப்பிட்டிருந்தார்.

ஆஸ்தான கவிஞர் நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை அவர்கள் கூறிய வாழ்த்துரையில் "நாடகக் கலையின் மூலம் காந்தியத்தைப் பரப்ப வேண்டும்" என்று சொன்னார்.

ஸ்ரீமதி கே.பி.சுந்தராம்பாள் அவர்கள், "நம்முடைய முன்னோர்கள் அருளிய கற்பு முதலிய தர்மங்களை நாடகத்தின் மூலம் பரப்ப வேண்டும். ஆகவே சமூக நாடகங்களோடு பழைய புராண இதிகாசக் கதைகளையும் நடிக்க வேண்டும்" என்று சொன்னார்.

இம்மாதிரி நாடகத்தின் மூலம் பலவித இலட்சியங்களையும் நாட்டில் பரப்புவதற்கு இடம் இருக்கிறது.

ஆனால் முதலில் நாடகக் கலை வளர வேண்டும். நாடகக் கலை நன்கு வளர்ந்தால் அதை அவரவர்களும் தங்கள் தங்களுக்கு முக்கியமாகத் தோன்றும் இலட்சியங்களுக்கு உபயோகித்துக் கொள்ளலாம்.

ஆகவே என் அபிப்பிராயம், நாடகக் கழகத்தின் இலட்சியம் நாடகக் கலையை வளர்ப்பதாகவே இருக்க வேண்டும்




என்பதுதான். யார் எந்த இலட்சியத்துக்காக அதை உபயோகப்படுத்தினாலும், மொத்தத்தில் நாடகக் கலை வளர்ச்சியினால் சமூகம் நன்மையடையும் என்பதில் சந்தேகம் இல்லை.

* * * *

ஜனவரி 28ந் தேதி ஆரம்பிக்கப்பட்ட நாடகக் கழகம் சிறந்த இடம், பொருள், ஏவல் ஆகிய சாதனங்களுடன் நன்கு ஆரம்பமாகியிருக்கிறது.

இடம் மிகவும் 'ஆகி வந்த' இடம். காங்கிரஸ் பொருட்காட்சி அரங்க மேடை. இங்கே சென்ற ஒன்றரை மாதத்தில் பல உயர்ந்த நாடகங்கள் நடந்து, பதினாயிரக் கணக்கான மக்கள் பார்த்துக் களித்திருக்கிறார்கள். அத்தகைய மேடையில் ஆரம்பமான நாடகக் கழகம் சிறந்து விளங்கிப் பணியாற்றும் என்பதில் சந்தேகமில்லை.

தற்சமயம் தமிழ்நாட்டில் நாடகக் கலையில் தலைசிறந்து விளங்குவோரில் ஒருவரான ஸ்ரீ டி.கே.சண்முகம் நாடகக் கழகத்தின் தலைவர் பதவியை ஏற்றிருக்கிறார்.

அமெச்சூர் நடிகர்களின் இணையில்லாத் தலைவர் என்று சொல்லக்கூடிய ஸ்ரீ வி.சி.கோபால ரத்தினம் அவர்களும், மற்றும் நாடக மேடையிலும் வெள்ளித் திரையிலும் புகழ்பெற்ற ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன், ஸ்ரீ எம்.கே.தியாகராஜ பாகவதர், ஸ்ரீ எஸ்.வி.சகஸ்ரநாமம் முதலியவர்களும் கழகத்தின் துணைத் தலைவர்கள். டைரக்டர் கே. சுப்பிரமண்யமும் சிறந்த நகைச்சுவை நடிகரான ஸ்ரீ டி.என். சிவதாணுவும் செயலாளர்கள். 'அந்தக் காலத்திலே காலேஜிலே படித்த' ஸ்ரீ கே.சாரங்கபாணி, கழகத்தின் பொக்கிஷதாரர். மற்றும் நாடக நூலாசிரியர்கள், பத்திரிகாசிரியர்கள், நடிகர்கள், ரஸிகர்கள் முதலியோர் கழகத்தில் உறுப்பினராயிருக்கிறார்கள்.

பல வேறு ஸ்தாபனங்களில் பல்வேறு பணிகளில் ஈடுபட்டிருக்கும் இத்தனை பேரும் ஒருங்கு சேர்ந்து இந்த நாடகக் கழகத்தைத் தொடங்கியிருக்கிறார்கள். ஆகையினாலேயே இதை இருபத்தெட்டாந் தேதி அற்புதம் என்று சொன்னேன்.

இந்த அற்புதம் ஒருநாள் அற்புதமாகவோ, ஒரு வருஷ அற்புதமாகவோ போய்விடாது என்று நிச்சயமாக நம்புகிறேன்.

பாரதக் குடியரசைப் போலவே இந்த நாடகக் கழகமும் நீடூழி நிலைத்து நின்று தமிழ் நாட்டுக்கு ஒப்பற்ற தொண்டு புரியும் என்று எதிர்பார்க்கிறேன்.

**(கல்கி, பிப்ரவரி–5, 1950 இதழில் வெளியானது.)**

# த.மா.காவின் ஆத்ம பரிசோதனை:

# என்ன செய்யப் போகிறார் மூப்பனார்?

தமிழ் மாநில காங்கிரஸ் கட்சியின் நிர்வாகிகள் பலரும் ஒட்டுமொத்தமாகத் தங்களுடைய ராஜினாமா கடிதங்களை மூப்பனாரிடம் சமர்ப்பிக்க வேண்டிய அவசியம் என்ன? கடந்த நாடாளுமன்றத் தேர்தலில் ஏற்பட்ட எதிர்பாராத தோல்விக்குப் பிறகு த.மா.காவில் என்னதான் நடக்கிறது? கட்சியின் முக்கியப் பொறுப்பிலுள்ள (தற்போது ராஜினாமா செய்துள்ள) பலரையும் சந்தித்துப் பேசினோம். கட்டுரையின் எந்த இடத்திலும் தங்களின் பெயரைக் குறிப்பிடக் கூடாது என்கிற நிபந்தனையின் பேரில் அனைவரும் நம்மிடம் வெளிப்படையாகப் பேசினார்கள். அவர்கள் கூறிய கருத்துக்களின் அடிப்படையிலேயே இந்தக் கட்டுரை எழுதப்படுகிறது...

"கட்சியிலுள்ள அனைத்து நிர்வாகிகளும் தங்களது ராஜினாமா கடிதங்களை ஒட்டுமொத்தமாக மூப்பனாரிடம் சமர்ப்பித்ததென்பது, அவரை தர்மசங்கடத்தில் ஆழ்த்துகிற ஒரு செயல் ஆகாதா?" என்று ஒரு நிர்வாகியிடம் கேட்டபோது, "இல்லை. கட்சியின் மாவட்டத் தலைவர்கள் சிலரிடம் மூப்பனாருக்கு அதிருப்தி இருக்கிறது. அவர்களையெல்லாம் எப்படி பொறுப்பிலிருந்து நீக்குவது என்று தலைவர் (மூப்பனார்) யோசித்துக் கொண்டிருப்பது எங்களுக்குத் தெரியும். காரணம், அவர்களெல்லாம் தலைவராலேயே நியமனம் செய்யப்பட்டவர்கள். இந்த நிலையில் அவர்களை எப்படி பொறுப்புகளிலிருந்து விடுவிப்பது என்கிற தர்மசங்கடம் தலைவருக்கு இருக்குமல்லவா! தலைவரின் இந்த தர்மசங்கடத்தை எப்படித் தீர்ப்பது என்று யோசித்தோம். அதன் விளைவுதான் எங்களது ஒட்டுமொத்த ராஜினாமா!

"அனைவருமே ராஜினாமா கடிதங்களைக் கொடுத்துவிடுவதென்று தீர்மானிக்கிறபோது சம்பந்தப்பட்ட மாவட்டத் தலைவர்களும் எங்களோடு சேர்ந்து கொடுத்துத்தானே

ஆக வேண்டும்! இதனால் சிலரை விலகச் சொல்கிற சங்கடம் தலைவருக்கு ஏற்படாதல்லவா! இதுதான் எங்களின் முடிவுக்குக் காரணமே தவிர, தலைவரை ஒரு நெருக்கடிக்கு உள்ளாக்க வேண்டும் என்கிற நோக்கத்தில் இதை நாங்கள் செய்யவில்லை!" என்றார் அவர்.

பலரும் ஒட்டுமொத்தமாகத் தங்கள் ராஜினாமா கடிதங்களைக் கொடுத்தபோது மூப்பனாரின் ரியாக்ஷன் எப்படி இருந்ததாம்?

"ஒரு ரியாக்ஷனும் இல்லை. எல்லாவற்றையும் அமைதியாக வாங்கி வைத்துக் கொண்டு டெல்லிக்குப் புறப்பட்டுப் போய் விட்டார்!" என்றார் இன்னொருவர்.

இப்படியொரு தோல்வியைக் கட்சி நிர்வாகிகளும் மூப்பனாரும் எதிர்பார்த்தார்களா? என்ற கேள்விக்கு, "நாங்களெல்லாம் நம்பிக்கையோடு இருந்தாலும் மூப்பனார் ஓரளவுக்கு எதிர்பார்த்தார் என்றுதான் நாங்கள் நினைக்கிறோம்!" என்றார் வேறொரு முக்கியஸ்தர்.

தமிழகத்தில் உள்ளாட்சித் தேர்தல்கள் நடந்து முடிந்த பிறகு தி.மு.க - த.மா.கா வினருக்கிடையிலான விரிசல் பெருமளவில் ஆரம்பித்து விட்டதாகவே பலரும் சொன்னார்கள். மூன்றில் ஒரு பங்குதான் உள்ளாட்சித் தேர்தல்களில் த.மா.காவுக்கு ஒதுக்கப்பட்டது என்பதிலேயே பலருக்கும் அதிருப்தி.

இப்படி குறைவான பங்கீடு காரணமாக உள்ளாட்சி நிர்வாகங்களில் த.மா.காவினரால் எதுவும் செய்ய முடியாத நிலை. தி.மு.க. வினரின் 'எல்லா' விஷயங்களுக்கும் ஒத்துப் போகும் த.மா.கா. உறுப்பினர்கள் கூறும் மக்கள் பிரச்னைகளுக்குத்தான் தி.மு.க. வினர் கவனம் செலுத்துகிறார்கள் என்பதால் தூய்மையான உறுப்பினர்களின் குரல் எந்த நிலையிலும் எடுபடுவதில்லை. இதனால் மக்களும் த.மா.காவினரிடம் அதிருப்தியடைந்து விட்டதாகச் சொன்னார்கள்.

உதாரணத்துக்கு ஓரிடத்தில் சாக்கடை கட்ட வேண்டும் என்கிற கோரிக்கை. ஒன்றுக்கு நான்கு என்கிற விகிதத்தில்தான் சிமெண்ட், மணல் கலவை இருக்க வேண்டும். ஆனால் ஒன்றுக்குப் பத்து என்கிற விகிதத்தில்தான் போடப்படுகிறதாம். இதைத் தட்டிக் கேட்கிற உறுப்பினரின் வார்டுக்கு எதுவும் செய்வதில்லை. பேசாமல் அடங்கிப் போகிற உறுப்பினரின் பகுதிக்கு ஒன்றுக்குப் பத்து என்கிற விகிதத்தில் சாக்கடைகள் கட்டப்படுவதாகச் சொன்னார்கள்.

'இன்னும் சொல்ல வேண்டுமானால் சென்னை மாநகராட்சியில் பல பணிகளுக்காக ஒதுக்கப்பட்ட நிதிகள் செலவழிக்கப் படாமலேயே உள்ளது' என்கிறார்கள். அதற்குக் காரணம், தங்களுக்குக் 'கமிஷன்' கிடைக்கிற மாதிரியான வழிமுறைகள் அவர்களால் இன்னமும் கண்டு பிடிக்கப்படாமல் இருப்பதுதானாம். "'கமிஷன்' வராத எந்த வழிமுறையிலும் அவர்கள் மக்கள் நலப்பணிகளைச் செய்யத் தயாராயில்லை. நாங்கள் மன்றக் கூட்டங்களில் என்னதான் கரடியாகக் கத்தினாலும் எங்கள் குரல் எடுபடுவதேயில்லை. இதற்கு அதிகாரிகளும் உடந்தை என்பது ஆச்சரியத்துக்குரிய விஷயமே அல்ல. எங்கள் கட்சியைச் சேர்ந்த சில கவுன்சிலர்களும் உடந்தையாக இருக்கிறார்களே!" என்று மனம் நொந்து கூறினார் சென்னை மாநகராட்சியில் கவுன்சிலராக இருக்கிற த.மா.கா. பிரமுகர் ஒருவர்.

"இதற்கெல்லாம் ஆதாரம் இருக்கிறதா?" என்று நாம் அவரிடம் கேட்டபோது, பல்வேறு புள்ளி விவரங்களையும் நம்மிடம் எடுத்துக் காட்டினார். சென்னையில் பல இடங்களிலும் மாநகராட்சியின் அனுமதியின்றிக் கட்டப்பட்டுள்ள கட்டடங்கள் பற்றியும் கூறினார். "தேவையானால் சொல்லுங்கள்; ஒரு சிறப்பு மலரே வெளியிடுகிற அளவுக்கு விஷயங்கள் தருகிறேன்!" என்றார் அவர்.

"த.மா.கா. என்பது ஊழலை எதிர்த்து உருவான கட்சி. இதன் காரணமாகவே மக்கள் எங்களுக்குச் சென்ற தேர்தலில் அமோக ஆதரவளித்தார்கள். இந்த நிலையில் தமிழகம் முழுவதுமுள்ள மாநகராட்சிகள், நகராட்சிகள், பஞ்சாயத்துகள் போன்றவற்றில் முறைகேடுகள் நடந்து கொண்டிருப்பதை நாங்கள் ஏன் வெளிப்படுத்தாமல் மௌனமாக இருக்கிறோம் என்கிற கோபம் மக்களிடையே இருக்கிறது. ஊழலை எதிர்க்க உருவான கட்சி, இப்படி இருக்கலாமா? எங்களில் சில உறுப்பினர்களும் தி.மு.கவினருக்கு உடந்தை

**"என்டி... ஆபீஸ் விட்டு வந்ததும் உன் கணவர் இப்படித் தூங்குகிறார்?"**

**"ஆமாம் மாமி! ஆபீசிலே ரொம்பத் தூங்கினதாலே ஒரே களைப்பா இருக்காம்; அதான்!"**

**— பாபுஜி**



யாக இருக்கலாமா? இதிலிருந்து எங்கள் கட்சி மீண்டாக வேண்டும். இதற்கு நாங்கள் முழுமையானதொரு சுய பரிசீலனை செய்தே ஆக வேண்டும். இல்லையென்றால் எங்கள் செல்வாக்கு மீளமுடியாத அளவுக்குச் சரிந்து விடும்!" – இதுவே கட்சியிலுள்ள பலரின் கருத்தாக இருக்கிறது. "96-ல் தி.மு.க. வுடன் கூட்டு வைத்தது சரி. இப்போது வைத்தது தவறு!" என்றார்கள் அவர்கள்.

இதெல்லாம் மூப்பனாருக்குத் தெரியாதா என்றால் "தெரியும்!" என்கிறார்கள். "இனிமேல் நாங்கள் பழையபடி காங்கிரஸோடு இணைந்து மீண்டும் அந்த கோஷ்டிப் பூசலில் சிக்கிக் கொள்வதில் எங்களில் யாருக்கும் உடன்பாடு இடையாது. ஆனாலும் காங்கிரஸோடு தேர்தலில் தொகுதி உடன்பாடு வைத்துக் கொள்வதில் எங்களுக்கு ஆட்சேபணையில்லை. இதன் காரணமாகத்தான் கடைசி நேரம் வரையில் சோனியா காந்தியிடமிருந்து ஏதாவது சிக்னல் வருகிறதா என்று காத்திருந்தோம். தி.மு.க. வோடு கூட்டணி என்பதில் மூப்பனார் காட்டிய அப்போதைய மௌனம் கூட இதன் காரணமாக வந்ததுதான்" என்றார்கள்.

"ஆனால் எங்களுக்குள் எந்தவிதமான கருத்து வேறுபாடுகளும் இல்லை என்று தானே மூப்பனாரும் கலைஞரும் அறிக்கைகள் விட்டார்கள்?" என்று கேட்டபோது, "காமராஜர் ஆட்சியமைப்போம்!' என்று ஒருபுறம் கோஷமெழுப்பிக் கொண்டு, மறுபுறம் நாங்கள் தி.மு.கவுடன் கைகோத்துக் கொண்டிருந்தால் யாருக்கு எங்கள் மேல் நம்பிக்கை வரும்?'' என்று கொஞ்சம் சூடாகவே பேசினார்கள் பலரும்.

சரி, இனி த.மா.கா. என்னதான் செய்யப் போகிறது? இந்தத் தேர்தலில் இழந்த செல்வாக்கை எப்படி மீட்கப்போகிறது?

"மற்ற கட்சிகளைப் போலவே எங்கள் செயல்பாடுகளும் இருக்கக் கூடாது. வித்தியாசமாக இருக்க வேண்டும். மாவட்டத் தலைவர்களுக்கெல்லாம் கட்சியின் சார்பில் டாடா சுமோ கொடுக்கப்பட்டிருக்கிறது. மாவட்டத் தலைவர் என்கிற அளவில் இருக்கிற கட்சிக்காரர் எவரும் கார் இல்லாமல் இருக்க மாட்டார். இந்த நிலையில் கட்சியிலிருந்து எதற்காக டாடா சுமோ? இதற்குப் பதில் கட்சிப் பணிகளைச் செய்வதற்காக அவர்களுடைய காருக்கு பெட்ரோல் அலவன்ஸ் தரலாம். இணைச் செயலாளர் போன்று சாதாரண நிலையில் இருப்பவர்களுக்கு இரு சக்கர வாகனங்கள் வாங்கித் தரலாம். அப்போதுதான் கட்சி கிராம அளவில் வேரூன்றி வளரும்!'' என்றார் இன்னொரு முக்கியஸ்தர்.

பலரிடமும் நாம் பேசியதிலிருந்து தெரிந்து கொண்ட தெளிவான விஷயங்கள் இவைதான் :

1. உள்ளாட்சித் தேர்தல்களுக்குப் பிறகு, தி.மு.கவினரின் கை மேலோங்கியிருப்பதால் அவர்களின் 'செயல்'களுக்கு த.மா.கா. உறுப்பினர்கள் உடந்தையாக இருக்க வேண்டியிருக்கிறது. இது முற்றிலுமாகத் தவிர்க்கப்பட வேண்டும். அதற்கு தி.மு.கவுடனான கூட்டணியைத் தயவு தாட்சண்யம் பாராமல் முறித்துக் கொள்வது அவசியம். அப்போதுதான் த.மா.காவின் செல்வாக்கு மக்களிடையே அதிகரிக்கும்.

2. எந்தக் காரணம் கொண்டும் நாங்கள் காங்கிரஸில் இணைய மாட்டோம். அவசியமானால் தேர்தல் உடன்பாடு மட்டும்தான் வைத்துக் கொள்வோம் என்பதைத் தலைவர் மூப்பனார் வெளிப்படையாகவே அறிவித்து விட வேண்டும்.

3. ஊழலை எதிர்க்கிற கட்சி என்பதால், ஆளுங்கட்சியினரோடு சேர்ந்து கொண்டு அப்படியும் இப்படியுமாக இருக்கிற, தங்கள் கட்சிக்காரர்களையும் தலைவர் முற்றிலுமாகக் களையெடுத்து, த.மா.கா. தனது தனித்தன்மையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

இவற்றைத்தான் மூப்பனாரிடம் கட்சியின் முன்னணித் தலைவர்களும் தொண்டர்களும் கோரிக்கைகளாக வைத்திருக்கிறார்கள். த.மா.கா. தன்னைத்தானே சுத்திகரித்துக் கொள்வதற்காக இந்த அதிரடி முடிவுகளை மூப்பனார் எடுப்பார் என்றும் நம்பிக்கையோடு காத்திருக்கிறார்கள்!

— **இளங்கோவன், ஸ்ரீனிவாசன்**

வண்ணப்படம் : **கோபிநாத்**

# ராமர்

"என்ன ரொம்ப நாள் ஆச்சே நீ அடை சுட்டு?" என்று கேட்டால் போதும்.

"மசக்கைப் பொம்மணாட்டி தேவலாம்! நீங்க என்னண்ணா அது வேணும் இது வேணும்னு கேக்குறீங்க" என்பாள். "சரிதான் அவ்வளவு தான் நம்ம அதிர்ஷ்டம்" என்று போய்விடுவேன்! அன்று மதியமே வீட்டில் அடை மேஜைக்கு வரும். "அடேயப்பா! அடையா?" என்று அதிசயப்படும்போது அதை எதிர்பார்த்தவளாய் அவளிடம் சிரிப்பு மலரும். யாராவது ஏதாவது கேட்டு விட்டால்போதும். அதை உடனே செய்து கொடுக்கும் வரை அவளுக்குத் தூக்கம் வராது.

குழந்தையிலிருந்து பெரியவர்கள் வரை யாருக்கு எது பிடிக்கும் என்பது அவளுக்கு அத்துபடி. யார் வீட்டுக் குழந்தைக்கு என்ன பிடிக்கும் என்று தெரிந்து ஒரு சமயம் வீட்டில் எங்கள் சொந்தக்கார குழந்தைகளுக்காக 'கப் கேக்' செய்து வைத்திருந்தாள். சமையல் மிக அற்புதமாக இருக்கும். அமெரிக்காவில் என் நண்பர்கள் சாப்பிடுவதற்கென்றே 200 மைல் பயணம் செய்து வருவார்கள். நம் நாட்டு உணவு என்றில்லை. மாமிசமில்லாத அமெரிக்க உணவு, இத்தாலியன் உணவு, சைனீஸ் உணவு என்று அவளே அருமையாக வீட்டில் செய்வதுண்டு. வீட்டில் வாரத்தில் ஓரிரு நாள் அயல்நாட்டு உணவு சமைப்போம். இதில் நான்தான் தலைமை உதவியாளன் என்று சொல்லிக் கொண்டு சில சமயம் உள்ளே நுழைவேன். "இங்கு வந்து கச்சுமிச்சும் காட்டாமலிருந்தாலே போதும். உங்கள் வேலையைப்பாருங்கள்" என்று சில சமயத்தில் உத்தரவு வரும். ஆனால் அமெரிக்க, இத்தாலிய உணவு என்றால் என்னை செய்யச் சொல்வாள். சின்ன வயதிலிருந்தே உணவின் ருசி எல்லாம் எனக்கு நல்ல பரிச்சயம். எனவே என் தாய், வீட்டுக்கு விருந்து வரும்போது என்னைக் கூப்பிட்டு தான் பதம் பார்க்க, ருசிபார்க்கச் சொல்வார். பிரமாதமாக என் மனைவி போல் என்னால் சமைக்க முடியாவிட்டாலும் இந்த ருசி பார்க்கும் திறன், சமையலில் எதெதை ஏற்ற இறக்கம் செய்ய வேண்டும் என்று யோசனை சொல்லும் திறன் என்னை அமெரிக்காவின் பில்லியன் டாலர் கம்பெனிகளில் உணவுத்துறையில் ஆலோசகர் பதவியை அளித்தது. இந்த ஆர்வமும் நானாக மேற்கொண்டு உணவு பற்றிப் படித்ததும் சேர்ந்து பின்னால் ஒரு பெரிய உணவு நிறுவனத்தின் தலைமை நிர்வாகியாக நான்கு ஆண்டுகள் பணியாற்றினேன். புதிய உணவுப் பொருட்களை விற்பனைக்குக் கொண்டு வந்தேன். எங்கு ஆலோசகனாகப் போனாலும் என் மனைவியும் கூட வருவாள்; நல்ல யோசனை சொல்வாள். நான் நினைப்பதை செய்து காட்டுவாள்.

இன்னும் கூடப் பல சமயங்களில் ஓட்டலில் உணவு பிரமாதமாக இருக்கும்போது உள்ளே சென்று அங்குள்ள சமையல்காரரை மிகவும் பாராட்டிவிட்டு வருவேன்.




ஒரு சமயம் வீட்டில் நானில்லாதபோது என் உறவினர்கள் என்னைப் பற்றி ஏதோ சொல்லி இருக்கிறார்கள். அங்கிருந்த எனது இரண்டாவது மருமகள் மாலா "நீங்கள் எல்லாம் பெண்களை அடிமையாக நடத்துபவர்கள். நீங்கள் என்றாவது எங்கள் மாமா போல உங்கள் மனைவியைப் பாராட்டி இருக்கிறீர்களா சொல்லுங்கள் பார்க்கலாம்!" என்றிருக்கிறாள். நான்

எப்போதுமே எல்லோரையும் பாராட்டுவேன். என் மனைவி உட்பட. இவை எல்லாம் நான் பேராசிரியர் கல்கி அவர்களிடமிருந்து கற்றுக் கொண்டது. என் மனைவி சீதா ஏதாவது அபிப்ராயம் சொன்னால் அவர்கள் வீட்டிலும் சரி, எங்கள் வீட்டிலும் சரி எல்லோருமே கேட்பார்கள். அவ்வளவு நியாயமாக இருக்கும்.

மற்றொரு விஷயம் என்னை அதிசயிக்க வைத்தது. அவளது சகோதர சகோதரிகள் வீட்டுக்கு வந்து விட்டால் அவளுக்கு வீட்டில் கணவன் என்றொரு நபர் இருப்பது கூடத் தெரியாது! அவர்களுக்கு அவ்வளவு உபசாரம் நடக்கும். அவ்வளவு பாசம்.

அமெரிக்கா சென்ற மறு ஆண்டே, 1963லேயே நான் இந்தியா திரும்பிவிட வேண்டும், நம் நாட்டுக்குப் பணி புரிய வேண்டும் என்று தீர்மானித்திருந்தேன். அதனால் நான் 1963 லிருந்து இந்திய பாஸ்போர்ட்டைத்தான் வைத்திருந்தேன். அமெரிக்கக் குடிமகன் ஆகி இருந்தால் பல சௌகரியங்கள் கிடைத்திருக்கும் எனினும் நான் ஆகவில்லை.

அடிக்கடி நான் என் மனைவியிடம் இந்தியாவுக்கு திரும்பிச் செல்ல வேண்டியதன் அவசியத்தைப் பற்றியும், மகாத்மா காந்தி பற்றியும் பாரதி பற்றியும், வ.உ.சி. பற்றியும் நம் தேசியத் தலைவர்கள் பற்றியும் மணிக்கணக்கில் பேசிக்கொண்டிருப்பேன்.

# இருக்குமிடமே அயோத்தி!



**1987**ல் நான் அமெரிக்காவிலிருந்து திரும்பினேன். ஆனால் அதற்கு முன், 1984லேயே திரும்பிவிட வேண்டுமென்று திட்டமிட்டிருந்தேன். அப்போது சொந்த தொழில் செய்து கொண்டிருந்தேன். அப்போதெல்லாம் பல சமயம் இந்தியா திரும்புவது பற்றிப் பேச்சு வரும். பேச்சு வரும்போது கவனித்தேன். ஊருக்குத் திரும்புவதில்– தான் வருவதில் அவளுக்கு இஷ்டமில்லை என்று புரிந்தது.

கொஞ்ச நாளில் இப்படிப்பட்ட விவாதம் மூன்று மாதத்திற்கொருமுறை என்கிற ரீதியில் தீவிரமாகத் தொடர ஆரம்பித்தது. என் மனைவி "நான் வரவில்லை" என்று சொன்னதும் பேச்சை நிறுத்தி விடுவேன், "பேச இது சரியான தருணமல்ல" என்று. ஆனாலும் எப்படித்தான் அவளுக்கு அவள் இந்தியா திரும்ப வேண்டியதை எடுத்து நியாயமாகச் சொன்னாலும் கேட்பதாக இல்லை; வருவதாக இல்லை.

"இதோ பாருங்கள்! நீங்கள்தான் நாடு நாடு என்கிறீர்கள். நீங்கள் போய் வாருங்கள். நான் வர முடியாது. எனக்கு வரப் பிரியமில்லை. இத்தனை நாளும் நான்



'பிரபல அரசியல்வாதியோட பெண்ணை தாலி கட்டிக்கிட்டது தப்பாப் போச்சு..!''

''என்னாச்சு...?''

''கூட்டு குடித்தனத்தில் என்னாட்சி... தனிக்குடித்தனத்தில் சுயாட்சி... எப்பவுமே தன்னாட்சி' இதுக்கு ஒத்துக்கிட்டால்தான் நம்ம மனைமாட்சின்னு சொல்றா...!''

– கே.ஜி.எஸ். கோவிந்தன்

உழைத்தேன். குருவி மூக்கால் சேர்ப்பது போல பலவற்றையும் சேர்த்து வைத்திருக்கிறேன். இப்போது போய் நீங்கள் மீண்டும் ஆனா ஆவன்னாவில் ஆரம்பிப்பது போல மறுபடியும் அங்கு போய் வாழச் சொல்கிறீர்கள். குழந்தைகள் எல்லாம் இங்கிருக்கிறார்கள். என்னால் வர முடியாது. நான் அடிக்கடி வந்து உங்களைப் பார்த்துக் கொண்டு போகிறேன்'' என்றாள்.

எனக்கு வியர்த்தது. மறு பக்கத்தில் ''விஷயம் உச்ச கட்டத்திற்குப் போய் விட்டது. அவள் இனி வரமாட்டாள்'' என்று தெரிந்தபோது நான் என் கடைசி குற்ற உணர்வைத் தூண்டும் அஸ்திரத்தைப் பிரயோகித்தேன்.

"இதோ பார்! நீ சும்மா வந்து கிராமத்தில் நின்றால் கூட எத்தனையோ பெண்களுக்கு எவ்வளவோ தெம்பு ஏற்படும். நமக்குக் கொஞ்சமாவது தேசப்பற்று வேண்டாமா? எவ்வளவு பேர் ஏழைகள் அங்கே கஷ்டப் படுகிறார்கள்'' என்றேன்.

''உங்களுக்கே எல்லா தேசப் பற்றும் இருக்கட்டும். நான் வரப்போவதில்லை. என்னால் முடியாது. குழந்தை குட்டிகளை விட்டுவர'' என்றாள். அவள் கண்கள் கலங்கி இருந்தன.

நானும் பேசுவதை நிறுத்திக் கொண்டேன். அவளுடன் அப்படிப் பேசி புண்படுத்தி இருக்கக் கூடாது என்று என் மனம் என்னை சாடியது. "அவள் ஒரு ஆத்மா. அவள் பணியைச் செய்ய அவள் வந்திருக்கிறாள். நீ இப்படிப் பேசுவது தவறு" என்று எனக்குள்ளே யாரோ சொல்லிக் கொண்டிருந்தார்கள். அருகில் சென்று அமர்ந்தேன்.

"கோபித்துக் கொள்ளாதே. மன்னித்துவிடு. நீ வரா விட்டால் பரவாயில்லை. நான் அடிக்கடி வந்து உன்னைப் பார்த்துக் கொள்கிறேன். நீயும் சௌகரியப்பட்ட போது வா!'' என்று அவள் கண்களைத் துடைத்தேன்.

அது தான் நான் கடைசியாக நான் அவளை இந்தியா வரும்படிக் கேட்டது. அதற்குப் பிறகு ஓராண்டு ஓடிவிட்டது. தொழிலில் பல வேலைகள் இருந்தன. நான் அதில் மூழ்கிவிட்டேன். இது விஷயமாக அவளிடம் எதுவும் பேசுவதில்லை. அவள் வராதது பற்றி நான் சமாதானமடைந்து விட்டேன்.

ஒருநாள் காலை அவள் சொன்னாள்.

"என்ன இது? ஊருக்குப் போக வேண்டும் என்று சொல்லிவிட்டு இங்கே உட்கார்ந்து கொண்டு அக்கப் போர் பண்ணிக் கொண்டிருக்கிறீர்களே. கிளம்புவதைப் பாருங்கள்!'' என்றாள்.

எனக்கு ஏதோ பொறியில் தட்டினாற்போல இருந்தது. அவள் சாதாரண மனிதப் பெண்ணல்ல. தான் வரா விட்டாலும் தன் கணவன் ஆசை நிறைவேற வேண்டும் என்பதில்தான் எவ்வளவு அக்கறை! எண்ணி எண்ணி, அசந்து போனேன்.

அதன்பின் வேகமாக ஊர்திரும்பும் முயற்சியில் இறங்கினேன். அவள் வராததில் எனக்குக் கொஞ்சம் கூட வருத்தமில்லை. வாழ்ந்ததெல்லாம் வாழ்ந்தாயிற்று. இனி நாம் செய்ய வேண்டிய பணியை... வானப்பிரஸ்தம்






என்பார்களே அது இதுதானே என்றெண்ணினேன்.

நான் தனியே தமிழ்நாடு திரும்பினேன். திருவான்மியூரில் ஒரு சிறிய தனி வீடு. எங்கள் ஊர் இளைஞர்கள் இருவர். வைரம் என்ற இளைஞர் வீட்டோடு இருந்தார். கார் ஓட்டுவார். குமார் என்ற இளைஞர் எனது சகலர் மகன். வீட்டு வேலைகளிலிருந்து சமையல் வரை. ஒரு போன், ஒரு கார். வாழ்க்கை ஓடிக் கொண்டிருந்தது. இயக்கம் துவங்குவது சம்பந்தமாக சில வேலைகளைச் செய்து கொண்டிருந்தேன்.

ஓராண்டு ஓடியிருக்கும். என் மனைவி சீதா அமெரிக்காவிலிருந்து என்னைப் பார்த்துவிட்டுப் போக இந்தியா வந்திருந்தாள்.

பெண்ணில்லாத வீட்டின் அலங்கோலத்தைப் பார்த்தாள். எனக்குப் பிடித்ததைச் செய்து கொடுத்தாள்.

இப்படி எல்லாம் சாப்பிட்டு ஓராண்டுக்கு மேல் ஆயிற்று'' என்றேன். பிறகு அவள் இருந்த ஒரு மாதமும் விதவிதமாகச் சமைத்துப் போட்டாள். வீட்டை ஒழுங்கு படுத்தினாள். வீடு மீண்டும் களை கட்டியது.

ஒரு நாள் அமெரிக்காவிலிருந்து போன் வந்தது. எனது இரண்டாவது மகன் அசோகன் பேசினான். என் மனைவி போனை எடுத்தாள்.

''என்ன அம்மா! எல்லாம் எப்படிப் போவுது?''

''நல்லாப் போவுது!''

''என்ன ஏப்ரல் 19ம்தேதி தானே திரும்பி வர்றே?''

''இல்லை நான் வர்றதா இல்லே.''

''என்னம்மா இது? ரிடர்ன் டிக்கெட் வாங்கிருக்கே. வல்லியா?''

''ஆமாம். ஆமாம்.''

''ஏன் வரலே?''

''அப்பா இங்கே ரொம்ப கஷ்டப்படறாங்க. நல்ல சோறு கிடையாது; சாப்பாடு கிடையாது. கஷ்டப்படறாங்க. அதான் இங்கேயே தங்கறதா தீர்மானிச்சுட்டேன்.''




இதைக்கேட்ட எனக்கு ஆச்சரியமாய் இருந்தது. இப்படி ஒரு முடிவு எடுப்பாள் என்று நான் நினைக்கவில்லை. அவள் என்னிடம் சொல்லவும் இல்லை. நான் வேறு ஒரு அறையில் உட்கார்ந்திருந்தேன். போனில் மகனுடன் பேசிக் கொண்டிருந்ததை நான் கேட்டுத் தெரிந்து கொண்டது தான் இந்த விஷயம். எனக்கு ஒரு பக்கம் மகிழ்ச்சி பிடிபடவில்லை. இந்தப் பெண் இப்படி நமக்குத் தெரியாமல் ஒரு முடிவெடுத்திருக்கிறாளே என்ற ஆனந்த அதிர்ச்சி. தான் விரும்பியதையெல்லாம் துறந்து இங்கு வருகிறாளே, ரிட்டர்ன் டிக்கெட் எடுத்த ஒரு பெண்- என்ற எண்ணம் என் கண்களில் நீரை வரவழைத்தது.

ராமர் இருக்குமிடமே அயோத்தி என்று அவள் தீர்மானித்திருக்கக் கூடும்.

ஏனெனில் அவள் பெயர் சீதை!

(தொடரும்)



# "காட்டுக்குப் போய் படித்தேன்!"

அபஸ்வரம் ராம்ஜியின் தாகம் தாகம் நிகழ்ச்சி, மூன்று மாத இடைவெளிக்குப் பிறகு மறுபடி ராஜ் டி.வியில் ஒளிபரப்பாகத் தொடங்கியுள்ளது.

முதல்வாரம், வீரப்பன் வசிக்கும் காட்டுப் பகுதிக்கு பிக்னிக் செல்கிற குடும்பம் பற்றியது. தொடர்ந்து, கோவை மேட்டுப்பாளையத்தில் உள்ள 'பிளாக் தண்டர்' அம்யூஸ்மெண்ட் போக விரும்பும் சாதாரண தோட்டக்காரர் வீட்டுக் குழந்தைகள் என்று அடுத்தடுத்து திரைய வர விருக்கின்றன.

ஒரு பெரிய வித்தியாசம். முன்பு தாகம் தாகம் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கிய அம்ருதா ராம் இப்போது இல்லை; 'மேதா' என்கிற புத்தம் புதுமுகம் அறிமுகமாகிறார்!

மேதாவின் முழு பெயர் மேதாவிலாசினி. அபஸ்வரம் ராம்ஜி இவரை எப்படித் தேர்ந்தெடுத்தார்?

"எம்.டிவி, 'வி' சானல்களில் வரும் வீ.ஜே. எனப்படும் வீடியோ ஜாக்கிகள் போல, பளீரென்று நம் ஊரில் யாரும் இல்லை. அது போல ஒரு பெண்ணை, என் நிகழ்ச்சிக்காகத் தேடினேன்.... தேடினேன்... அழகுப் போட்டிகள்... பேஷன் ஷோக்கள்... கல்லூரி விழாக்கள் என்று ஒரு இடம் விடாமல் தேடினேன். நாற்பது பேரை வீடியோ டெஸ்ட் எடுத்துப் பார்த்தேன். பார்க்க பளிச்சென்று இருந்தால், தமிழ் உதைத்தது. தமிழ் உச்சரிப்பு ஓ.கே. என்றால், ஆள் தேரவில்லை.

"சில வாரங்களுக்கு முன்பு தநா. சுற்றுலா வளர்ச்சிக் கழகமும், ஒரு மாத இதழும் நடத்திய பாரம்பரிய ராஜா - ராணி அழகுப் போட்டியில் பங்கேற்க வந்திருந்தார் மேதா. பார்வையாளர்களைத் தம் நளினமான தோற்றத்தாலும், நடையாலும் ஒரு கலக்கு கலக்கிவிட்டார்.

"ஒரு குறிப்பிட்ட சுற்றில், அவர் அணிந்து வந்த காக்ரா சோளி, பாரம் பரிய உடையல்ல என்று நடுவர்கள் கூற, மேதா பரிசு பெற முடியாமல் போனது... ஆனால், என் நிகழ்ச்சிக்குப் பொருத்த மானவர் என்று தீர்மா னித்தேன்."

ஐந்தடி ஏழரை அங்குல உயரம் உள்ள மேதா, சென்ற வருடம் நடந்த அழகுப் போட்டியில், 'மிஸ் சூப்பர் மாடல்' அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். டி.வி! நிகழ்ச்சிக்கு ஒப்பந்தம் ஆன மறு நாளே, மூட்டை கட்டிக் கொண்டு வீரப்பன் காட்டுக்கு பிக்னிக் புறப்பட்டு விட்டார்கள். இவருக்கு பரீட்சை நெருங்கி விட்டதால், (பப்ளிக் எக்ஸாம்!) பாடப்புத்தகத்துடன் கிளம்பினார். அங்கே, ஷூட்டிங் இல்லாத நேரத்தில் படிப்புதானாம்!

"வீரப்பன் காட்டு அனுபவம் எப்படி?"

"ஓ... த்ரில்லிங்! ஆனா, வீரப்பனைத்தான் பார்க்க முடியலை!"

சந்திப்பு : **கௌதம்**

Without Fear or Favour; An Autobiography. – இது ஓய்வு பெற்ற சி.பி.ஐ. இயக்குனர் ஜோகிந்தர் சிங்கின் சுயசரிதை. அண்மையில், தற்போதைய சி.பி.ஐ. இயக்குனர் டி.ஆர். கார்த்திகேயன் இந்த நூலை டெல்லியில் வெளியிட்டார். மிக எளிமையான நடையில் எழுதப்பட்டுள்ள இந்த 300 பக்க நூலின் விலை ரூ. 495. பெரும் பரபரப்பான விஷயங்களுக்குப் பஞ்சம் என்றாலும், சுவாரஸ்யமான சில பகுதிகளின் தொகுப்பு இங்கே:

# "அரசுக் கட்டுப்பாட்டிலிருந்து சி.பி.ஐ.

**1964** பிப்ரவரி. கர்நாடக மாநிலம் பீஜப்பூர் மாவட்டத்தில், துணை போலீஸ் சூப்ரின்டெண்ட்டாக நான் பணி புரிந்த போது, வாகனங்களை செக் அப் பண்ணுவதும், அது பற்றிய விவரங்களை மேலதிகாரிகளுக்கு அனுப்புவதும் வழக்கம். நான், ஒருநாள் வாகனப் பரிசோதனையில் ஈடுபட்டிருந்தபோது, ஒரு வண்டியை நிறுத்தினேன். அதன் டிரைவரிடம் அனைத்து டாகுமெண்ட்களும் சரியாக இருந்ததால், போகச் சொல்லி அனுமதி கொடுத்தேன். சற்று தூரம் போன அந்த டிரைவர், வண்டியை நிறுத்தி விட்டு, என் கீழ் பணிபுரியும் ஹெட் கான்ஸ்டபிளிடம் ஏதோ கொடுப்பதைப் பார்த்து, சந்தேகம் வந்தது. விசாரித்ததில் அந்த டிரைவர், ஹெட் கான்ஸ்ட்பிளுக்கு ஐந்து ரூபாய் மாமூல் கொடுத்ததைக் கண்டுபிடித்தேன். ஹெட் கான்ஸ்டபிள் மீது டிபார்ட்மெண்ட்டல் என்கொயரி நடந்தது. ஆனால், அன்று ஸ்பாட்டில் இருந்த மற்ற போலீஸ்காரர்கள் அனைவரும், அன்று அதுபோல ஒரு சம்பவம் நடந்ததாகவே தெரியவில்லை என்று சாட்சி சொல்ல, ஹெட் கான்ஸ்டபிள் தண்டனை ஏதுமின்றித் தப்பித்தார்!

அதன் பிறகு, தனிப்பட்ட முறையில் பேசியபோது, ஒரு போலீஸ்காரர் சொன்ன விளக்கம் எனக்கு அதிர்ச்சியளித்தது:

''போலீஸ் துறையில் நேர்மையான அதிகாரிகள் மிகக் குறைவு. அவர்களும் அடிக்கடி டிரான்ஸ்ஃபர் செய்யப்பட்டு விடுவார்கள். எனவே, அவர்களை நம்பி, சாட்சி சொன்னால், அதனால் வரக் கூடிய பின்விளைவுகளை யார் சந்திப்பது?''

'இந்தி' என்ற பகுதியில் ஒரு சிறு ரயில் நிலையத்தில் பட்டப் பகலில், கூட்டமாய் நின்றிருந்த பயணிகள் முன்னிலையிலேயே ஒரு கொலை நடந்த செய்தி கேட்டு, அங்கே விரைந்தேன். சம்பவத்தை நேரில் பார்த்திருந்த போதிலும், யாருமே சாட்சி சொல்ல முன் வரவில்லை. மக்கள் இவ்வளவு பொறுப்பில்லாமல் இருக்கிறார்களே! கொலைகாரனைப் பிடிக்க, போலீசுக்கு உதவ வேண்டியது மக்கள் கடமையல்லவா? என எனக்கு ஆத்திரமாக வந்தது.

ஆனாலும், கொலை செய்யப்பட்டவரின் பின்னணியை விசாரித்து, அதன் மூலம் கொலையாளியைக் கண்டுபிடிக்க முயற்சித்தேன். அதில் வெற்றியும் பெற்றேன். கொலைக்கான காரணம் என்ன தெரியுமா?

கொலை செய்தவரின் தங்கையின் கணவர்தான் கொலை செய்யப்பட்டவர். தன் தங்கைக்கு துரோகம் செய்து விட்டு, 'சின்னவீடு' நாடிச் சென்றதால், தனது மச்சானை பலமுறை எச்சரித்தும், அவர் கேட்

காததால், கொலை செய்து விட்டார்; வெட்டிய தலையை, கிராம தேவதையின் காலில் சமர்ப்பித்து விட்டார். போலீஸ் பிடி இறுகவே, தானே போலீசாரிடம் சரணடைந்து விட்டார். வழக்கு விசாரணையின்போது, தன் வாக்குமூலம், கட்டாயத்தின் பேரில் பெறப்பட்டது என்று ஜகா வாங்கி விட, வேறு யாரும் சாட்சி சொல்லவும் முன் வராத சூழ்நிலையில், குற்றம் சாட்டப்பட்டவர், விடுதலையானார்!

**'பி**தர்' மாவட்டத்தில் எஸ்.பி.யாகப் பணியாற்றிய சமயம், போலீஸ் நிலையங்களுக்கு விஜயம் செய்வேன். போலீஸ் ஸ்டேஷன்களில் உடைந்த சேர், பெஞ்ச்கள்தான் இருக்கும். போலீஸ்காரர்களுக்கு ரொம்ப சிரமம். புதிய மேஜை, நாற்காலிகள் வாங்கிப் போடுங்கள் என்று உத்தரவிட முடிவு செய்தேன். ஆனால் அரசாங்க விதிகள்படி, இருபத்தி ஐந்து ரூபாய் வரையே செலவை சாங்ஷன் செய்ய எனக்கு அதிகாரம் உண்டு



# விடுவிக்கப்பட வேண்டும்!"

என்று தெரிய வந்தது. இருபத்தி ஐந்து ரூபாயில் ஒரு நாற்காலி மட்டுமே கிடைக்கும் என்கிற நிலையில் என்ன செய்வது என்று யோசித்தேன். ஒரு போலீஸ் ஸ்டேஷனுக்கு ஒரு தடவையில் ஒரு நாற்காலிக்காக இருபத்தி ஐந்து ரூபாய் வீதம், என் கட்டுப்பாட்டில் இருந்த அத்தனை போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் ஒரு நாற்காலி வாங்க பணம் சாங்க்ஷன் செய்தேன். இப்படியே ஆறு மாதம் தொடர்ந்து நடந்தது. எல்லா போலீஸ் ஸ்டேஷன்களிலும் ஆறு மாதத்தில் போதுமான மேஜை, நாற்காலி, பெஞ்ச்கள் கிடைத்து விட்டன. போலீசாருக்கு ரொம்ப சந்தோஷம். அதே போல, வெள்ளைத்தாள் போன்ற ஸ்டேஷனரி ஐட்டங்களுக்கும் எப்போதுமே தட்டுப்பாடுதான். ஒரு தடவை, காவல்துறை ஐ.ஜி.க்கு, "உங்களுக்கு எழுதும் இந்தக் கடிதம் எங்கள் வசமுள்ள கடைசி காகிதத்தில் எழுதப்படுகிறது" என்று குறிப்பிட்டு கடிதம் எழுதினேன். இதனால் மேல் மட்டத்தில் சிறிது கசப்பான உணர்வு ஏற்பட்டது என்றாலும்கூட உடனடியாக பேப்பர் மற்றும் இதர எழுதுபொருட்கள் தட்டுப்பாடு தீர்ந்தது.

**நா**ன் எஸ்.பி.யாகப் பதவி உயர்வு

பெற்ற பிறகுதான் திருமணம் செய்து கொள்ளுவேன் என்பதில் உறுதியாக இருந்தேன். பதவி உயர்வு பெற்றவுடன், 'பெண் பார்க்கலாமா?' என்று என் வீட்டில் கேட்க, பச்சைக்கொடி காட்டினேன்.

'தென்னிந்தியாவில் காவல் துறை சூப்ரின்டென்டென்ட்டாகப் பணி புரியும் சீக்கிய இளைஞருக்கு, பொருத்தமான மணப்பெண் தேவை' என்று 'டிரிபியூன்' பத்திரிகையில் விளம்பரம் கொடுத்தார்கள். சுமார் 470 பதில்கள் வந்தன. படிப்பு, குடும்பப் பின்னணி என்று அலசி, ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து, கடிதம் எழுதினார்கள். என் மனைவி, வேலைக்குப் போக வேண்டாம் என்று நான் கருதினேன். ஆனால் அந்தப் பெண் அதற்கு ஒப்பவில்லை. எனவே அது கைவிடப்பட்டது.

மறுபடி பேப்பரில் மணமகள் தேவை விளம்பரம் தந்தார்கள். அதற்கு வந்த பதில்களிலிருந்து இரண்டு பேரைத் தேர்ந்தெடுத்து, பெண் பார்க்க ஏற்பாடானது. முதலில் பார்த்த பெண்ணே எனக்குப் பிடித்துவிட, ஆன் தி ஸ்பாட், என் முடிவைச் சொல்லிவிட்டேன். உடனடியாகத் திருமணத்துக்கும் நாள் குறிக்கப்பட்டது. அடுத்து பார்க்க இருந்த பெண்ணைப் பார்க்கவே இல்லை! என் மனைவி கரீந்தர், பின்னர் தேர்வு எழுதி இந்திய தகவல் சர்வீசுக்குத் தேர்வு செய்யப் பட்டார்.

'பீதர்' மாவட்ட எஸ்.பி.யாக இருந்த போது, ஒரு கான்ஸ்டபிளின் வீரச் செயலைப் பாராட்டி, 'அவுட் அஃப் டர்ன்' பிரமோஷன் தந்தேன். ஒரு மாதம் கழித்து, அவர் பணியாற்றிய உல்சூர் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனபோது, பழையபடி கான்ஸ்டபிளாகவே பணியாற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு அதிர்ச்சியடைந்தேன். விசாரித்தபோது, நான் கையெழுத்திட்ட பிரமோஷன் உத்தரவு அவரது கைக்கு வந்து சேராதது மட்டுமின்றி, என் அலுவலக டெஸ்பாட்ச் கிளார்க், இருநூறு ரூபாய் கொடுத்து தன்னை கவனித்தால்தான் பிரமோஷன் ஆர்டரை அனுப்பி வைப்பேன் என்று சொன்னதும் தெரிய வந்தது.

இரு நூறு ரூபாய் என்பது அந்த கான்ஸ்டபிளின் இரண்டு மாதச் சம்பளம்! எனக்குக் கோபம் வந்தது. அவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்தேன். கடைசியில் காவல்துறை பணியிலிருந்து அவர் டிஸ்மிஸ் செய்யப்பட்டார்.

பட்டுப்புடைவை பரிசுப் போட்டி – 10ல் கேட்கப்பட்ட கேள்விக்கான சரியான விடை : அரவிந்தசாமி – 'சாசனம்' படத்தில்.

ஆயிரக்கணக்கானவர்கள் சரியான விடை எழுதி விட்டதால் குலுக்கலில்

கர்நாடக மாநில இளைஞர் நலம் மற்றும் விளையாட்டுத்துறை இயக்குனர் என்ற முறையில் நான் பல அயல் நாடுகளுக்கும் சென்று வந்தேன். ஒருமுறை ஜெர்மனி சென்றிருந்தபோது, அங்குள்ள அதிகாரிகளுடன் பேசிக் கொண்டிருந்த சமயம், மின் சாரம் பற்றிப் பேச்சு வந்தது.

நான் ஒரு அதிகாரியிடம் "உங்கள் ஊரில் மின்சாரத் தடை ஏற்பட்டால் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டேன். அவரோ பதில் சொல்லவில்லை. நான் மறுபடி கேட்ட போது "உங்கள் கேள்வி எனக்குப் புரியவில்லையே!" என்றார். நான் மறுபடியும் விளக்கினேன். "எங்கள் நாட்டில், கடந்த முப்பது ஆண்டுகளில் ஒரே ஒரு தடவைகூட மின்சாரத் தடை ஏற்பட்டது கிடையாதே! நான் எப்படி பதில் சொல்வது?" என்றாரே பார்க்கலாம்!

சி.பி.ஐ.யின் இயக்குனராக 1996 ஜூலை 26ம் தேதி நான் நியமிக்கப்பட்டேன். அந்தப் பதவிக்கு பெயர்தான் பெரிசே தவிர, சி.பி.ஐ அலுவலகக் கட்டடத்தில் ஏதாவது ரிப்பேர் என்றால்கூட, அதை சரி செய்ய உத்தரவிடுவதற்கு அதிகாரம் கிடையாது.

நான் சி.பி.ஐ. டைரக்டராகப் பொறுப்பேற்ற சமயம் ஜெயின் ஹவாலா கேஸ், முந்நாள் பிரதமர் நரசிம்மராவ் மீதான லக்குபாய் பாதக் கேஸ், ஜே.எம்.எம் லஞ்ச ஊழல் வழக்கு, செயின்ட் கிட்ஸ் கேஸ் என்று பல சென்சிடிவ் கேஸ்கள் சி.பி.ஐ வசம் இருந்தன. அப்போது பிரதமராக இருந்த தேவகௌடா மிக நல்ல மனிதர். ஆனால் முக்கியமான சில கேஸ்களை மேற்பார்வையிடும் பணியை கோர்ட்களே மேற்கொண்டதால் நான் ஒன்றுக்கு மேற்பட்ட எஜமானர்களுக்குப் பணியாற்ற வேண்டியிருந்தது.

என் பணியில் யாரிடமிருந்தும் இடையூறு வரவில்லை என்று நான் பொய் சொல்லலை. ஆட்சியாளர்களிடமிருந்துதான் என்று இல்லை;

தேர்வாகி, பரிசு பெறுபவர்:

**D. அருள்,**
**எண்.20,**
**துலுக்கானந்த கோயில் தெரு,**
**அகரம்,**
**சென்னை – 600 082.**

அவர்களது உறவினர், நண்பர், அலுவலக சகாக்களிடமிருந்தும் வரலாமில்லையா? ஆனால் அவற்றை நான் சமாளித்தேன்.

அரசு அதிகாரிகள் மேலே உயர, உயர, முதுகெலும்பில்லாமல் போய் விடுகிறார்கள். அது தவறு. துணிந்து எழுந்து அரசியல் எஜமானர்களை அவர்கள் கேள்வி கேட்கத் தயங்கக் கூடாது.

மிஞ்சிப் போனால் என்ன ஆகும்? டிரான்ஸ்பர் செய்வார்கள். அவ்வளவு தானே! பெட்டிப் படுக்கையுடன் எப்போதும் தயாராக இருந்து விட்டால் போகிறது!

சி.பி.ஐ.யில் என்ன குறைபாடு? என்று கேட்டால் என் விடை இதுதான்: உயர் மட்டத்தில் உள்ளவர்கள் தங்கள் தனிப்பட்ட பழி வாங்கல்களுக்கு சி.பி.ஐ. விசாரணையை ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொள்ளுவதுதான். அரசுக் கட்டுப்பாட்டிலிருந்து சி.பி.ஐ. விடுவிக்கப்பட வேண்டும்.

அரசுப் பணியில் இருப்பவரை பணி மாற்றம் செய்வது என்பது, அரசாங்கத்தின் உரிமை. ஆனால், நான் சி.பி.ஐ. இயக்குனர் பொறுப்பிலிருந்து, எந்தச் சூழ்நிலையில் மாற்றப் பட்டேன் என்பது கேள்விக்குரியது! இதுவரை இருந்த 17 சி.பி.ஐ. இயக்குனர்களில் நான் மட்டுமே பதினோரு மாதங்களிலேயே அந்தப் பொறுப்பிலிருந்து மாற்றப்பட்டேன். என்ன காரணம் என்பதை விலாவாரியாக நான் இப்போது தெரிவிக்க விரும்பவில்லை. நான் எடுத்த சில முடிவுகள், அரசாங்கத்துக்குப் பிடிக்கவில்லை என்று மட்டுமே குறிப்பிட விரும்புகிறேன். அடுத்து நான் எழுதப் போகும் புத்தகத்தில் அது பற்றி விரிவாக எழுதுவேன். அரசியல்வாதி என்பவர் தர்ம பரிபாலனம் செய்வதற்கு வருவதில்லை. அவருக்கு அவரது சர்வைவல்தான் முக்கியம். இது ஒட்டுப் போட்டுத் தைத்த அரசாங்கமாக இருந்தாலும் பொருந்தும்!

விவரமாக இல்லாவிட்டாலும், போபர்ஸ் கேஸ் பற்றி சுருக்கமாகவாவது எழுதாவிட்டால், இந்தப் புத்தகம் முழுமை பெறாது. பெரிய புள்ளிகளின் பெயர்களுடன் தொடர்பு கொண்ட போபர்ஸ் கேஸின் முதல் தகவல் அறிக்கை பதிவானது 1990ல்.

தேவையில்லாத தாமதம் எனக்கு அறவே பிடிக்காது என்பதால், இந்தப் பணியை முடுக்கி விட்டேன். போபர்ஸ் சம்பந்தமான பேப்பர்களை வாங்கி வர, நானே நேரடியாய் சுவிட்சர்லாந்து போனேன். என்னுடன் பி.ஆர்.துபே (சி.பி.ஐ. இணை இயக்குனர்) ஜவத் சவுத்ரி (மத்திய அரசில் கூடுதல் செயலாளர்). இருவரும் வந்தார்கள்.

பாதுகாப்பு மற்றும் ரகசியம் கருதி நாங்கள் மூவரும் மூன்று வேறு வழிகளில் சுவிட்சர்லாந்து சென்றடைந்தோம். 1997 ஜனவரி 22ம் தேதி காலை ஒன்பது மணிக்கு, போபர்ஸ் ஆவணங்களை எங்களிடம் வழங்க ஏற்பாடாகியிருந்தது. அகில உலக அளவில் மீடியாவின் கவனம் கவர்ந்த நிகழ்ச்சி அது. போபர்ஸ் ஆவணங்களைப் பெற்றுக் கொண்டவுடன், இந்திய அரசின் அன்பளிப்பாக விலையுயர்ந்த இந்திய கைக்கடிகாரங்களை சுவிஸ் நாட்டு காவல்துறை உயரதிகாரிகளுக்கு வழங்கினேன். அவர், இந்தப் பரிசு பற்றித் தம் அரசாங்கத்துக்குத் தெரிவித்து, அரசு அனுமதி பெற்ற பின் பரிசுகளை எடுத்துக் கொள்கிறேன் என்றபோது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. (இந்தியா, தொழில் நுட்பத்தில் யாருக்கும் இளைத்ததில்லை என்று சுட்டிக் காட்டவே, சுவிஸ் நாட்டு அதிகாரிகளுக்கே, நான் நம் நாட்டில் தயாரான கைக்கடிகாரங்களைப் பரிசளித்தேன்.)

போபர்ஸ் ஆவணங்களை, இந்தியா கொண்டு வரும்போது ஒரு ரகசிய திட்டத்தைக் கையாண்டோம். சுவிஸ் அரசு, என்னிடம் ஒப்படைத்த ஆவணங்கள் அடங்கிய பெட்டியை (டீ.வி.யில் கூடப் பார்த்திருப்பீர்களே!) நான் என்னுடன் எடுத்து வந்தேன். ஆனால் அது உண்மையில் ஆவணங்கள் இல்லாத காலி பெட்டிதான். அதனுள்ளே இருந்த ஆவணங்களை எடுத்து என்னுடன் வந்திருந்த துபேயின் கைப்பெட்டிக்குள்ளே பத்திரமாய் வைத்து விட்டோம்.

ஒரே விமானத்தில், மூன்று வெவ்வேறு பகுதிகளில் பயணம் செய்து டெல்லி வந்து சேர்ந்தோம். கோர்ட்டில் ஆவணங்களை சமர்ப்பித்தேன்...! ●

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

# கடைசி வரை காக்க வைத்துக் கழுத்தை அறுப்பது எப்படி?

**தமது திராட்சைத் தோட்டத்தைப் பார்க்க வருவது மாதிரி ஹைதராபாத் வந்த முன்னாள் முதல்வர் ஜெ-யும், ஐ.மு.வில் இருந்து திடீர் பல்டி அடித்து பாஜகவை ஆதரித்து விட்ட சந்திரபாபு நாயுடுவும் சந்திக்கிறார்கள் :**

ஜெ : நாயுடுகாரு, நீங்க அடிச்சது பல்டின்னு கொச்சையா சொல்றாங்க. ஆனா நான் ராஜதந்திரம்னு சொல்லுவேன்! பிரமாதமான ஆக்ட் போங்க. பவார், குஜ்ரால் எல்லாருக்கும், கோபத்துல பல்லைக் கடிச்சுக் கடிச்சு இப்ப வாயே பொக்கை யாப் போயிட்டதாமே?

சந்திர : அட், நீங்க கிரியேட் பண்ணின சஸ்பென்ஸை விடவா? பா.ஜ.க.வுல எல்லாருக்கும் நகத்தைக் கடிச்சுத் துப்பி, இப்ப யாருக்குமே நகமே இல்லியாமே?

ஜெ : நீங்க பல்லைப் பிடிங்கிட்டீங்க, நான் நகத்தை முறிச்சிட்டேன். ஸோ, பா.ஜ.க.வைப் பார்த்து நாம்ப பயப்படவே வேணாம். அது இருக்கட்டும் ஒரு பக்கம். அரசியல்லே உப்புச் சப்பு இல்லாம ஜனங்க போரடிச்சுப் போய் இருந்தாங்க. பாம் கல்ச்சர், பஸ் கட்டண உயர்வு எல்லாம் தான் தேர்தல் முடிஞ்சதோட போச்சே! அப்புறம் மக்களுக்கு அரசியல் சுவாரசியமா இருக்க வேணாம்?

சந்திர : இருந்தாலும் ஒரு வாரத்துக்கு 'ஜெ ஜெ'ன்னு நாடு பூரா பேச வச்சிட்டீங்க. ஃபோகஸ் பூரா உங்க மேல இருக்கும்படி ரொம்ப டிரமாடிக்கா பண்ணிட்டீங்க, போங்க! அரசியல்ல யாருக்காவது ஆஸ்கார் கொடுத்தாங்கன்னா, உங்க பக்கத்துல கூட யாரும் நெருங்க முடியாது. டைட்டானிக் பர்ஃபாமென்ஸ்!

ஜெ : அது ஒண்ணும் பிரமாதமில்லே. டில்லி பிரஸ்கிட்ட ஒண்ணைச் சொன்னா, சென்னை பிரஸ்ல இன்னொண்ணைச் சொல்லணும். அவ்வளவுதான். பாதிக்கப்பட்டவங்க மறுப்பாங்க. பட் ஹூ கேர்ஸ்? ஜனங்களுக்குப் பரபரப்பு நியூஸ் வேணும். எதுத்து அடிக்கறவங்களைத்தான் அவங்க சப்போர்ட் பண்ணுவாங்க. இது புரிஞ்சு போச்சுன்னா யு கேன் வின் இன் எனி சிச்சுவேஷன். சிம்பிள்!

சந்திர : ஐயோ, உங்ககிட்ட விபூதி மந்திரிச்சு வாங்கிக்கணும்ங்க. என்னமாப் பேசறீங்க! எனக்குக் கூட ஆரம்பத்துல கொஞ்சம் பயமாத்தான் இருந்துது. 12 சீட்டைக் கையில வச்சுக்கிட்டு இப்படி முட்டாள்தனமா ஐ.மு.வுல இருக்கறமே, என்ன பிரயோசனம்னு கம்ப்யூட்டர்ல கையை வச்சுக்கிட்டு குழம்பிக் கிடந்தேன். பால யோகி வந்ததும் பளீர்னு ஐடியா வந்துது.

ஜெ : தட்'ஸ் கரெக்ட். ஐ.மு.ன்னு பெத்தப் பேருதான். ஆறு ஜனதா தள், ஆறு தி.மு.க., மூணு த.மா.கா.ன்னு ஆக மொத்தம் ஒண்ணே கால் டஜன் எம்.பி.க்கள் எல்லாமாச் சேர்ந்து ஒரு முன்னணியா? கேட்டாலே சிரிப்புப் பொத்துக்கிட்டு வருது. நீங்க ஒருத்தரே ஒரு டஜன் எம்.பி.யை வச்சுக்கிட்டு, பிரமாதமா ஒரு கலக்குக் கலக்கிட்டீங்க. ஸ்பீக்கர் போஸ்டைப் பிடிச்சதே, வின்னிங் போஸ்டைத் தொட்ட மாதிரிதான். நாங்க குசேலரோட குழந்தைகள் மாதிரி 27 பேரை வச்சுக்கிட்டு, ஒவ்வொரு ஸ்டேஜ்லயும் பேரம் பேசி, கோவிச்சுக்கிட்டு, சண்டை போட்டு, மினிஸ்டர் 'போஸ்ட் வாங்க வேண்டியிருந்துது. ரொம்ப பேஜார் பண்ணிட்டாங்க!

சந்திர : உங்க பர்த்டேக்கு பிஜேபி தலைவர்கள் யாரும் உங்களுக்கு வாழ்த்துச் சொல்லலைன்னு வருத்தப்பட்டீங்களாமே, அப்படியா?

ஜெ : ஆமா, ஆனா அன்னிக்குப் பூரா போனை எடுத்துக் கீழே வச்சுட்டேன். அடிச்சாத்தானே அவங்க அலோ சொல்லி, வாழ்த்துச் சொல்லுவாங்க? அதுக்கு சான்ஸே கொடுக்கலே. அப்பத்தானே மறுநா பிரஸ்லே ஒரு பிடி பிடிக்க முடியும்?

சந்திர : ஐயோ, எப்பேர்ப்பட்ட

ஐடியால்லாம் கைல வச்சிருக்கிங்க!

ஜெ : சப்போர்ட் தரேன்னு டில்லி போனேன் இல்லியா முதல்லே? அன்னிக்கே திரும்பிட்டேன். நாலு நாள் இருக்கறதாத் தான் பிளான்.

சந்திர : ஆமா, ஏன் திரும்பிட்டீங்க ஒரே நாள்ல?

ஜெ : சசி கொடுத் நாய், ஜூலி செத் துடிச்சு. அதான் ஆக்சுவல் ரீசன்.

சந்திர : சினிமா ஷூட்டிங்லதான் நடிகைகள் இந்த மாதிரி கோவிச்சுக்கிட்டு ஊர்னு போயிடுவாங்க. அது மாதிரிதான் நீங்க போயிட்டதா வாஜ்பாயும், அத்வானி யும் அரண்டு போய்ட்டாங்க.

ஜெ : பின்ன? கொஞ்சம் கூட விட்டுக் கொடுக்க மாட்டேன்னா எப்படி? லாவும் ஃபைனான்ஸும் நம்ம கைல இருந்தாத் தானே கொஞ்சமாவது த.மா.கா. – தி.மு.க.வைக் குடையலாம். அத்த விட்டுட்டு, டிரான்ஸ்போர்ட்டும், பெட்ரோலியமும் குடுத்தா யாருக்கு வேணும்?

சந்திர : அதுக்குத்தான் தாக்கறதுக்கு முன்னாடியே எதிராளியத் தாக்கிடறது நல்லதுன்னு புரிஞ்சுக்கிட்டேன் நான். நான் தானே ஐ.மு. தலைவர், என்னைக் கேக்காம எப்படி கூட்டம் நடத்தலாம்னு முதல்ல ஒரு தடால் அடி. அப்பறம் என்னைக் கேக்காம சங்மாவை எப்படி நிறுத்தலாம்னு ஒரு நெத்தியடி. ஒவ்வொருத்தரும் இப்ப முழி முழின்னு முழிக்கறாங்களாம்!

ஜெ : அதான் கரெக்ட். நீங்க இனிமே தந்திரபாபு நாயுடுதான். காங்கிரசையும் – ஐ.மு.வையும் சேர்த்து ஏமாத்திட்டீங்க. கேசரிதான் இதுல எக்ஸ்பர்ட்டா இருந்தார். அவரையும் மிஞ்சிட்டீங்க!

சந்திர : எனக்குக் காங்கிரஸ்தான் நெ.1 எதிரி.

ஜெ : ஐயையோ, அப்படி எல்லாம் இப்பவே பப்ளிக்கா சொல்லித் தொலைச் சிடாதீங்க. அரசியல்ல நிரந்தரப் பகைவனும் கிடையாது; நிரந்தர நண்பனும் கிடை யாதுன்னுவாங்க. அப்படிச் சொன்னவங்க இன்னமும் வாயைத் திறந்துகிட்டே இருந்தாங்கன்னா, சர்க்கரை அள்ளிப் போடுவேன்!

சந்திர : சுப்பிரமணிய சாமி உங்களை நல்லாத்தான் பிரெயின் வாஷ் பண்ணியிருக் கார்.

ஜெ : ரொம்ப சிம்பிள். நாம்ப பண் ணினா அரசியல் உத்தி, ராஜதந்திரம்னு நாலு பேரை விட்டுச் சொல்லச் சொல் லிடணும். எதிராளி பண்ணினா உடனே துரோகம், ஏமாற்று வேலைன்னு கூசாம சொல்லிடணும். அதான் அரசியல்ல ஆரம்பப் பாடம். இதைப் புரிஞ்சுக்கிட்டா, எப்ப வேணா, எப்படி வேணா பல்டி அடிக்கலாம்.

சந்திர : இப்ப உங்களை ஓரம் கட்டற துக்கு ஒரு வழி பார்க்கறாங்களாமே?

ஜெ : பூனைய மடில கட்டிட்டு யாரா னும் சகுனம் பார்ப்பாங்களா? 27 பேர்! தம்பிதுரை ஸ்டேட்மென்டுக்கே ஆடிப் போயிட்டாங்க இங்கே. இன்னம் ஆர்.கே. குமார், வாழப்பாடி எல்லாம் வாயே திறக் கலே. பொறுத்திருந்து பாருங்க. இன்னமே தான் இருக்கு வேடிக்கையே! கடைசில, பொறுக்க முடியாம போச்சுன்னா சுப்பிர மணிய சாமிய அவுத்து உட்டுடுவேன்!

சந்திர : அவங்க எப்படியாவது ஆதரவா 30 பேர் சேத்துட்டா உங்க பாடு என்ன ஆறது?

ஜெ : அதுக்கெல்லாம் ஸ்டராடஜி வச்சிருக்கேன். பயங்கரமா இருக்கும்! சென்னாரெட்டி மேல சொன்ன மாதிரி எல்லாம் எடுத்து உட ஆரம்பிச்சேன்னா, தில்லிலே போடற அலறல் உலகம் பூரா கேக்க ஆரம்பிச் சுடும். எங்கிட்டே மோத முடி யாது, மிஸ்டர் சந்திரபாபு நாயுடு!

சந்திர : எதுக்கும் அடிக்கடி ஹைதராபாத் வந்து போய்ட் டிருங்க. எனக்கு உங்க ஐடியால பாதியாவது அப்பப்ப குடுங்க!

ஜெ : ஆகா, தாராளமா!



கற்பனை : **சாருகேசி**



• கல்கி



• திரு.வி.க

# பொன்னியின் புதல்வருக்குப் பெரிய கௌரவம்!

தமிழக அரசின் (98-99) பட்ஜெட் அறிக்கையில் அமரர் கல்கி அவர்களுக்கு ஒரு சிறப்பான அங்கீகாரம் கிடைத்திருக்கிறது. அவரது நூல்கள் அரசுடைமையாக்கப்படுவதாக முதல்வரும் நிதி அமைச்சருமான கருணாநிதி அறிவித்திருக்கிறார்.

அரசுடைமை என்பதை மக்களுடைமை என்றும் குறிப்பிடலாம் என்றால், அமரர் கல்கி அவர்களுடைய நூல்கள் ஏற்கெனவே, 'மக்களுடைமை' ஆகி விட்டன என்றே சொல்லலாம். லட்சோப லட்சம் மக்கள் பொன்னியின் செல்வனையும் அலை ஓசையையும் சிவகாமியின் சபதத்தையும் இன்னும் சிறிதும் பெரிதுமான அமரர் கல்கியுடைய நூல்களையும் பரம்பரை பரம்பரையாகப் படித்து வருகிறார்கள். தாம் பெற்ற இன்பத்தைத் தமது மக்களும் பேரன் பேத்திகளும் அடைவதைப் பார்த்து மகிழ்ந்து வருகிறார்கள். இவ்வாறு தமிழ் வாசகர்கள் இதயங்களில் நிலையான இடம்பெற்று, அவர்களின் குடும்பங்களில் ஒருவராகவே ஆகி விட்டவர் கல்கி.

'அலை ஓசை' என்ற தமது சாகித்திய அகாதமி பரிசு பெற்ற நாவலின் முன்னுரையில் கல்கி அடக்கத்துடன் எழுதினார் : "எனது நூல்களில் ஏதேனும் ஒன்று ஐம்பது ஆண்டுகள் நிலைத்திருக்குமானால் அது இந்த அலை ஓசையாகத்தான் இருக்கும்" என்று. கல்கியின் இந்த ஒரு கருத்து மட்டும் பொய்த்துப் போகும்படி செய்து விட்டனர் தமிழக மக்கள். இன்று அவர் காலமாகி 44 ஆண்டுகளுக்குப் பிறகும் அவரது நூல்கள் ஒவ்வொன்றையும் விரும்பிப் படித்து ரசித்து ஆனந்திக்கின்றனர். ஐம்பது ஆண்டுகளல்ல, நூறு ஆண்டுகள் அல்ல, என்றும் சிரஞ்சீவியாக விளங்கும் அவரது நூல்கள் என்பதை நிரூபித்து வருகின்றனர்.

இத்தகைய ஓர் அற்புதமான எழுத்தாளரின் நூல்களை அரசுடைமையாக்குவது என்பது அரசு அவருக்கு அளிக்கின்ற ஒரு மகத்தான கௌரவம், அங்கீகாரம். அதனை

ரூபாய்களால் மதிப்பிடவும் முடியாது; பட்டம், விருது போன்றவற்றை ஒப்புநோக்கியும் பார்க்க முடியாது.

மகாகவி பாரதியார், அறிஞர் அண்ணா, பாரதிதாசன் போன்ற சிலரது நூல்களுக்கு அடுத்தபடியாக இம்முறை அமரர் கல்கி அவர்களுடைய எழுத்தோவியங்கள் அரசுடைமையாக்கப்படுகின்றன. இதற்காக முதல்வர் கலைஞர் கருணாநிதி அவர்களுக்கு வாழ்த்துக் கூறி மகிழ்கிறோம்; நன்றி கூறி நெகிழ்கிறோம்.

இதிலே மகிழ்ச்சியை இரட்டிப்பாக்குகிற செய்தி இன்னொன்று உண்டு. அது, அமரர் கல்கி அவர்களுடைய குரு, தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்களுடைய நூல்களை அரசுடைமையாக்குவதாக முதல்வர் முன்னதாக அறிவித்து விட்டு, கூடவே கல்கியின் படைப்புக்களையும் அரசுடைமையாக்குவதாக அறிவித்திருப்பதுதான். இதில் முதல்வரது சிந்தனைச் சிறப்பு பளிச்சிடுகிறது.



திரு. வி. கல்யாணசுந்தரனாரின் நவசக்தி பத்திரிகையில்தான் கல்கி அவர்களுடைய பத்திரிகைப் பணி தொடங்கியது. எழுத்துத் துறையில் கல்கியின் ஆசான் திருவிக. அவருடைய பெயரில் முதல் இரண்டு எழுத்துக்களையும் தமது பெயரில் முதல் எழுத்தையும் இணைத்துத்தான் ''கல்கி'' என்ற புனைபெயர் பூண்டார் கிருஷ்ணமூர்த்தி. 'நல்லனவற்றைப் போற்றி குற்றங்களைக் கண்டிக்க வேண்டும்; நபரைப் பாராமல் நடத்தையை மட்டுமே கண்டு நடுநிலையில் விமர்சிக்க வேண்டும்' என்ற எழுத்தாளர் கிருஷ்ணமூர்த்தியின் கொள்கைக்கு, 'கல்கி' என்ற புனைபெயர் பொருத்தமாக அமைந்தது. கல்கியின் கடுமையான விமர்சனத்துக்கு உள்ளான ஒரு நபர், சில காலம் சென்று அதே கல்கியின் பேனா முனையால் வாழ்த்தப்படுவது என்பதும் சகஜமாயிற்று.

மகாகவி பாரதியார் கவிதைத் துறையில் சாதித்ததை கல்கி வசனத் துறையில் செய்தார். தமிழை பண்டிதர்களின் கரங்களிலிருந்து மீட்டு எளிமைப்படுத்தி சான்றோரும் சாமானியரும் ஒருங்கே படித்து ஆனந்திக்குமாறு செய்தார்.

இத்தனைக்கும் அடிப்படை அவரது தேசபக்தி. சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு மும்முறை சிறை சென்ற அந்த வீரர், காந்திஜியின் உண்மைச் சீடராக நிர்மாணப் பணிகளிலும் நிறைய ஈடுபட்டார். தேசநலனுக்காகவே தமது எழுத்தைப் பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கில் செயல்பட்டது மட்டுமின்றி, எழுத்து மூலம் சமுதாய மாற்றம் காண முடியும் என்பதையும் நிரூபித்தார்.

மதுவிலக்குப் பிரசாரம் முதல் எட்டயபுரம் பாரதி மணிமண்டபம், சென்னை காந்தி மண்டபம் வரையில் அவருடைய எழுத்து மகத்தான சாதனைகளைப் புரிந்தது. கலை விமர்சனங்கள் தமிழ்நாட்டின் தொன்மையான கலைகள் மறுமலர்ச்சி பெற உதவின. பார்த்திபன் கனவு, சிவகாமியின் சபதம் ஆகியன எழுதப்பட்ட பிறகுதான் பல்லாயிரக்கணக்கான மக்கள் நமது சிற்பக் கலையின் மேன்மையை உணர்ந்து கொண்டார்கள். வீடுகளிலும் மேடைகளிலும் பரதநாட்டியம் ஆடும் பெண்களின் சதங்கை ஒலி கேட்க ஆரம்பித்தது. ஒதுக்கப்பட்டு வந்த தமிழிசை புத்துயிர் பெற்றது.

இத்தகைய சாதனையாளரின் நூற்றாண்டு விழா தொடக்கத்தில் அவரது நூல்களை அரசுடைமையாக்குவதாக முதல்வர் கலைஞர் அறிவித்திருப்பது, வள்ளுவர் வாக்குப்படி, எய்துவதற்கரிய கால நிலை அமைந்ததை உணர்ந்து ஒரு செய்தற்கரிய செயல் புரிந்ததாகிறது.

பட்ஜெட் பற்றிய விமர்சனங்கள் அரசியல் நோக்கில் பலவாறும் வரும். ஆனால் திரு.வி.க., கல்கி ஆகியோரது படைப்புக்களை அரசுடைமையாக்கிய முதல்வரின் இந்தச் செயல் அனைத்துக் கட்சிகளின் ஏகோபித்த பாராட்டைப் பெறும். தமிழகமே போற்றும்.

— கி. ராஜேந்திரன்

# அதிகார வட்டம் அத்வானியைச் சுற்றித்தான்!

பா.ஜ.க.வில் இரண்டு விதமான தலைவர்கள் உண்டு. வாஜ்பாய், பண்டாரி, கிஷன்லால் சர்மா, மாத்தூர், கோவிந்தாச்சார்யா மாதிரி பிரம்மச்சாரிகளாக இருந்து கொண்டு கட்சியை வளர்க்கும் தலைவர்கள் ஒருவகை. அத்வானி, முரளி மனோகர் ஜோஷி, சிக்கந்தர்பக்த் போன்ற குடும்பிகளாக இருந்து கொண்டு கட்சியில் தீவிரப் பணியாற்றுபவர்கள் மற்றொரு வகை!

பெரும்பாலோர் குடும்பம், குழந்தைகள் போன்றவற்றுக்கு 'நோ' சொல்வதற்குக் காரணம், அவர்கள் அடிப்படையில் ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தைச் சேர்ந்தவர்களாதலால், எந்த நேரத்திலும் சிறைக்கும், தலைமறைவு வாழ்க்கைக்கும் தயாராக இருக்க வேண்டியிருக்கும் என்பதுதான்.

ஆனால் லால்கிஷன் அத்வானி குடும்பத் தலைவராக இருந்தாலும் கட்சிதான் இவருக்கு முதல் மனைவி. சூறாவளிச் சுற்றுப்பயணம் (ரதத்தில்தான்) செல்வதற்குக் கொஞ்சமும் அசராதவர். 1986ல் கட்சித் தலைவர் பொறுப்புக்கு அத்வானி வந்தவுடன் பா.ஜ.க.வுக்கு ஏறுமுகம் துவங்கியது. 1990ல் சோமநாத்திலிருந்து அயோத்திக்கு ரதத்தில் யாத்திரை துவங்கியபோதே ஆட்சியைப் பிடிக்க பா.ஜ.க. வகுத்த வியூகம் அனைவருக்கும் புரிந்து விட்டது. அதன் கிளைமாக்ஸாக 1992ல் அத்வானி முன்னிலையில் பாபர் மசூதி இடிக்கப்பட்டது! மசூதி இடிப்பு வழக்கில் சி.பி.ஐ வரிசைப்படுத்தியிருக்கும் குற்றம் சாட்டப்பட்டவர்களில் அத்வானியும் ஒருவர்.

'ஏக' இந்தியாவில் கராச்சியில் பிறந்தவர் அத்வானி. பள்ளி, கல்லூரிப் படிப்பு எல்லாம் கராச்சியில்தான். இன்ஜினியரிங் படிக்க வாய்ப்புக் கிடைத்தும் முடியவில்லை. காரணம் பாகிஸ்தான்– இந்தியா பிரிவினைதான். பின்னர் அத்வானி குடும்பம் இந்தியாவுக்குக் குடிபெயர்ந்தது. பம்பாயில் சட்டப்படிப்பை முடித்தார். ஏற்கெனவே கராச்சியில் ஆர்.எஸ்.எஸ். அமைப்பில் முக்கியப் பொறுப்பில் இருந்தார். பின், ராஜஸ்தான், டெல்லி போன்ற இடங்களில் இயக்கப் பணி புரிந்தார். இந்தி, ஆங்கிலம் இரண்டிலும் பேச்சு, எழுத்து ஆகியவற்றில் வல்லவர்.

சில காலம் கட்சிப் பத்திரிகையான ''ஆர்கனைசரி''ன் ஆசிரியராகவும் இருந்திருக்கிறார் அத்வானி. நரசிம்மராவ் ஆட்சியின்போது ஹவாலா வழக்கில் குற்றம் சாட்டப்பட்டபோது பாராளுமன்ற உறுப்பினர் பதவியைத் தூக்கி எறிந்தவர். ''ஹிந்துத்வா'' கோஷத்துக்கு வடிவம் கொடுத்து செயல்பட வைக்கும் தலைவர்களில் முதன்மையானவர் அத்வானி. ஆனால் அதே சமயம் வோட்டு வங்கி மற்றும் கூட்டணி அரசியலில் ஆட்சியைப் பிடிக்கவும், பிடித்த ஆட்சியைத் தக்க வைத்துக் கொள்ளவும்



செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதுதான் நிதர்சனம்.

வாஜ்பேயிக்கும் அத்வானிக்கும் என்ன வித்தியாசம்? அத்வானியிடம் ஒரு **killer instinct** என்று சொல்வார்களே அது உண்டு. எடுத்த காரியம் எப்படியும் ஜெயத்தில் முடிய வேண்டும் என்று ஒருவித வெறியுடன் செயல்படுபவர் அத்வானி.

இன்று மத்திய அரசின் உள்துறையில் விசித்திரமான நிலை. கடந்த 20 மாதங்களாக, ஒரு கம்யூனிஸ்ட் (இந்திரஜித் குப்தா) அங்கு பொறுப்பிலிருந்தார். இப்போது அதற்கு நேர் எதிர்மறையான ஆர்.எஸ்.எஸ். இயக்கக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டவர் பதவிக்கு வந்திருக்கிறார். பா.ஜ.க.வினர், மற்றொரு 'வல்லபாய் படேல்' என்று சொல்கிறார்கள். சுதந்திர இந்தியாவின் முதல் உள்துறை அமைச்சராக இருந்த படேல் இரும்புக் கரத்துக்குச் சொந்தக்காரர். படேலிடம் இருந்த அதே வேகம், கண்டிப்பு, திறமை அத்வானியிடம் இருப்பதாகச் சொல்கிறார்கள். நாட்டில் இன்று நிலவும் குழப்பம், வன்முறை ஆகியவற்றை ஒரு முடிவுக்குக் கொண்டு வருவதில் உள்துறை இலாகாக்களின் பங்கு முக்கியமானது. அத்வானியின் இலாகாவில் தற்போது சி.பி.ஐ இல்லை. மத்திய கேபினட் செகரடேரியட் துறையின் கீழிருக்கும் சி.பி.ஐ, மீண்டும் உள்துறைக்குச் செல்ல இருப்பதாகச் செய்திகள் வருகின்றன. மொத்தத்தில் பார்க்கும்போது, பா.ஜ.க. கூட்டணி ஆட்சியில் உண்மையான அதிகார வட்டம் என்பது அத்வானியைச் சுற்றியே இருக்கும்!

கொஞ்சம் நீக்குப் போக்காக இருப்பதில் தவறேதும் இல்லை என்றும் நம்புபவர். அதன் விளைவுதான் இன்று, பல்வேறு எதிர்மறையான கொள்கைகளைக் கொண்ட மாநிலக் கட்சிகளுடன் கூட்டணி அமைத்தது; பின்னர் தேசிய செயல் திட்டத்தில் சர்ச்சைகளை உண்டாக்கும் சில விஷயங்களைத் தளர்த்தியதும் இந்த அடிப்படையில்தான்.

இன்றைய கால கட்டத்தில் பா.ஜ.க.வில் வாஜ்பேயும் அத்வானியும் இணையான தலைவர்களாகச்

**— கௌசி**

✉ முழு நிலவை 'குளோஸ்-அப்'பில் படம்பிடித்து அட்டையில் பிரசுரம் செய்தமைக்கு தாங்க்ஸ்! மாதுரி தீக்ஷித் படத்தைத்தான் சொல்றேன்.
நாகூர், ஏ. காதர்.

✉ அட்டையில் மிக அசத்தலாக இருந்தார் மாதுரி தீக்ஷித். அவரது பேட்டி சுவையாக இருந்தது.
திருமானூர், ஆர். மார்ட்டின்.

✉ ஏன் மயங்க மாட்டார் எம்.எஃப். ஹுசேன்? கல்கியையே மயக்கி அட்டைப் படத்தில் இடம்பிடித்து விட்டாரே!
எஸ்.ஆர்.புரம், மலர்குமார்.

✉ ஜெயலலிதாவின் (தேச) துரோகத்தைத் தோலுரித்துக் காட்டிய தலையங்கம் அசத்தலாக இருந்தது. சம்பந்தப்பட்டவர்களுக்கு உறைத்தால் சரிதான்!
திருச்சிராப்பள்ளி, ஜெ. சந்தரசேகரன்.

பட்டமேளா

# ஏன் மயங்க மாட்டார் எம்.எஃப். ஹுசேன்!

✉ தலையங்கததில் ஜெ.வின் உண்மைச் சொரூபத்தை வெளிச்சம் போட்டுக் காட்டி விட்டீர்கள்! மக்கள் ஆழ்மனத்தில் இது நிச்சயம் படியும்.
பம்மல், பி. சுரேகா.

✉ தமிழகம் முழுவதும் நிலவும் கடுமையான 'பவர்கட்'ஐ முதல்வரின் கவனத்திற்கு கார்ட்டூன் மூலம் கொண்டு சென்றதற்கு நன்றி!
கமுதி, ராஜி.

✉ தோழிகள் மேலுள்ள வழக்குகளை மக்களே மறந்து விட்டார்கள் என ஜெ. தேர்தல் வெற்றிக் களிப்பில் சொல்லி மகிழ்ந்து கொண்டிருக்க, தாங்கள் மறக்கவில்லை என 'கல்கி' நினைவூட்டியது உங்களின் நேர்மையான ஜனநாயக விருப்பத்தையே காட்டுகிறது! சபாஷ்...
மதுரை, வி.பி.எம். வள்ளி.

✉ இந்திரா சௌந்தர்ராஜனின் "மூன்றாவது கொலை" மக்கள் மனத்தில் படிந்துள்ள பாசிகளுக்கு நல்ல சம்மட்டி அடி.
மேட்டுப்பாளையம், பி.ஏ. வதூத்.

✉ அபிப்பிராயம் சொல்வதைத் தவிர்க்க நினைத்த பாலுமகேந்திராவிடம் பேட்டி கண்டு, உண்மைகளைக் கொட்ட வைத்த உங்களுக்கு ஒரு சபாஷ்!
ஈரோடு, சுதி. அருணாசலம்.

✉ சிறுமி குளோரியாவின் ஓவியத் திறமை என்னை வியப்பிலாழ்த்தியது. அந்த அதிசயக் குழந்தை எதிர்காலத்தில் குறிப்பிட்ட நோயின் பிடியிலிருந்து விடுபட்டுப் பரிபூரண நலமடைய எல்லாம் வல்ல இறைவனை என் உளமார வணங்குகின்றேன்.
பிச்சாண்டார் கோவில், எம். காமராஜ்.

✉ பாரதிபாலன் எழுதிய "ஒருவரும் ஒருவனும்" சிறுகதை மிக அருமையாக இருந்தது. ஐயாவின் உயர்ந்த உள்ளத்தையும், கொடைப் பண்பினையும், இயற்கையோடு அவர் வைத்திருந்த காதலையும் மிக அழகாக நம் மனக்கண் முன் நிறுத்திய விதம் பாராட்டத்தக்கது. செல்லாண்டி அறியாமல் செய்த தவறையும் மன்னித்து, அவன் உணரும்படி ஐயா நடந்து கொண்டவிதம் உள்ளத்தைத் தொட்டு விட்டது. என் பாராட்டுக்கள்.
சென்னை - 33, நா. கண்ணன்.

✉ ரஜினி 'வாய்ஸ்' இனி எடுபடுமா? என்ற கேள்விக்கு உமது பதில் அருமை!
திருவாரூர், எஸ். காளிதாஸ்.

✉ 'வறண்ட நிலத்தையும் வளமாக்கிக் காட்டுவேன்' என்று சவால் விடும் விவசாயி பற்றிய கட்டுரையைப் படித்ததும் வியந்தேன். சதாசிவத்துக்குத் தகுந்த ஊக்கமும், உதவிகளும் செய்து இயற்கைச் செல்வங்களை வளர்க்க வேண்டியது மத்திய, மாநில அரசுகளின் கடமை.
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.



நடந்து கொண்டிருக்கும் இந்திய - ஆஸ்திரேலிய கிரிக்கெட் மாட்ச்களில் இந்தியாவின் தொடர் வெற்றிக்கு ஒவ்வொரு இன்னிங்ஸிலும் அஸ்திவாரம் போடுகிறவர் சித்து. கல்கத்தா டெஸ்டை வென்ற கையோடு பெங்களூருக்கு உற்சாகமாகக் கிளம்பிக் கொண்டிருந்தவரை ஈடன் கார்டன் மைதானத்தின் பெவிலியனில் சந்தித்துப் பேசினோம். எப்போதுமே யாருக்கும் பேட்டி தரச் சம்மதிக்காத சித்து, அதிசயமாக இம்முறை நாம் கேட்டதும் ஒப்புக் கொண்டு பேசினார். பேட்டியிலிருந்து :

# வேண்டுமென்றே என்னைப் பற்றி புரளி கிளப்புகிறார்கள்!

**கல்கி** : தொடர்ந்து பதினாறு வருடங்களாகத் தொடக்க ஆட்டக்காரராக ஆடி வருகிறீர்கள். உங்கள் வெற்றியின் ரகசியம் என்ன?

**சித்து** : ரகசியம் ஏதுமில்லை. எல்லா மேட்ச்களிலும் நன்றாக ஆடுவதால் தொடர்ந்து அணியில் இருக்க முடிகிறது. ஏன், நான் சரியாக ஆடாத பல சமயங்களில் என்னை நீக்கியும் இருக்கிறார்களே?

**கல்கி** : அதில்லை. நீண்டகாலமாக அணியில் இருப்பது எப்படி? ஒரு மேட்சில் சிறப்பாக ஆடினாலும் காரணமே சொல்லாமல் அடுத்த மேட்சில் 'தூக்கி' விடும் காலகட்டமல்லவா இது?

**சித்து** : என்னைப் பொறுத்தவரைதான் நான் பதில் சொல்ல முடியும். நான் தினமும் நான்கு மணி நேரம் ஓட்டப் பயிற்சி செய்பவன். தவிர நாலு மணி நேரம் பேட்டிங் பயிற்சியும் உண்டு. இதைத் தொடர்ந்து செய்வதால் 'Form' ல் இருக்கிறேன். போலரானாலும் சரி; பாட்ஸ்மன் ஆனாலும் சரி – இப்படி தினமும் பிராக்டிஸ் செய்தால்தான் ஃபிட்னஸ் மற்றும் ஆட்டத்திறன் வெளிப்படும். தொடர்ந்து அணியிலும் இருக்க முடியும்!

**கல்கி** : இதுவரை நீங்கள் வாயே திறக்காத 'அந்த' விஷயம் பற்றிக் கேட்காமலிருக்க முடியவில்லை. 1996ல் இங்கிலாந்து டூரின் போது அஸாருடன் நீங்கள் முறைத்துக் கொண்டு...

**சித்து** : (இடை மறித்து) ஸாரி. அது முடிந்த கதை. இப்போது எதற்குக்

**"இந்தாம்மா, விபத்து நடந்த ரயிலில் உன்னோட மாமியாரும் பிரயாணம் செஞ்சிருக்காங்கங்கறதுக்காக, ரயில் விபத்து செய்தியை நீ சிரிச்சுக்கிட்டே வாசிச்சது கொஞ்சம் கூட சரியில்லை."**
**— வீ.பா. கிருஷ்ணன்**

னுகிறீர்கள்?

**கல்கி :** இல்லை... இப்போதும் அஸார்தான் கேப்டன். நீங்களும் ஆடுகிறீர்கள். அதுவும் பிரமாதமாக ரன் குவிக்கிறீர்கள்...

**சித்து :** எங்களுக்குள் எந்த கருத்து வேறுபாடும் இப்போது கிடையாது. இடைப்பட்ட காலத்தில் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொண்டோம்! சென்னை டெஸ்டின்போது வார்னேவை எதிர் கொள்ள சில முக்கியமான டிப்ஸ்களை அஸார்தான் எனக்குக் கொடுத்தார். அதனால்தான் என்னால் அப்படி அதிக ரன்கள் எடுக்க முடிந்தது. பழைய கதையையெல்லாம் தயவு செய்து மறந்து விடுங்கள்!

**கல்கி :** சென்னை டெஸ்டில் மோங்கியா. இங்கே (கல்கத்தாவில்) லக்ஷ்மணன் என்று சக துவக்க ஆட்டக்காரர் மாறிக் கொண்டே இருந்தும் எப்படி பிரச்னை வராமல் சமாளித்து ஆடினீர்கள்?

**சித்து :** இருவருமே என்னுடன் முன்பு இணைந்து ஆடியவர்கள்தாம். அதனால் அண்டர்ஸ்டாண்டிங் உண்டு. ஓபனிங் பாட்ஸ்மன்களுக்குத்தான் என்றில்லை. அணியில் எல்லோருக்கும் எல்லோருடனும் நல்ல அண்டர்ஸ்டாண்டிங் இருந்தால்தான் சிறப்பாக ஆட முடியும்.

**கல்கி :** சென்னையில் வார்னேயைச் சமாளித்த அனுபவம் பற்றிச் சொல்லுங்கள்?

**சித்து :** உண்மையாகச் சொல்கிறேன். முதல் இரண்டு ஓவர்கள் ரொம்பவே திணறி விட்டேன். அவரது பந்து வீச்சு, அசல் மாயா ஜாலம்தான்! நாம் எதிர் பார்க்கிறபடி வரவே வராது! என் திணறலைப் பார்த்துவிட்டுத்தான் அஸார் சில 'டிப்ஸ்' சொல்லி அனுப்பினார். அதாவது, 'Counter Attack' ஆக ஆடுகிற வித்தை! அது ரிஸ்க் எடுத்துச் செய்கிற காரியம்தான். துணிந்து செய்ததால்தான் வார்னேவை சமாளிக்க முடிந்தது.

**கல்கி :** 16 வருடங்களாக ஆடுகிறீர்கள். இருந்தாலும் மற்றவர்களை விட மிகக் குறைவான டெஸ்ட் மாட்ச்கள் தான் ஆடியிருக்கிறீர்கள். ஏன் இப்படி?

**சித்து :** எத்தனை டெஸ்ட்கள் ஆடினேன் என்பது எனக்கு முக்கியமே அல்ல! எத்தனை ரன்கள் எடுத்திருக்கிறேன் என்று பாருங்கள். என் சராசரி, 55க்கும் மேல்!

**கல்கி :** இது பற்றி வேறு வித கருத்து சொல்கிறார்கள். நீங்கள் ஒரு ஜோசியரின் ஆலோசனைப்படிதான் ஒரு டெஸ்டை ஆடுவதா, வேண்டாமா என்று தீர்மானிப்பதாகப் பரவலான பேச்சு...

**சித்து :** (கடும் கோபமுடன்) இதெல்லாம் வெறும் கட்டுக்கதை! இந்த கம்ப்யூட்டர் காலத்தில் என் போன்ற பெரிய விளையாட்டுவீரன் அப்படியெல்லாம் இருக்க முடியுமா? யாரோ சிலர் என் இமேஜைக் குலைக்க வேண்டுமென்றே இப்படியெல்லாம் கதை கட்டி விடுகிறார்கள். நான் எந்த ஜோசியரையும் பார்ப்பதில்லை. நல்ல 'ஃபார்மில்' இருக்கும்போது அணியில் இருப்பேன். சரியாக ஆடாத சமயங்களில் இருக்கமாட்டேன். சில சமயம் அடிபட்டு விடுவதாலும் 'ஃபிட்னஸ்' காரணங்களுக்காக நீக்கிவிடுகிறார்கள். இதுதான் உண்மையே தவிர, பிற புரளிகளை தயவு செய்து நம்பாதீர்கள்! ●

பேட்டி : **சிம்மம்**

# ஒன்...டூ...த்ரி...
# ...ஃபோர்...



திருவனந்தபுரத்துக்கு, கடந்த வாரம் வளைகுடா நாடான 'குவாதிரி'லிருந்து வந்து இறங்கினார்கள், சகினா பானுவும், அப்துல் ரஹீமும். அவர்கள் வருகை விமான நிலையத்தில் சின்ன பரபரப்பை ஏற்படுத்தியது. போட்டோகிராபர்களும், டீ.வி. கேமராகாரர்களும் அவர்களை முற்றுகையிட்டார்கள். காரணம்?

அவர்களுடன் வந்த குழந்தைகளான பாத்திமா, ஃபாஹத், ஃபாஸில், ஃபாவுஸ். நாலு பேரும் தான். மூன்று வயதான இவர்கள் நால்வரும் ஒரே பிரசவத்தில் பிறந்த குழந்தைகள். தவிர, இவர்களுக்கு ஐந்து வயதில் அபுபக்கர் என்ற ஒரு அண்ணனும் உண்டு.

ஆறு வருடங்களுக்குப் பின் இந்தியா வரும் சகினா பானுவுக்கு, குவாதரிலே தான் இந்தக் குழந்தைகள் பிறந்தன.

விமான நிலையத்தில் அவர்களை வரவேற்க வந்திருந்தவர்கள், பூங்கொத்துக்களையும், பரிசுப் பொருட்களையும் தந்தபோது, குழந்தைகளுக்கு ஒரே சந்தோஷம்!

குவாதரில் தனியார் கம்பெனியொன்றில் அதிகாரியாய்ப் பணி புரியும் அப்துல் ரஹீமின் மனைவி, மூன்றாண்டுகளுக்கு முன் அங்கேயே உள்ள ஆஸ்பத்திரியில், ஒரே பிரசவத்தில் நான்கு குழந்தைகளைப் பெற்றெடுத்தார். ஏழாவது மாதத்திலேயே பிரசவித்து விட்டதால், நாலு குழந்தைகளையும் 20 நாட்கள் இன்குபேட்டரில் வைத்து, போஷித்து, பராமரிக்க வேண்டியிருந்தது. சிசேரியன் ஆபரேஷன் மூலம் முதலில் வெளியே எடுக்கப்பட்ட பெண் குழந்தை 1550 கிராம் எடை இருந்தது. மற்ற குழந்தைகள் முறையே 1450, 1400, 1280 கிராம் எடை இருந்தன. அதன் பிறகு இன்றுவரை குழந்தைகள் உடல் ஆரோக்கியமாகவே இருக்கின்றனவாம்.

''நாலு குழந்தைகளையும் பார்த்துக் கொள்வது கஷ்டமாக இருக்கிறதா?''

''முதல் ஒரு மாதம் ரொம்ப தவித்துப் போய் விட்டேன். அப்புறம் ஒரு வேலைக்காரி வைத்துக் கொண்டு சமாளித்தேன். இப்போது நோ பிராப்ள்ம்.''

''குழந்தைகள் நாலு பேரும் ஒரே மாதிரி நடந்து கொள்கிறார்களா?''

''ஆமாம் என்றே சொல்ல வேண்டும். நாம் கொடுக்கிற எதையாவது ஒரு குழந்தை பிடிக்கவில்லை என்று சொன்னால், உடனே மற்ற மூன்றும் தமக்கும் வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளி விடும். அந்த சமயங்களில் இவள் பாடு ரொம்ப பரிதாபம்'' என்கிறார் குழந்தைகளின் அப்பா ரஹீம்.

இந்த கோடைக்காலம் முடிந்து, மறுபடி ஊருக்குப் போனவுடன், நாலு பேரையும் ஸ்கூலில் சேர்க்க வேண்டும்'' என்று கவலையும் பொறுப்புமாகச் சொன்னார் சகினா பானு.

திருவனந்தபுரத்திலிருந்து: **மௌலி**



''காலத்துக்கு ஏத்த மாதிரி நாமும் மாறிக்கணும் சிஷ்யா.''

''அதுக்காக சம்மர்ல மட்டும் உங்க பேரை 'சுவாமி ஐசானந்தா'ன்னு மாத்திக்கிட்டது நல்லாவா இருக்கு சுவாமி?''

''பத்மபூஷண் விருது கிடைக்கலேன்னு வருத்தமாயிருந்த நம்ம டைரக்டர் திடீர்னு குஷியாகிட்டாரே. எப்படி?''

''வெயிலுக்கு இதமா 'தர்பூஷண் விருது' தர்றதா அறிவிச்சுட்டாங்களாம்.''





''என்ன சார் இது. இந்த கொளுத்தற வெயில்ல உட்கார வெச்சு கிளாஸ் எடுக்கிறீங்க?''

''நாங்கதான் சம்மர் கோர்ஸ்னு சொன்னோமே.''



'' 'சம்மர் கட்'னா இப்படித்தான் இருக்கும்னு அந்த சலூன்ல சாதிச்சுட்டாங்க.''



''சுடுமையான வெயில் காலத்துல நாம போருக்குப் போயிருக்கக் கூடாது மன்னா.''

''என்ன ஆச்சு தளபதியாரே?''

''எதிரி நாட்டு மன்னன் பெட்டி பெட்டியா குச்சி ஐஸைக் கொண்டு வந்து கர்ட்டினதும் நம்ம வீரர்கள்லாம் போய் சரணடைஞ்சுட்டாங்க.''

— பாபுஜி

வண்ணப்படம் :
கோபிநாத்



"சூப்பரா பத்து ஊருக்கு
டூர் போன உணர்வு
வரணும்பா!"
"சரி."
"இந்த வெயில் கொளுத்தற வேகத்துல
குளுகுளுன்னு பிரமாதமா
ஃபோட்டோஸ் இருக்கணும்!"
"ஓகே!"
"டக்கர், தூள், பிரமாதம்னு
சொல்றாப்பல கதைகள் வேணும்!"
"நோ பிராப்ளம்!"
"நல்லா சிரிச்சி ரொம்ப நாளாச்சு.
ஜெலுஸில் வாங்க வைக்கறாப்பல
ஜோக்ஸ் எக்கச்சக்கமா வேணும்...."
"பூ... இது என்ன பிரமாதம்?"
"கொஞ்சம் ஆன்மீகம் வேணும்!"
"அது இல்லாமயா?"
"அப்ப இந்த வருஷம் கல்கி விடுமுறை
மலர் சூப்பரா இருக்கும்னு சொல்லு!"
"அதை வேற தனியா சொல்லணுமா?
சீக்கிரம் போய் புக் பண்ணிடு.
பின்னால ஓஸி கேட்டா, நான் தர
மாட்டேன்,
சொல்லிட்டேன்!"



## தயாராகிறது...

# கல்கி விடுமுறை மலர் '98

– முழுமையான, விறுவிறுப்பான பொழுதுபோக்குக்கு –

# கர்ப்பிணிகளுக்கு வரம்

அல்ட்ராசவுண்ட் அல்லது அல்ட்ரா-சோனோகிராஃபி-உடலுக்குள்ளே நடப்பதை அறுவைச் சிகிச்சை இல்லாமலேயே அறிந்து கொள்ளக் கண்டுபிடிக்கப்பட்ட மிக முக்கியமான கருவி இது!

மருத்துவத்தில் இன்று இந்த முறை மிகப் பிரபலமாகி விட்டது. என்றாலும், இது முதலில் பரவலாகப் பயன்படுத்தப்பட்டது யுத்தகளத்தில்தான்!

இரண்டாம் உலகப் போர் நடந்த சமயம் அது. ஜெர்மன் நீர்மூழ்கிக் கப்பல்கள் பிரிட்டிஷ் கடற்படைக்கு நிறைய சேதங்களை விளைவித்துக் கொண்டிருந்தன. அப்போதுதான் பிரிட்டிஷ் விஞ்ஞானிகளுக்கு அந்த யோசனை தோன்றியது. நீருக்குள் ஒலி அலைகளை மிகுந்த வேகத்தில் செலுத்தி, அவை திரும்பிவரும் நேரம் மற்றும் வேகத்தைக் கொண்டு அருகில் நீர்மூழ்கிக் கப்பல்கள் உள்ளனவா, இல்லையா என்பதைக் கண்டு கொண்டார்கள். (நீர்மூழ்கிக் கப்பல் மீது ஒலி அலைகள் பட்டுத் திரும்பினால் அதன் விசை வித்தியாசமானதாக இருக்கும்) இப்படி ஒலி அலைகளைக் கொண்டு நீரில் வரும் பொருளின் இடத்தை மட்டுமல்ல, அதன் வடிவத்தையும் கூட அறிந்து கொள்ள முடிந்தது, விஞ்ஞானிகளால்! இந்தத் தொழில் நுட்பத்தை 'சோனார்' என்று குறிப்பிட்டார்கள்.

தட இதுல இவ்வளோ விஷயமிருக்கா?—9

பிரிட்டனைச் சேர்ந்த இயான் டோனால்ட் என்ற மருத்துவர்தான் இந்த சோனார் தொழில் நுட்பத்தை மருத்துவ உலகில் முதலில் நடைமுறைப் படுத்தியவர்.

மருத்துவத்தில் இது எப்படிப் பயன்படுகிறது? ஒலியை ஹெர்ட்ஸ் (Hertz) என்ற அளவின் மூலம்தான் கணக்கிடுவார்கள். சாதாரணமாக நம் காதுகள் 16லிருந்து 2000 ஹெர்ட்ஸ் வரை கேட்கும் சக்தி கொண்டவை. அதற்கு மேல் ஒலியின் அளவு தாண்டினால் அதைக் கேட்கும் சக்தி நம் காதுகளுக்கு இல்லை. நம் உடலுக்குள் இதையெல்லாம் விட மிக அதிகமான அளவில் அதிர்வு கொண்ட (ஒரு மில்லியனுக்கும் அதிகமாக) ஒலி அலைகளைக் குறிப்பிட்ட பகுதியில் செலுத்தி, அது திரும்பி வரும் நேரத்தைக் கொண்டு மருத்துவர்கள் பல விஷயங்



• அல்ட்ரா சோனோகிராஃபி சிகிச்சை—

களைக் கணித்து விடுவார்கள். எதிரொலி என்பது இதற்கு அடிப்படையாக அமைவதால் இதை "எக்கோகிராஃபி" என்றும் அழைப்பதுண்டு.

பொதுவாக இதுபோன்ற ஒலி அலைகள் நம் உடல் திசுக்களின் மீது பாயும் போது அவை கிரகித்துக் கொள்ளப்படலாம் அல்லது திசுக்குள் ஊடுருவி மறுபக்கமாக வெளியேறலாம் அல்லது அந்த ஒலி அலைகள் தடுக்கப்பட்டு பிரதிபலிக்கப்படலாம். இவையெல்லாம், அந்தப் பகுதியின் பாதிப்பு எந்த அளவு என்பதை அறிந்து கொள்ள டாக்டருக்கு மிக முக்கியமான தடயங்கள்.

குடல் பகுதியைப் பொறுத்தவரை அங்கே நிறைய காற்றினால் நிரப்பப்பட்ட 'லூப்'புகள் உண்டு. இதனால் அங்குள்ள ஆழமான திசுக்களின் நிலையை இந்த ஒலி

# பிரசாதம்!

முறையைக் கொண்டு அளவிடுவது கஷ்டம். ஆனால் சிறுநீரகப்பை ஏதாவது திரவத்தால் நிரம்பியிருந்தால் இது சாத்தியம். அதனால் தான் இந்த வகை சோதனைக்கு வரும் போது சிறுநீரகப் பை யூரினால் நிரம்பி யிருக்கும் வகையில் நிறையத் தண்ணீர் குடித்துவிட்டு வரவேண்டும் என்று சொல்லுவார்கள்.

பொதுவாகவே காற்றுப் பகுதியைத் தாண்டி இந்த ஒலி அலைகள் சென்று வருமானால், அதன் விளைவு முழுவதும் நம்பத்தகுந்ததாக இருக்காது. நம் நுரை யீரலோ காற்றால் நிரம்பியது. அந்தக் காற்றை எந்த விதத்திலும் முழுவதுமாக வெளியேற்றவும் முடியாது (அப்புறம் பூட்டகேஸ்தான்). எனவே அல்ட்ரா சவுண்ட் முறையை மார்புப் பகுதி முழு வதற்குமே பயன்படுத்த முடியாது. கிட்டத் தட்டதான் - எந்த இடத்தில் நுரையீரல் தட்டுப்படாமல் இருக்கிறதோ (அது மிகவும் குறைந்த பரப்புதான்) அந்தப் பகுதியில் இந்த முறையைப் பயன்படுத்தலாம்.

கர்ப்பமடைந்த பெண்களுக்கு இது மிகப் பெரிய வரப்பிரசாதம். காரணம் வயிற்றில் உள்ள குழந்தையின் மீது எக்ஸ்ரே கதிர்கள் செலுத்தப்பட்டால் அதில் ஆபத்து உண்டு என்பதால் ஒலி அலைமுறை இங்கு மிகவும் ஏற்றதாக இருக்கிறது. கருவில் மிக லேசான குறைபாடு ஏதாவது இருந்தால் கூட அல்ட்ரா சோனோகிராஃப் மூலம் இன்று அதை எளிதாகக் கண்டறிய முடியும்!

எக்ஸ்ரே கதிர்வீச்சைப் போல் ஆபத்து எதுவும் இல்லை என்றாலும் தொடர்ந்து மிக அதிக வேகத்தில் ஒலி அலைகளை உடலுக்குள் செலுத்தினால் அந்தப் பகுதியில் வெப்பம் அதிகரித்துவிடும் என்ற கருத்து நிலவியதுண்டு. ஆனால் சில நொடிகளே இவை செலுத்தப்படுகின்றன என்பதால், திசுக்கள் வெப்பமடைவதற்கான வாய்ப்பு மிக மிகக் குறைவே என்பது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது!

— ஜி.எஸ்.எஸ்.



ஆர். சூடாமணி

# ஆசை வெறி மனம் செல்லப்

"அந்த சரோப் பொண்ணைக் கொஞ்சம் பொழுதோட வூட்டுக்கு அனுப்பிடுங்கம்மா! 'சாயந்தர வேலைக்கு நான் போறேன்டி'ன்னாலும் கேக்க மாட்டேங்குது. வயசுப் பொண்ணு. அது திரும்பி வாரவரைக்கும் மனசு திக்கு திக்குங்குது."

பூங்காவனத்தின் கவலை புரிந்தது. அதே சமயம், எதுவும் செய்ய முடியாது என்பதும் புரிந்தது. தொலைக்காட்சிப் பெட்டியின் எதிரேயிருந்து இரவு எட்டு மணி வரை சரோஜாவை கடப்பாரை போட்டு நெம்பினாலும் அசைக்க முடியாது.

சுறுசுறுப்பான பெண். ஓடியாடி வீட்டு வேலைகள் அனைத்தையும் நொடியில் செய்து முடிப்பாள். பதினாறு வயதிலேயே வேலையில் அப்படி ஒரு சுத்தம், திறமை. வாசல் தெளித்துக் கோலம் போட்டாளானால் அதன் மேல் கால் வைத்து நடக்க மனம் வராது.

முதலில் பூங்காவனம்தான் இங்கே வீட்டு வேலை செய்து கொண்டிருந்தாள். மூன்று மாதம் முன்பு காமாலை நோய் வந்து படுத்தபோது அவளுடைய இரண்டாவது மகள் சரோஜா அவளுக்குப் பதிலாக வேலைக்கு வந்தாள். ஒரு மாதத்துக்கு என்றுதான் பேச்சு. ஆனால் அது என்ன முகராசியோ! வீட்டு எஜமானி வாசுகிக்கும் சரோஜாவுக்கும் 'கண்டதும் காதல்'. வாசுகியின் மகளும் மகனும் தத்தம் குடும்பங்களுடன் வெளியூர்களில் இருந்தார்கள். அவள் அதட்டவும் செல்லம் கொடுக்கவும் இங்கே வேறு யாருமில்லை. சரோஜா வந்து சேரவே, அந்தக் குறை நீங்கியது.

"இந்தாடி சரோ, இப்போ வாசல் பெருக்க என்ன அவசரம்? வந்து இந்த காப்பியை வாங்கிக்கிட்டுப் போ. அப்புறம் சூடு ஆறிடும்" என்று அதட்டுவாள்.

"ஏண்டி இன்னிக்கு முகம் என்னமோ மாதிரி இருக்கு? ஜுரம் கிரம் இருக்கா என்ன? கொஞ்ச நேரம் பேசாம படுத்துக்க, சொல்றேன். மாத்திரை தரட்டுமா?" என்று அங்கலாய்ப்பாள்.

பூரி, போண்டா போன்ற 'நல்ல' டிபன்கள் கூட அதிகம் மிகுந்து விட்டாலும் இப்போது கவலையில்லை. தாராளமாய்த் தட்டில் வைத்து, "முதல்ல உக்காந்து இதைச் சாப்பிடு" என்று சரோவிடம் கொடுப்பாள். "உன் மூணாவது குழந்தையா?" என்று கணவர் பரிகாசம் செய்யும்போது சந்தோஷப்படுவாள்.

சரோவுக்கோ, அம்மா என்றால் தேவதா விசுவாசம். அம்மாவின் ஆடைகளை மடித்து வைக்கும் போது ஒரு குழந்தையைத் தொடுவது போல் மென்மையாய்த் தொட்டு மெல்ல நீவி நீவி மடிப்பாள். அம்மா, "ஸ்ஸ்ஸ்...!" என்று ஓய்ந்து உட்கார்ந்தால், "என்னம்மா, கால் நோகுதா? புடிச்சு விடட்டுங்களா?" என்று தலைப்பின்னல் துள்ள ஓடி வருவாள். அம்மா ரொம்ப நல்லவர்கள். வேலைக்கு ஏவும் போது குரல் அதட்டுவது போல் தோன்றினாலும் அது பூவால் அடிக்கிற அடிதான். வயிறு முட்ட உணவு தருகிறார்கள். எல்லாவற்றையும் விட முக்கியமாய், அம்மாவும் அய்யாவும் இவளை டி.வி. பார்க்க அனுமதிக்கிறார்கள். எல்லா வீடுகளிலுமே வேலை

யாட்களுக்கு இந்தச் சலுகை கிடைத்து விடு வதில்லை என்று அவளுக்குத் தெரியும். அவள் சிநேகிதி ரஞ்சிதம் வேலை செய்யும் வீட்டில் தப்பித் தவறிக் கூட வேலைக் காரர்கள் கண்ணில் பட்டு விடக்



கூடாதென்று ஜன்னல்களையெல்லாம் முழுத் திரை போட்டு மூடி விட்டுக் கதவுகளைச் சார்த்திக் கொண்டுதான் டீவி. பார்ப்பார்களாம்.

சரோ தன் தாயிடம் இந்த வீட்டில் தானே தொடர்ந்து வேலை செய்யப் போவதாய்த் திட்டவட்டமாய்ச் சொல்லி விட்டாள்.

எழும்பூர் வட்டாரத்தில் இருந்தது அவனுடைய ஒற்றையறை 'வீடு'. சற்று தூரம் நடந்தால் அவள் வேலை செய்கிற புரசை வாக்கம் எல்லைப் பகுதி. இது ஒரு தொலைவா? எல்லாம் பழகிய இடங்கள். வழியில் தெரிந்தவர்களின் இருப்பிடங்கள். சாலை நெடுக சோடியம் வேப்பர் விளக் கொளி. பத்து மணிக்கும் ஊரடங்காத பட்டணக் கலகலப்பு. என்ன பயம்? எட்டு மணிக்குக் கிளம்பினால் கால் மணி நேரத்தில் தன் குடிசையை அடைந்து விடலாம். எஜமானி கொடுத்த உணவு (இதில் டீ.வி. இன்பமும் அடக்கம்) வயிற் றையும் மனசையும் நிறைத்திருக்க, ஒரு பழைய துப்பட்டியைப் போர்த்திக் கொண்டு எத்தனையோ சககுடிசைவாசி களுடன் தெரு ஓர நடைபாதையில் படுத்து உறங்கி, டீ.வி. விளம்பரத்தில் பார்த்த அழகான கோ-ஆப்டெக்ஸ் சேலை பற்றிக் கனவில் மூழ்கி விடலாம்.

சின்னத் திரையில் புதுப்புது உலகங் கள். பார்க்கும் கண்கள் அவற்றில் ஒன்றிக் கரைந்து போகும்போது உடலின் பிரக் ஞையே இருக்காது. கதைத் தொடர்களும் நாடகங்களும் சுவைத்தாலும் தனிச்சுவை கொண்டவை அந்த விளம்பரங்கள்தாம். ஷாம்பு, முடித் தைலம், கிரீம், பற்பசை, புடைவை, நகை - ஒவ்வொன்றிலும் உயிர் புகுந்து புறப்பட, மூச்சின் வேகத்தில் உணர்ச்சிகள் படபடத்து முகத்தில் வேர்வையாய் வெளிப்படும்போது ஓர் ஏக்க சுகம் கவிந்து கொள்ளும்.

சரோஜா ஆறாம் வகுப்பு வரை படித் தவள். கிடைக்கும் தமிழ்ச் சஞ்சிகைகளைப் படித்து எழுத்தறிவை வளர்த்திருந்தாள். எனவே விளம்பர வாசகங்களைப் படித்து அனுபவிக்க முடிந்தது. பட்டுப் போல் மேனி, சுவாசப் புத்துணர்ச்சி, ஆரோக்கியம் பளபளக்கும் கூந்தல் - ஒரு காட்சி மாற் றத்தில் சோர்வு குதூகலமாக மாறிவிடும் அதிசயம்தான் என்ன! இமை நேரத்தில் அழகு ராணியாகி விடக்கூடிய மாயா ஜாலம். ஒரு பெண் சரியான சோப் உபயோகித்தால் ஆண் அவள் காலடியில். ஓர் ஆண் தன் டூத்பேஸ்டை மாற்றினால் பெண் அவன் வசம்!

நாடகம் ஒரே ஒரு உலகைத்தான் காட்டு மென்றால், விளம்பரங்களின் மாயாபுரி ஒவ்வொன்றும் ஒவ்வொரு உலகைக் காட் டியது. கனவின் இனிமை போல் உணரும் அனுபவங்கள். நொடிக்கு ஒரு புது விஷயம், ஒரு புதுக் கவர்ச்சி.

அந்த 'சிகப்பழகு' கிரீமைத்தான் வாங்கிப் பூசிக் கொண்டால் எவ்வளவு நன் றாயிருக்கும்!

சரோஜா மாநிறம்தான். ஆனால் தன் நிறம் ஒரு குறைபாடு என்றோ, அத னால் தான் அழகற்றவள் என்றோ அவ ளுக்குத் தோன்றி யதில்லை - 'சிகப்பழகு' விளம்பரத்தை டீ.வி.யில் பார்க்கும் வரை.




ஒருநாள் வாசுகியிடம் கேட்டான் : "ஏம்மா, நிசமாவே இந்த கிரீம் பூசிக்கிட்டா சிவப்பாயிருவாங்களா?"

"ஏன், உன்னைப் பூசிக்கச் சொல்றானா கதிரேசன்?"

"போங்கம்மா, அதுக்கென்ன தெரியும்! நான் எப்படி இருந்தாலும் அதுக்கு இஷ்டம் தான்."

"பெருமையைப் பாரு!"

கதிரேசன் அவள் 'முறைப் பையன்'. பூங்காவனத்தின் அண்ணன் மகன். சீக்கிரம் அவர்கள் கல்யாணத்தை நடத்தி விட வேண்டுமென்று பூங்காவனத்துக்குத் தவிப்பு. அவள் பெரிய மகள் குடிகாரப் புருஷனோடு வாழ மாட்டேன் என்று சொல்லித் தாய் வீட்டுக்கு வந்து விட்டாள். அவள் நடத்தை சரியில்லை என்று புரு ஷன்காரன்தான் தாய் வீட்டுக்குத் துரத்தி விட்டதாகக் கதைக்கு இன்னொரு வடி வமும் இருந்தது. உண்மை என்னவோ, அந்த ஆயிரங்கண்ணாத்தாளுக்குத்தான் தெரியும். ஆனால் அப்படி ஒரு நிழல் படிந்திருந்த தால் அக்காளின் காரணமாய்த் தங்கை வாழ்க்கை பாதிக்கப்படக்கூடாதே என்று விரைவில் இந்தத் திருமணத்தை முடிக்க விரும்பினாள் பூங்காவனம். என்னதான்




சொந்தம், உறவு முறை என்றாலும் திடீரென்று யார் மனம் எப்படி மாறுமோ! இந்த நிமிஷம் வரை அண்ணன், அண்ணி, பையன், பெண் எல்லாருக்குமே விருப்பம் தான். ஆனால் டீ.வி. பார்த்துப் பாடம் கற்றிருந்த சரோ, "பதினெட்டு வயசுக்கு முந்தி பொண்ணுங்களுக்குக் கல்யாணம் கட்டறது தப்பாம். அதனால இன்னும் ரெண்டு வருசத்துக்கு கல்யாணம் கெடையாது" என்று சொல்லி விட்டாள்.

கதிரேசனுக்கு சிந்தாதிரிப்பேட்டையில் ஒரு பேப்பர் கடையில் வேலை. அவ்வப்போது சைக்கிளில் ஏறிக் கொண்டு இவளைப் பார்க்க இங்கே வந்து விடுவான். "போய்ப் பேசிட்டு வா" என்பாள் வாசுகி சிரித்துக் கொண்டே.

"போங்கம்மா. இதுக்கு வேறென்ன வேலை!" என்று பொய்யாக அலுத்துக் கொண்டாலும், சரோவுக்கு உள்ளூரப் பெருமைதான். சில இரவுகளில் அவளுக்கு வீடு வரை துணையாய் சைக்கிளில் அழைத்துப் போக அவன் வருவதுண்டு. அப்போது அவனுடன் சைக்கிளில் பின்னால் அமர்ந்து செல்லும்போது ஒரு விளம்பர ஜோடியாய்த் தம்மைச் சிறிது நேரம் நினைத்துக் கொள்வது சாத்தியமாயிருந்தது.

"ஐயே, உன்னண்டை ஒரே வேர்வை நாத்தம். இப்பல்லாந்தான் அப்படி நாறாம இருக்க ஒரு சோப்புக் கட்டி வந்திருக்குதே, அதைத் தேச்சுக் குளிக்க வேண்டியது தானே?" என்பாள். அவன் அதைக் காதிலேயே வாங்கிக் கொள்ளாமல், "அடி அத்தை மகள் ரத்தினமே!..." என்று பாடியவாறு சைக்கிளை மிதிப்பான்.

"ஏம்மா, நிசம்மா சிகப்பாயிடலாங்கறீங்க?" என்றாள் சரோ மறுபடியும்.

"எனக்குத் தெரியாது. இதானா இப்ப தலை போற கவலை உனக்கு? கோதுமை அரைக்கணும். வளவளன்னு பேசிக்கிட்டு நிக்காம மெஷினுக்குப் போய்ட்டு வா, ஓடு. வேணும்னா வாங்கி உபயோகிச்சுப் பாரேண்டி?"

"நிச்சயமாயில்லாதப்ப எதுக்கும்மா? ஒருவேளை சிகப்பா ஆகாட்டிப் போனா துட்டு வேஸ்டுதானே? கஷ்டப்பட்டு சேர்த்துட்டிருக்கற துட்டை எதுக்காக வேஸ்ட் பண்ணணும்?"

"நீ துட்டு சேர்க்கறியா? எதுக்கு?"

"நல்லதா ஒரு தங்க செயின் வாங்கிக்கலாம்னுதான். டீ.வி.யில நகைக் கடைங்க விளம்பரம் காட்டறாங்களில்ல? அடேயப்பா, எத்தினி விதவிதமான, கண்ணைப் பறிக்கற நகைங்க அம்மா!"

குரல் தேய்ந்து கண்களில் ஏக்கமாய்க் கலந்தது.

"நான் உனக்கு அந்த க்ரீம் வாங்கித் தரட்டுமா சரோ?"

"வேணாம்மா. வாங்கறதுன்னா நானே வாங்கிக்கறேன்."

குருவிக் கூடு கலைவது போல் இந்தத் தோழமையின்பம் ஒருநாள் முடிந்து போயிற்று. சேலத்தில் ஒரு மருந்துக் கம்பெனியில் நிர்வாகியாய் இருந்த வாசுகியின் மகன், சென்னைக்கு மாற்றலாகி வந்தான். அவனும் அவன் மனைவியும் பத்து வயசுப் பையனும் இந்த வீட்டில்தான் வசிக்கப் போகிறார்கள். பிள்ளை தங்களுடன் வசிக்கப் போவதில் பெற்றோருக்கு அளவற்ற மகிழ்ச்சி.

ஆனால் மகனும் மருமகளும் ஒரு வேலைக்காரப் பெண் ஹாலில் உட்கார்ந்து எஜமானக் குடும்பத்துடன் சேர்ந்து டீ.வி. பார்ப்பதை விரும்பவில்லை.

"அந்தப் பெண்ணை சீக்கிரமாய் வேலையை முடிச்சுக்கிட்டு வீட்டுக்குப் போகச் சொல்லுங்க அத்தை. டீ.வியெல்

லாம் ஒண்ணும் பார்க்க வேணாம்'' என்று மருமகள் சொல்லி விட்டாள்.

டீ.வி. இல்லை என்றான பிறகு சரோஜாவுக்கு அந்த வீட்டில் மனம் லயிக்க வில்லை. அம்மா நல்லவர்கள்தான். அதற்காக என்ன செய்ய முடியும்? விரைவிலேயே அவள் வேலையை விட்டு நின்று கொண்டாள். முன்பு போல் பூங்காவனம் வந்து வேலை செய்ய ஆரம்பித்தாள். சரோஜா எழும்பூரிலேயே, டீ.வி. பார்க்க அனுமதிக்கிற இன்னொரு வீட்டில் வேலை செய்யப் போய் விட்டதாகப் பூங்காவனத்திடமிருந்து தெரிந்தது.

"அது என்ன டீ.வியம்மா! எப்ப பார்த்தாலும் டீ.வி. டீ.வின்னு பயித்தியம் புடிச்சுத்தான் அலையுது. அதுவும் வெளம்பரங்களுக்காகத்தான். வெளம்பரக்காரங்களுக்கென்ன! அப்படியே பளபளப்புல தோய்ச்சு எடுத்தாப்பல பொண்ணுங்களைக் காட்டறாங்க. இது ஏக்கத்தோட பாக்குது. அந்தப் பொண்ணுங்க உபயோகப்படுத்தறாங்கன்னு காட்டற எல்லாப் பொருளையும் பாத்துப் பாத்து ஆசைப்படுது. ஆசைப்படற வயசுதான். ஆனா நமக்குக் கட்டுப்படியாகுங்களா?'' என்று பூங்காவனம் புலம்புவாள்.

"என்னமோ தங்க செயின் வாங்க துட்டு சேர்க்கறேன்னு சொன்னாளே, அது என்ன?''

''ஆங்ங்.... அது சொல்லும் ஏதானும். என்னம்மா, சோத்துக்கே சிங்கியடிக்கிற பொளப்பு. இதுல தங்கமாவது செயினாவது!'' கண்ணைத் துடைத்துக் கொண்டு மூக்கை முந்தானையால் சிந்தி விட்டு ரேஷன் அரிசியைத் தொடர்ந்து சுத்தம் செய்வாள்.

அரிசியைப் பார்த்துவிட்டு வாசுகி லேசாய் சிரித்தாள்.

"சொல்றேன்னு கோச்சுக்காதே பூங்காவனம். உன்னை விட உன் மகளின் வேலை சுத்தம்தான்'' புடைத்து வைத்திருந்த அரிசியிலிருந்து ஒரு சின்னக் கல்லை எடுத்துப் பக்கவாட்டில் வீசிப் போட்டாள்.

"அடடா! என்னமோ கவனம், கவலை...'' சிறிது நேரம் வேலையில் முனைப்பைச் செலுத்தினாள் பூங்காவனம். பிறகு,

''சுத்தத்துக்கென்னம்மா! எது ஒண்ணும் கச்சிதமாச் செய்யும். கெட்டிக்காரி. ஏதாஹும் சொல்லிக் குடுத்தம்னு வையுங்க, 'கப்' புனு பிடிச்சுக்கும். அவங்கப்பா மட்டும் உசிரோட இருந்திருந்தா ஏதானும் வேலை

''சென்ஸார் ஆகியும் உங்க படத்தை ஏன் ரிலீஸ் செய்யாம இருக்கீங்க?''

''என்னத்த ரிலீஸ் பண்றது! மொத்தம் 12 ஆயிரம் அடியை கட் செய்துட்டாங்களே!''

– உ. ராஜாஜி

பாத்துகிட்டு இவளை நல்லாப் படிக்க வச்சிருப்பாரு. அறிவு இருக்கு, அளகு இருக்கு, அதிர்ஷ்டம் இல்லையேம்மா!''

''வருத்தப்படாதே பூங்காவனம். ஆச்சு, மிச்ச காலம் ஓடிப் போயிடிச்சன்னா அவளுக்குப் பதினெட்டு வயசாயிடும். கல்யாணம் செஞ்சு குடுத்துடு. மாப்பிள்ளை தான் கையிலேயே இருக்கான். அப்புறம் அவன் பார்த்துக்கறான்.''

காலம் சென்று கொண்டிருந்ததைப் பேரனின் வளர்ச்சியில் காண முடிந்தது. வந்த போது அவள் தோளளவு நின்றவன், இப்போது அவள் நெற்றியை எட்டியிருந்தான்.

இரண்டு மூன்று முறை சரோஜா அவளை வந்து பார்த்து, ''நல்லாருக்கீங்களாம்மா?'' என்று விசாரித்தாள். முன்பு போல் தலைமுடியைப் பின்னல் போட்டிருக்கவில்லை. சும்மா சீவி, பட்டாம்பூச்சி வடிவ 'கிளிப்' போட்டு விரியத் தொங்க விட்டிருந்தாள்.

ஒருமுறை வந்த போது கேட்டாள் : "என் முகத்துல ஏதுனாச்சும் வித்தியாசம் தெரியுதாம்மா?''

வாசுகி கவனித்துப் பார்த்தாள். எதுவும் தெரியவில்லை.

''சிவப்பழகு கிரீம் உபயோகப்படுத்தறியா?'' என்றாள் ஜாக்கிரதையாக.

''அதில்லேம்மா. முகப்பரு வராம தடுக்கற கிரீம் பூசிக்கறேன். டீ.வி.யில் காட்டறாங்களே, அது. இப்ப என் முகம் பருவில்லாம மழமழன்னு இருக்கில்லேம்மா?''

இவள் முகத்தில் முன்பு பருக்கள் இருந்ததா என்ன? சரியாய் நினைவில்லை.

இரண்டாண்டுக் காலம் நீரோட்டமாய் ஓடி விட்டது. பூங்காவனத்திடம் இப்போது ஒரு புதுத் தீவிரம். பெரிய மகள் புருஷ



னோடு சமாதானமாகி மறுபடியும் அவனுடன் குடும்பம் நடத்திக் கொண்டிருந்தாள்.

"இதாம்மா சமயம். இப்ப சரோப் பொண்ணைக் கட்டிக் குடுத்துட்டா அப்புறம் அந்த மூதேவி திருப்பியும் மொறச்சுகிட்டு அங்கே வாளமாட்டேன்னு வந்து நின்னாக் கூட அது இவளப் பாதிக்காது."

திருமண ஏற்பாடுகள் செய்ய முனையும் பரபரப்பு அவளிடம் ஒட்டிக் கொண்டது. வேலைக்கு வரும் சமயங்களில் வாசுகியிடம் செய்தி சொல்வாள்.

"எங்கண்ணனும் அண்ணியும் அவங்க கிராமத்துல கல்யாணத்தை வச்சுக்கனும்னு சொல்றாங்க. அவங்களுக்குக் கஷ்ட ஜீவனம். வயக்காட்டு வேலையில வருமானம் நிச்சயமில்ல. ஆடம்பரம் வேணாம் கறாங்க. என் நாத்தி ஒரம்மா இருக்காங்க. நான் எது செஞ்சாலும் நூறு குத்தம் சொல்லாட்டி தூக்கம் வராது. 'அதென்ன ஓங்கூர்ல கல்யாணம்? என் தம்பி மகளுக்கு என்ன கொறச்சல்? நல்லா ஊர் மெச்சறாப்பல இங்க பட்டணத்துலதான் செய்யணும்' அப்படின்றாங்க. இந்தக் கதிரேசப் பய 'திருநீர்மலையில வச்சு தாலி கட்னா அது கல்யாணமில்லையா? என்னாத்துக்கு ஊரைக் கூட்டறது?' அப்படின்னு வக்கணை பேசறான். இதுக்கு நடுவுல பெரிய மருமவன் 'நான் வூட்டுக்கு மூத்த மருமவன். எனக்கு செய்ய வேண்டிய மரியாதி ரவ கொறஞ்சாலும் ஒங்க பொண்ணை ஒங்க கிட்டயே திருப்பி அனுப்பிடுவேன்' அப்படின்னு மீசைய முறுக்கறான். எனக்குத் தல சுத்துதும்மா! என்ன செய்யறதுன்னே தெரியலை..."

கடைசியில் அவள் எதுவுமே செய்யத் தேவையில்லாமல் போயிற்று. அந்தக் கல்யாணம் நடக்கவில்லை.

ஒருநாள் பூங்காவனம் வரவேண்டிய நேரத்தில் வேறொருத்தி வந்தாள். பூங்காவனத்தின் சிநேகிதி என்று சொன்னாள்.

"அம்மா, பூங்கா என்னை ஒரு பத்து நாள் அவளுக்குப் பர்த்தியா செய்யச் சொல்லியிருக்கா. அவங்க வூட்ல ஒரே ரகளை. ஊரிலேர்ந்து அவங்கண்ணனும் அண்ணியும் வந்திருக்காங்க. இந்த சரோப் பொண்ணும் கதிரேசுவும் அடிச்சுக்காத கொறைதான். என்னமோ சண்டை. 'ஒன்னை எனக்கேத்த எளிமையான பொண்ணுன்னு நெனச்சு ஏமாந்துட்டேன்' அப்படிங்கறான் கதிரேசு. மூஞ்சியெல்லாம் ஜிவுஜிவுன்னு செவந்து போகுது. இந்தப் பொண்ணானா 'சரிதான் போடா, ஒன்னை விட ஒசத்தியாய் நூறு மாப்பிள்ளைங்க எனக்குக் கெடைப்பாங்க'ன்னு தெனாவட்டா பேசுது. பூங்கா தலையில அடிச்சுகிட்டு அழுவுறா. 'பாவி பாவி'ன்னு மக தல முடியைப் பிடிச்சு உலுக்கறா. அது ஏதாச்சும் அசைஞ்சு குடுத்தாத்தானே? தொடப்பம் எங்கேம்மா இருக்கு?"

மறுபடியும் பூங்காவனம் வேலைக்கு வந்த போது பத்து நாட்களில் பாதியாய்க் குன்றி விட்டாற் போல் முகமும் உடம்பும் வாடி விட்டிருந்தன. அவள் அண்ணன், "எங்க பையனுக்கு கைக்கடங்கின பொண்ணாப் பாத்துக் கட்டி வைக்கறோம். நீ உன் மகளுக்கு எவனாச்சும் ராஜா வூட்ல சம்பந்தம் பண்ணு. உன் பெரிய மகளும் இப்படி ஏதோ பேசப் போகத்தான் அவ புருஷன் அடிச்சு விரட்டினானோ என்னமோ!" என்று தங்கையிடம் வெடித்து விட்டு மனைவியுடன் ஊர் திரும்பி விட்டானாம்.

"அப்படி என்னதாண்டி ஆச்சு?" என்று வாசுகி கேட்டாள்.

வேறொன்றுமில்லை. சரோஜா கதிரேசனிடம், "டீ.வி. விளம்பரத்துல ஒரு அய்யா பெண்ஜாதிகிட்ட தன் ஆசையைக் காட்ட வைர மோதிரம் வாங்கி அந்தம்மா விரல்ல போட்டு விடறாரே, அந்த மாதிரி நீயும் எனக்கு வைர மோதிரம் வாங்கிக் குடுத்தாத்தான் ஒன்னை கட்டிக்குவேன்" என்று சொன்னாளாம்!

கௌடேமாலா தெரியுமா? ஏதோ நிர்மலா, வைஜெயந்தி மாலா மாதிரி ஒரு பெண்ணின் பேருன்னு நினைச்சு வக்காதீங்க. அது ஒரு நாடு. அமெரிக்காவுக்கும் மெக்ஸிகோவுக்கும் கிழே உள்ள குட்டியூண்டு நாடு. ஜனநாயகக் குடியரசுதான். அங்கே ஒரு யுத்தம் நடந்துகிட்டிருக்கு! யுத்தம்னதும் ஏ.கே-47, அணு ஆயுதம் இதையெல்லாம் மனசிலே ஓட விட வேண்டாம். இது ஒரு நீதிமன்ற யுத்தம். தாய்மார்கள் சம்பந்தப்பட்டது.






கௌடெமாலாவில் பலர் படிப்பறிவு இல்லாதவங்க... அதே சமயம் அமெரிக்க கலாசாரம் அங்கே ஓரளவு காலூன்றத் தொடங்கிடுச்சு. "தாய், சேய் இருவருமே அழகாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க எங்கள் தயாரிப்புகளைப் பயன்படுத்துங்கள்"னு குழந்தை உணவுத் தயாரிப்பாளர்கள் விளம்பரப்படுத்த, அதில் மயங்கிப் போன பல தாய்மார்கள் தங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் கொடுப்பதை நிறுத்திட்டாங்க! குழந்தை உணவு டின்களில் அச்சிடப்பட்டிருந்த கொழுக் மொழுக் படங்களைப் பார்த்து "இது... இதத்தான் நான் எதிர்பார்த்தேன்"னு ஆசையா வாங்கித் தள்ளினாங்க. அதைக் கொடுத்தால்தான் அவங்க குழந்தையும் அப்படி புஷ்டியா வளரும்னு ஒரு நம்பிக்கை உண்டாயிடுச்சு!

பொறுத்துப் பார்த்தது அந்த நாட்டு அரசு. பிறகு பொறுத்தது போதும்னு பொங்கியெழுந்தது. "இனிமேல் பால் பவுடர் டின்னின் மேல் எந்தக் குழந்தையின் படத்தையும் அச்சிடக் கூடாதுன்னு சட்டம் பிறப்பிச்சது. அதுக்கப்புறம் இந்த மாதிரி குழந்தைகள் டின் உணவு விற்பனையில் சரிவு. எப்படியோ பல தாய்மார்கள் குழந்தைகளுக்கு மீண்டும் தாய்ப்பால் கொடுக்க ஆரம்பிச்சாங்க.

# பிராப்ளம்! பிராப்ளம்! பால் பவுடர் பிராப்ளம்!

சமீபத்தில் வந்திருக்கிறது ஒரு புது மாதிரி சிக்கல். அமெரிக்காவைச் சேர்ந்த கெர்பர் தயாரிப்பு நிறுவனம் தனது குழந்தை உணவுகளை கௌடமாலாவுக்கு ஏற்றுமதி செஞ்சது. இப்படி ஒரு கொடுக்கல் வாங்கலுக்கு அமெரிக்க நாட்டுடன் இந்த நாடு ஒப்பந்தம் செய்துக்கிட்டது உண்மைதான். ஆனால் கெர்பர் விஷயத்தில் வேறு ஒரு வில்லங்கம்!

தான் தயாரிக்கும் ஒவ்வொரு குழந்தை உணவு டின்னிலும் ஆரோக்கியமான ஒரு குழந்தையின் படத்தைத் தவறாமல் இடம் பெறச் செய்தது அந்த நிறுவனம். தங்கள் நாட்டு சட்டத்தை

காட்டி அந்த டின்கள் விற்பனைக்கு வர அனுமதியில்லைன்னு அரசு மறுத்தது.

"அதெப்படி? அந்தக் குழந்தையின் உருவம்தானே பதிவு செய்யப்பட்ட எங்கள் டிரேட் மார்க்கே! அப்படியிருக்க அதைப் பயன்படுத்தாமல் நாங்கள் இருக்க முடியுமா?"ன்னு கெர்பர் உறுமியது. நீதிமன்றத்தில் வழக்கு தொடுத்தது கிட்டத்தட்ட ஒரு வருடத்துக்கு கேஸ் இழுத்தடிக்க, அந்த நேரத்தில் கெர்பர் விற்பனைக்கு கௌடமாலாவின் தற்காலிகத் தடை தொடர்ந்தது.

●

**"நாங்க ஒண்ணும் எங்களுடைய குழந்தை உணவு தாய்ப் பாலுக்கு ஈடானதுன்னு சொல்லிக் கலியே."**

●

உடனே அமெரிக்க தூதரகத்திலிருந்து எல்லாம் பிரதிநிதிகள் கௌடமாலாவுக்கு வரத் தொடங்கிட்டாங்க. "கெர்பர் தயாரிப்புகளை அப்படியே அனுமதிக்கலேன்னா நம்ம நாடுகளுக்கிடையே நடைபெறும் வர்த்தக உறவே சீர்கெட்டு விடும்னு மறைமுகமா எச்சரிக்கை செய்தாங்க.

"நாங்க ஒண்ணும் எங்களுடைய குழந்தை உணவு தாய்ப்பாலுக்கு ஈடானதுன்னு சொல்லிக்கலியே. தவிர எங்களுடைய ஜாம், சாஸ் ஆகிய தயாரிப்புகளின் 'பாக்'கிலும் இதே குழந்தையின் படத்தைத்தானே பயன்படுத்துகிறோம்?" என்றெல்லாம் வாதாடிப் பார்த்தாங்க.

இந்த சமயத்தில்தான் 'ருத் அரங்கோ'ன்ற அமெரிக்க குழந்தை நல பெண் மருத்துவர் ஒருவர் 'சேம் சைட் கோல்' போட்டார். நேரே கௌடமாலாவுக்குப் போய் இரண்டு குழந்தை உணவு டின்களை காண்பித்து, "இந்த இரண்டில் எதை நீங்கள் வாங்குவீர்கள்?" என்று கேட்டதற்கு 70 சதவீத பெண்கள் ஆரோக்கியமான குழந்தையின் முகம் அச்சிடப்பட்ட குழந்தை உணவுக்கே தங்கள் வாக்கு என்றார்கள். காரணம் கேட்டதற்கு "அந்தக் குழந்தை ரொம்ப அழகு" என்றார்கள் பாமரத்தனமாக! இதைக் கொண்டு கௌடமாலாவின் சட்டம் ரொம்ப நியாயமானதுதான் அப்படின்னு அறிவிச்சிருக்கார் அந்த டாக்டர்!

இப்போதைக்கு கெர்பர் குழந்தை உணவுகளுக்கு கௌடமாலாவில் தடை. ஆனால் அமெரிக்க நிர்பந்தத்திற்குப் பணிந்து, அரசே சட்டத்தை மாற்றிக் கொள்ளும் சான்ஸும் இருக்குன்னு சில பத்திரிகைகள் ஜோஸ்யம் சொல்லிருக்கு. ○

— சுபி



இவருக்குப் பக்கத்தில் தொடரின் இயக்குநர் முனீர் அகமது. இவர்களுக்கு நடுவே தொகுப்பாளர். இந்த மூவர் காதுகளையும் இயர் ஃபோன் பொத்தியிருக்கிறது. அந்த இணைப்பின் கிளையாக

# நடிகர்களுக்கு மாதச் சம்பளம்!

ஏவி.எம். ஸ்டுடியோவில் நான்காவது படப்பிடிப்புத் தளம். வெளிச் சுவரில் 'நிம்பஸ் நிறுவனம், சக்தி தொடர் தயாரிப்பு. படப்பிடிப்புத் தளமும் அலுவலகமும்' என்று பெயின்ட் அடித்த பெயர்ப் பலகை ஆணியில் தொங்கியபடி அறிவிக்கிறது.

(சக்தி - சன் டி.வி. தொடர் – திங்கள் முதல் வெள்ளி வரை தினமும் - இரவு 9.30 முதல் 10 மணிவரை.)

தளத்தின் வாசலில் 'பார்வையாளர்களுக்கு அனுமதி இல்லை' என்று தமிழிலும் ஆங்கிலத்திலும் எச்சரிக்கை.

உள்ளே நுழைந்தால் இடது பக்கத்தில் ஒரு மரப்படிக்கட்டு. மேலே போனால் மரத்தால் ஆன ஓர் அறை. அங்கு வரிசையாக நான்கு டெலிவிஷன் மானிட்டர்கள். அவற்றிற்கு முன்னால் நீண்டு அகன்ற எலக்ட்ரானிக் சாதனம். அதில் வண்ணப் புள்ளிக் குறிப்புகளுடன் ஏகப்பட்ட விசைகள்.

ஒரு மானிட்டரில் பானுப்ரியா சிரித்துக் கொண்டிருக்கிறார். பக்கத்து மானிட்டரில் அஜய் ரத்னம் அந்தச் சிரிப்பை ரசித்துக் கொண்டிருக்கிறார்.

மானிட்டர்களுக்கு முன்னால் அமர்ந்தபடி பேனலில் உள்ள விசைகளை முன்னுக்கும் பின்னுக்குமாக தேவைக்கேற்றபடி தள்ளி மானிட்டர் காட்டும் உருவங்களை, அவற்றின் குரல்களை கன்ட்ரோல் செய்கிறார், ஒரு பொறியாளர்.

வளைந்து வாய்க்குப் பக்கத்தில் முத்தமிடாத குறையாக ஒரு சிறு மைக். இந்த மைக் மூலமாக உத்தரவு பிறப்பிக்கிறார் இயக்குநர். அதன் பலன் மானிட்டரில் தெரிகிறது. உத்தரவில் ஏதேனும் சந்தேகம் என்றால் இயர்ஃபோன் கேட்டுத் தெளிவு பெறுகிறது.

உத்தரவு எங்கே போகிறது?

கீழே, படப்பிடிப்புத் தளத்துக்கு.

அதாவது காமிரா விழுங்கும் காட்சிகளை இயக்குநர் அதன் அருகிலேயே நின்று பார்ப்பதில்லை. தனக்கென்று தனியாக ஒரு 'பரண் சாலை' அமைத்துக் கொண்டு அங்கிருந்துதான் இயக்குகிறார். ரிமோட் கன்ட்ரோலில் நடிகர், நடிகை, செட், ஒளிவிளக்குகள் எல்லாவற்றையும் அவர் மேலிருந்தபடிதான் பார்த்து, கேட்டு, ஆசீர்வாதம் பண்ணுகிறார். டி.வி. தொடர்களைப் பொறுத்தவரை இந்த ரிமோட் கன்ட்ரோல் சிஸ்டம் ஒரு புது முயற்சி!



• ஷூட்டிங் ஸ்பாட்

மூன்று காமிராக்கள் இயங்கும் அந்த செட் எப்படி இருக்கும்?

ஒரு முழு வீடே கீழ் தளத்தில். வரவேற்பு அறை, அலுவலக அறை, கூடம், படுக்கையறை, பூஜையறை, மாடிப் படிகள், மாடியறை என்று ஒரு முழு வீடே இருக்கிறது. மரச்சுவர் வண்ணங்கள், ஜன்னல்கள், திரைச் சீலைகள் எல்லாம் நிஜம் போலத் தோன்றும் மாயைகள். இருட்டான தளத்தில் சூரிய ஒளி காலைப் பொழுதை, ஒளிவிளக்குகள் தத்ரூபமாகக் காட்டுகின்றன. அந்த முழு வீட்டுக்கும் கூரை கிடையாது.

ஹாலில் ஒரு காட்சி. கதாபாத்திரங்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். மூன்று நிலைகளில் தனித்தனியாக காமிராக்கள் இயங்குகின்றன. இயற்கையான ஒளித் தோற்றத்தைப் பல விளக்குகள் சுற்றி நின்று, தொங்கிக் கொண்டும் ஏற்படுத்துகின்றன. ஏற்கனவே ஒத்திகை பார்க்கப்பட்ட காட்சி. ஒத்திகையின் போது உடனிருந்து காட்சி விளக்கம், நடிப்பு முறை என்று சொல்லிக் கொடுத்த இயக்குநர், ஒளிப்பதிவின் போது – 'டேக்'கின் போது – மானிட்டர் இயக்கத்தில் ஈடுபடுகிறார். படப்பிடிப்புத் தளத்தில் அவரது உதவியாளர்களும் காமிரா கலைஞர்களும் (ஒளிப்பதிவு இயக்குநரும் முனீர் அகமதுதான்) அவர் உத்தரவுகளைச் செயல்படுத்துகிறார்கள்.



• 'பரண்சாலையில் ரிமோட் கன்ட்ரோல் பணி

**560** பாகங்களுக்குத் திட்டமிடப்பட்டுள்ள சக்தி, இப்போது 115 பாகங்களைத் தாண்டிவிட்டது. கடந்த செப்டம்பர் மாதம் முதல் இன்றுவரை, தொடர்ந்து, ஒரு நாள் கூட விடாமல் (ஞாயிறு மட்டும் விடுமுறை) படப்பிடிப்பு. ஏவி.எம். ஸ்டுடியோ மட்டும் என்றில்லாமல் வெளிப்புறப்படப் பிடிப்பும் இந்தக் காலகட்டத்தில் அடங்கும். காலை 9 முதல் இரவு 9 மணி வரை, தினசரி 12 மணி நேரப்படப்பிடிப்பு!

சுமார் மூன்று வருடகால ஒளிபரப்புத் திட்டம் என்பதால் நடிகர்கள், தொழில் நுட்பக் கலைஞர்களுக்கு மாதச் சம்பளம். பணியாற்றி முடித்த மாதத்திற்கு அடுத்த மாதம் பத்தாம் தேதி வழங்கப்படுகிறது. அவர்கள் எல்லோரும் தொடர் முழுவதும் நிரந்தரமானவர்கள் என்பதால் இந்த ஏற்பாடு.

சினிமாவில் நடித்து இத்தொடரிலும் பங்கு பெறும் சில இளம் நட்சத்திரங்கள் பெரிய வித்தியாசத்தை இங்கே உணர்கிறார்கள். அதாவது, ஒரு நாளையப் படப்பிடிப்பில் தேநீர் இடைவேளை, சாப்பாட்டு நேரம் போக, இரு காட்சிகளுக்கிடையேயான இடைவெளி ரொம்ப ரொம்பக் குறைவு.



• நிரந்தர செட்

ஒரு நாளைக்குக் குறைந்த பட்சம் இரண்டு எபிசோட் ஒளிப்பதிவு என்ற கணக்கில் பணியாற்றுகிறார்கள்.

மூன்று மொழிகளில், சேர்ந்தாற்போல (தமிழ், தெலுங்கு, மலையாளம்) ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கும் ஒரே தொடர் இப்போதைக்கு 'சக்தி'தான்!

படங்கள், கட்டுரை : **பிரபுசங்கர்**

நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

எப்பவும் ஏதாவது குழப்பத்துலயே இருக்கற உங்களுக்கு, இப்ப குழப்பங்கள் தெளிஞ்சி, கறு கறுப்பாகற நேரம் வந்தாச்சு! உற்சாகமா வேலை பார்ப்பீங்க. ஏன்னா, உங்களோட நீண்ட நாள் ஆசை ஒண்ணு இப்ப நிறைவேறி, உங்களை சந்தோஷப்படுத்தும். சிலருக்கு, புராதனமான, முக்கியமான புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போகற வாய்ப்பு கிடைக்கும். பணப் பிரச்னை இருக்காது. பெண்களுக்கு, அவங்க நினைச்சது நடக்கற காலகட்டம். வீட்டுல ஏதாவது விசேஷங்கள் வரலாம். அதே சமயம் பெற்றோர் உடல் நலத்துல கொஞ்சம் அக்கறை செலுத்துங்க.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

கிட்டத்தட்ட எல்லா கிரகங்களும் உங்களுக்குச் சாதகமா இருக்குங்க. கவலையை விடுங்க. உங்க திட்டங்கள் நிச்சயம் தோற்காது. ஆனா, திட்டம் போடும் முன்னாடி கொஞ்சம் யோசிங்க. இந்த வாரம் எழுத்து, பத்திரிகை, கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு யோகமான காலகட்டம். புதிய வாய்ப்புகளுக்கும் பண வரவுக்கும் பஞ்சமில்லை. குடும்பத்துல ஏதாவது குழப்பங்கள் இருந்ததுன்னா, தீர்ந்துடும். அன்பா பேசுங்க. வேலைல கவனமா இருங்க. இப்ப உங்களுக்குச் சில அதிர்ஷ்ட வாய்ப்புகள் வேற வரப் போவுது. சிலருக்குப் பதவி உயர்வு கிடைக்கலாம்!



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

ஒரு பயணம் மூலமா, அபாரமான நன்மைகள் கூடி வரப்போகுது. உத்தியோக ரீதில உங்க நிலை உயர்ந்து, சுத்தி இருக்கறவங்க 'ஆ'ன்னு வாய் பிளக்கற அளவுக்கு உசரப் போறீங்க. இந்த வாரம் மருத்துவ, ரசாயனத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு செமை யோகம். வெளிநாடு சான்ஸ், ஷேர் வெற்றி இப்படி மகிழ்ச்சில திக்குமுக்காடுவீங்க. வீட்டுல, மனஸ்தாபங்களுக்கு இடம் கொடுக்காதீங்க. அதே மாதிரி டூ வீலர்ல போகும்போது கவனம் வேணும். சிறு விபத்துக்கள் நேரலாம். சில பேருக்கு வீடு, மனை வாங்கற யோகம் இருக்கும்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

கிரக நிலை சாதகமா இல்லை. பேச்சுலயும் செயல்லயும் நிதானம் அவசியம். நீங்க சரியா செய்யற காரியங்கள் கூட காலை வாரி விடும். குறிப்பா இயந்திரப்பணியாளர்கள் படு விழிப்பா இருக்கணும். யார்கிட்டேயும் அநாவசிய வம்பு வேணாம். எதிரிகள் பலமா இருக்காங்க. பணம் வர்றதும் தெரியாம போறதும் தெரியாம செலவு எக்கச்சக்கமா இருக்கும். மருத்துவச் செலவுகளும் வரலாம். பள்ளிப் பசங்க, ரொம்ப கவனமா படிச்சி, பரீட்சை எழுதணும். ஞாபக மறதிக்கு ஆளாகி அவதிப்படலாம். எதுக்கும் ஆஞ்சநேயரை சப்போர்ட்டுக்குக் கூப்பிட்டுக்குங்க.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

பிரச்னைன்னு பெரிசா ஒண்ணும் இல்லைன்னாலும் வேலைல கவனமா இருங்க. கூட்டுத் தொழில் பண்றவங்க பார்ட்னர் மேல ஒரு கண் இருக்கட்டும். யாருக்கும் வாக்குறுதி கொடுக்காதீங்க. ஷ்யூரிடி கையெழுத்தும் போடாதீங்க. வார ஆரம்பத்துல, சில நல்ல வாய்ப்புகள் இளைஞர்களுக்கு வரலாம். ஆனா வெள்ளிக் கிழமைக்கப்புறம் கிரக சஞ்சாரம் காரணமா, குழப்பமான மன நிலை இருக்கும். கோபதாபங்களுக்கு இடம் கொடுக்காதீங்க. சிலருக்கு வயிற்று வலி மாதிரி லேசான உடல் உபாதைகள் இருக்கலாம்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

இது காதலர்களின் உல்லாச வாரம். சும்மா ஜாலியா என்சாய் பண்ணுவீங்க. சின்னச் சின்ன ஊடலும் கூடலுமா பொழுது இனிமையா போகும். திருமணமானவங்களுக்குக் குழந்தைப் பேறு கிடைக்கலாம். உத்யோகஸ்தர்களுக்குச் சில பிரச்னைகள் மேலதிகாரிகள் மூலம் வரலாம். பயணத்தின்போது எச்சரிக்கையா இருங்க. பண விஷயத்துலயும் கவனம் அவசியம். பிக்பாக்கெட் ஜாக்கிரதை! பெண்களுக்கு, ஷாப்பிங் யோகம் இருக்கு! புதிய பொருட்கள் வாங்குவீங்க. வீட்டுல சின்ன சண்டை சச்சரவு வரலாம். எதையும் பெரிசு படுத்தாதீங்க.

**ஏப்ரல் 1 முதல் 7வரை**



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

சிக்கலே இல்லாத வாரம். தொட்டதெல்லாம் வெற்றிதான். பேரும் புகழும் கூடும். குறிப்பா, கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு பணப் பிரச்னை இருக்காது. துணிச்சலும் தன்னம்பிக்கையும் ஓங்கி இருக்கும். வீட்டுல ஏதாவது சுப காரியங்களுக்கு அடி போடுவீங்க. அது உங்க காதல் கனியற விஷயமாவும் இருக்கலாம்! வெளிநாட்டுத் தொடர்பு உள்ளவங்களுக்கு, ஏதாவது முக்கிய செய்திகள் வரும். வயசானவங்களுக்கு, கோயில் குளம்னு சுத்தற யோகம் இருக்கு. மொத்தத்துல ஜாலியான வாரம்!



**விருச்சிகம்** : *(விசாகம் 4- ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

பைபாஸ் ரூட்டுல யோசிக்கற வேலையை முதல்ல விடுங்க. உங்களைச் சுத்தி இருக்கறவங்க, உங்க நலன்ல அக்கறையோட இருக்காங்க. உங்களுக்காக எதுவும் செய்வாங்க. ஏன் பின்ன குழப்பம்? இந்த வாரம் உடல் ஆரோக்கியமும் பண ஆரோக்கியமும் மேம்படும். எந்தக் காரியமும் வெற்றிதான்! உங்க பசங்க மூலம் மகிழுவீங்க. வீட்டுல பிரச்னைகள் இல்லாம சுமுகமான உறவு நிலை தொடரும். வீடு, மனை வாங்கற போது யோசிச்சி செயல்படுங்க. எதுலயும் அகலக் கால் மட்டும் வெச்சிடாதீங்க!



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

மனக் குழப்பம், கடன், உடல் நலக் குறைவு இப்படி சிக்கல்கள் இருந்தாலும் சமாளிப்பீங்க. காரணம் கேதுவோட கவனம் உங்க பக்கம் இருக்கு. ஞான மார்க்கத்துல மனசு திரும்பும். அது நல்லதுக்குத்தான். முக்கியமான முடிவுகள் எடுக்கும்போது நாலு பேரை கன்ஸல்ட் பண்ணுங்க. பெற்றோரை கவனிங்க. ஃபாரின் போற ஐடியா இருந்தா, அதைக் கொஞ்சம் தள்ளிப் போடுங்க. இப்ப உங்களுக்கு முக்கியத் தேவை – உங்க குடும்பத்து மகிழ்ச்சி! நீங்க மனசு வைச்சா, வீட்டுப் பிரச்னைகளை சுலபமா தீர்க்கலாம்!



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

மனசுல நம்பிக்கையும் உற்சாகமும் பொங்குமே? விட்டுடாதீங்க. சுடசுடன்னு உங்க எதிர்காலத் திட்டங்களுக்கு வடிவம் கொடுக்க ஆரம்பிங்க. நண்பர்கள், உறவினர்கள் உதவியோட, உங்க புது முயற்சிகளைத் தொடங்க இது சரியான நேரம். சிலர் ஃபாரின் போகவாய்ப்பு இருக்கு. குடும்பத்துல சில சுப நிகழ்ச்சிகள் நடக்கலாம். கணிதம், கம்ப்யூட்டர், எழுத்துத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றிகள் சேரும் வாரம் இது. சில பயணங்களை மட்டும் தவிர்க்க முடியாது. பெரும்பாலும் உபயோகமில்லாத ஊர் சுற்றலா அது இருக்கும்.



ரிஷப ராசிக்காரரான டைட்டானிக் ஹீரோவுக்கு எல்லா கிரகங்களும் சாதகமா இருக்குதாம். புதிய வாய்ப்புகள் வந்து கதவைத் தட்டப் போவுது! (காதல் மன்னன் ஓட்ட ஆரம்பிச்சே, இருக்காதா பின்னே?)



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

அன்பை மூலதனமா கொண்ட கும்பராசி நேயர்களுக்கு இப்ப நேரம் கொஞ்சம் சரியில்லை. தேவையில்லாத குழப்பம், பயம். ரைட்டா? உங்களோட பிரச்னைகள் எதுவுமே பெரிசு இல்லைன்னா, நம்புங்க. சுத்தி இருக்கறவங்க உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுத்து நடந்தீங்கன்னா, எல்லாரும் உங்களுக்கு உதவுவாங்க. கோபதாபம் வேணாம். அன்பா இருங்க. சுமுகமா நடந்துக்கங்க. இந்த வாரம் உங்களோட ஏதாவது ஒரு லட்சியம் நிறைவேறும். அது, புது வீடு வாங்கறதாகக் கூட இருக்கலாம்.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

ஆறுல ராகு. ஸோ, பிரச்னை பெரிசா இருக்காது. உங்க வேலைகள் ஜரூரா நடந்துட்டிருக்கும். கவனமா இருந்தீங்கன்னா, தொழில்ல நஷ்டம் இருக்காது. சிலருக்குப் புத்திர பாக்கியம் கிடைக்கும். வேற சிலருக்கு திடீர் பணவரவு இருக்கும். (சம்பளம் தவிர) உடல் நலத்துல கவனமா இருங்க. குறிப்பா நடு வயசுக்காரங்களுக்கு எதிர்பாராத உடல் உபாதைகள் வரலாம். சிலர் சிறு விபத்துக்களுக்கு ஆளாகலாம். கவனம்! இந்த வாரம் நீங்க எதிர் பார்க்காத ஒரு உறவினர் உங்க வீட்டுக்கு வந்து மகிழ்ச்சில ஆழ்த்துவாங்க!



# காதல் மன்னன்

**கா**த்திருந்தவள் பெண் டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போவதை ரசிக மகாஜனங்களை எப்படி ஏற்கச் செய்வது?

எதையுமே எண்ணிப் பார்த்து, ஒரு முடிவுக்கு வர விடாத ராட்சஸ வேகத் திரைக் கதையைக் கொண்டு செய்யலாம். டைரக்டரின் கதை சொல்கிற வேகத்தை அப்படியே உள்வாங்கிக் கொண்டு, ஸ்பீட் ப்ரேக்கர் போடாமல் அனகோண்டா சீற்றத்தில் ஃப்ரேம்களை நகர்த்தும் எடிட்டிங்கில் செய்யலாம். ஒரு விநாடி கூட அலுப்பூட்டாத, கதையோடு கல்யாணம் பண்ணிக் கொண்ட காமெடி மூலம் செய்யலாம்.

பாலசந்தரின் மூன்று சிஷ்யர்கள் (டைரக்டர் சரண், காமெடி விவேக், எடிட்டர்கள் கணேஷ்-குமார்) இணைந்து தந்திருக்கும் படு ஜாலி படம் இது. ஆகவே, கரண், காரில் டைம் பாம் வைத்துக் கொண்டு (அப்போதுதான் சாதிக்க முடியுமாம்) ரேஸுக்குப் போகிற அபத்தத்தையும் அநாவசியமான ஒரு சண்டை, ஒரு டப்-குத்துப் பாடலையும் மன்னித்துவிட்டு மேலே போகலாம்.

திருமணம் நிச்சயமாகிவிட்ட பெண். முன்னதாகக் காதல் திருமணமாகி விலகிப்போன அவளது அக்காவிடமிருந்து ஒரு திருட்டுக் கடிதம் (அப்பா கோபக்காரராச்சே!) கொண்டு வருகிற அஜீத். வந்த இடத்தில் திருட்டுக்காதல் வந்துவிட, மரபுகளை மீறுவது பற்றிய குழப்பத்தில் அஜீத்தும் புதுமுகம் மானுவும் தவிப்பதெல்லாம் ஆக்ரோஷமான கவிதை. (மானு அஸ்ஸாமிலிருந்து பறித்து வரப்பட்ட டீ இலை. ஆகவே படு ஃப்ரெஷ்!)

மலர்கிற, வளர்கிற காதலையெல்லாம் வளவளத்தாமல் வெகு ஷார்ப்பாக மிகச் சில ஷாட்களில் காட்டிவிட்டுக் கதையை அடுத்தது, அடுத்தது என்று பதைக்கப் பதைக்கக் கொண்டு போகிறார் சரண்.

ஊறுகாய் மாதிரி ஆங்காங்கே சின்னச் சின்ன அழகான பாடல்கள். விளம்பரம் செய்த வண்ணமே, வரிக்கு வரி புரிகின்றன.

நியாயப்படி ஹீரோ அஜீத்தான் என்றாலும், நடிப்பில் அவரை விழுங்கி ஏப்பம் விடுகிறவர் கரண். ஒரு முரட்டு கார் ரேஸ் வெறியராக அறிமுகமாகி, சட்டென்று காணாமல் போய் இடைவேளைக்குப் பிறகு வந்தாலும், படம் முடிந்த பின்னரும் அவரது ஆக்ரோஷம்தான் ஞாபகத்தை ஆக்கிரமிக்கிறது.

படத்தில் கொஞ்சம் ஓவராகத் தெரிவது இரண்டு விஷயங்கள். கரணின் அம்மாவின் மாதர் சங்க கோஷ்டிகள் நடத்தும் ஓயாத கொக்கரிப்புப் படுத்தல். (காது வலிக்கிறது) இரண்டாவது, மெஸ் விஸ்வநாதனாக வரும் மெல்லிசை மன்னரின் பழைய பாட்டுக் கச்சேரி.

ஒரு புதுமுயற்சியாக எம்.எஸ்.வியை நடிக்க வைத்து, சில நகைச்சுவைக் காட்சிகளாகப் பண்ணியிருக்கிறார்கள். பெரியவர் முகம் நடிக்க ஒத்துழைக்கவில்லை.

எக்கச்சக்க சண்டைகள், விரச நடனம், இரட்டை அர்த்தங்கள், செண்டிமெண்ட் சள்ளைகள் இல்லாமல் நீட்டாக ஒரு பொழுது போக்குப் படம்.

குரு பெயரைக் காப்பாற்றியிருக்கிறார் சரண். ●

- ஆர்.பி.ஆர்.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

